உ

கடவுள்துணை.

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார்

அருளிச்செய்த

# திருக்குறள் மூலமும்

# மணக்குடவர் உரையும்.

இவை

ஆசிரியர் ஸ்ரீமத் - கோ. வடிவேலுசெட்டியார் அவர்கள்

மாணவர்களுள் ஒருவராகிய

கா - பொன்னுசாமி நாட்டார் அவர்களால்

மேற்படி ஆசிரியர் முன்னிலையில் பரிசோதித்துச் செப்பஞ் செய்து,



சென்னை - திருவல்லிக்கேணி

நோபில் அச்சியந்திர சாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

காபிரைட்] 1925. [ரூபாய் 2 0 0

திருவள்ளுவ நாயனர்.

# விஷய அட்டவணை.

பக்கம்

ட

# முகவுரை.

"ஓதற் கெளிதா யுணர்தற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி".

ஆகிய திருக்குறள் முப்பால், உத்தரவேதம், தெய்வநூல், பொய்யாமொழி, வாயுறைவாழ்த்து, தமிழ்மறை, பொதுமறை, திருவள்ளுவப்பயன் என்றற்றொடக்கத்துப் பெயர்களால் விளக்கமுற்று, எப்பாலவரும் இயையும் பொருளை உணர்த்துவதா யிருப்பதென்பது மிகுபிரசித்தமாம்; இதற்குத் தருமர், மணக்குடவர், தாமத்தர், நச்சர், பரிமேலழகர், பருதி, திருமலையர், மல்லர், கவிப்பெருமாள், காளிங்கர் என்னும் பதின்மர் உரை யெழுதியிருப்பதும் மிகு பிரசித்தமாம்; இப்பதின்மர் உரையுள் பரிமேலழகருரை மாத்திரம் அச்சுவாகனமேறி நிலவுகின்றதென்பதும் மிகுபிரசித்தமாம். ஏனைய உரைகளுள் மணக்குடவருரை சென்னை அரசாங்கத்தாரது கையெழுத்துப் புத்தகசாலையில் கிடைத்தமையின், அதனைப் படித்துணர வேண்டுமென்னும் அவாவினால், பலகால் பரிமேலழகருரையோடு எனது ஆசிரியர் ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் முன்னிலையில் பரிசோதித்துப்பார்த்துச் செப்பஞ் செய்தேன்; செப்பஞ்செய்த பின் வெளியிடும் விருப்பமுடையவனுமானேன். பரிமேலழகருரையோடு கூடிய திருக்குறள் மூலத்திற்கும், மணக்குடவருரையோடுகூடிய திருக்குறள் மூலத்திற்கும் பல இடங்களில் வேற்றுமை இருக்கின்றது. அவ்வேற்றுமையால் அவ்

விடங்களில் அவ்விருவர் உரைகளும் வேற்றுமையுடையனவாய் இருக்கின்றன. அம்மூல வேற்றுமையும், உரைவேற்றுமையும் திருக்குறளுரை ஆராய்ச்சி செய்வார்க்குப் பெரிதும் பயன்படுவனவாம்; அப்பயன்படுத லொன்றையே நோக்கி இவ்வுரையை அச்சுவாகனமேற்றப் பெரிதும் முயற்சியுடையவனானேன். இம் மணக்குடவருரை பரிமேலழகருரைக்குச் சிற்சிலவகையால் காரணமாயிருந்ததென்பது மணக்குடவருரையைப் பரிமேலழகருரையோடு ஒப்பநோக்கி யாராய்ந் துணர்வார்க்கு நன்கு விளங்குவதாம். மணக்குடவருரை பரிமேலழகருரையை நோக்க அளவால் சிறியதாயினும், அதன் மாட்சி எவ்வகையாலும் சிறியதன்றாம். இவ்வுரையைப் பரிமேலழகர் உரையைப்போலத் தமிழ்ப்பாஷாபிமானமுடையார் யாவரும் படித்தல் வேண்டுமென்று எனது ஆசிரியர் கூறுவதுண்டு; அதுவும், சென்னை, முத்தியாலுபேட்டை, மல்லிகேசுவரர் ஆலயத்தை யடுத்துள்ள உமா மகேசுவரர் தமிழ்வேத பாராயண சபையில் புதன்கிழமை தோறும் ஆசிரியரவர்கள் நடத்தும் பரிமேலழகருரையோடு கூடிய திருக்குறட் பாடத்திற்குச்சென்று பாடங்



கேட்டுவருவதும், இவ்வுரையை அச்சிடுவதற்கு ஒரு காரணமாயின. இவ்வுரையின் அரும்பதங்களுக்கு உரையும், அவ்வுரையின் இலக்கண விசேடங்களுக்கு விளக்கமும், மேற்கோள்களுக்கு விளக்கமும் திருக்குறள் ஆராய்ச்சி செய்ய முயல்கின்றவர்க்கு உபயோகமாமாறு விளக்கமாக எழுதியிருக்கின்றேன். இவ்வுரை நடை யாவர்க்கும் விளக்கமாம்படி அதனது சந்தியைப் பெரும்பான்மையும் பிரித்து எழுதியிருக்கின்றேன்.

இந்த மணக்குடவருரையுள் முப்பத்திரண்டு திருக்குறளுக்கு எனக்குக் கிடைத்த கையெழுத்துப் புத்தகத்தில் உரை எழுதப்படவில்லை; அவ்வுரை அழிந்துவிட்டதுபோலும்! அம்முப்பத்திரண்டு திருக்குறளுக்கும் (*) இக்குறியிட்டுப் பரிமேலழகர் உரையை அவ்வுரைக்குப் பிரதியாக அச்சிட்டிருக்கின்றேன். இம்மணக்குடவருரை பரிமேலழகர் தமது கருத்துக்கு இயையாவிடத்து மறுத்திருக்கும் உரைகளுள் ஒன்றாயிருத்தலின், இது பரிமேலழகருரைக்கு முற்பட்டதாமென்பது சொல்லாமலே விளங்குவதாம். மணக்குடவரது ஊர், சாதி, மதம் முதலியவற்றுள் எதனையும் அறிவதற்கு எச்சாதனமும் கிடைக்கவில்லை; அதனால் அவரது சரித்திரத்தை எழுதுவது முடியாததாயிற்று.

திருக்குறள் முப்பாலினுள் அறத்துப்பாலைப் பாயிரம் - இல்லறவியல் - துறவறவியல்-ஊழ் என நான்கு வகையாகவும், பொருட்பாலை அரசியல் - அமைச்சியல்-பொருளியல்-நட்பியல் - துன்பவியல் - குடியியல் என ஆறுவகையாகவும்,

காமத்துப்பாலைக் களவியல் - கற்பியல் என இரண்டுவகையாகவும் இவ்வுரையாசிரியர் பிரித்திருக்கின்றனர்; கற்பியல், களவியல் என இரண்டு வகையாகப் பிரித்த காமத்துப்பாலின் 25 அதிகாரங்களையும் (1) கூடலும் கூடல் நிமித்தமும், (2) பிரிந்து கூடலும் அதற்கு நிமித்தமும், (3) ஊடிக்கூடலும், அதற்கு நிமித்தமும் என மூன்று வகையாகவும் பிரித்திருக்கின்றனர். இவர் பிரித்த இவ்வகையினாலே பால்வகையால் மூன்றாயுள்ள திருக்குறள் இயல்வகையால் பன்னிரண்டு பகுதியினதாம். இதனாலே திருக்குறள் என்னுந்தொகை பாலால் மூன்றுவகையினதாம்; இயலால் பன்னிரண்டு விரியினதாம். இம்முறையை நன்னூல் விருத்தியுரைகாரர் எழுத்தியலில் எழுத்தென்பது தொகை யென்றும், முதல் சார்பு என்பன அதன் வகை என்றும், உயிரெழுத்து முப்பதென்பது முதலெழுத்தின் விரி யென்றும், சார்பெழுத்துப் பத்தென்பது சார்பெழுத்தின் விரியென்றுங் கூறியவாற்றானு மறிக.

இங்ஙனமன்றித் திருக்குறளின் பாயிரம் தொகையாம்; (பாயிரம் ஒழிந்த) அறத்துப்பால் அதன் வகையாம்; பொருட்பாலும் காமத்துப்பாலும் அதன் விரியா மென்று உரைப்பதும் பொருந்தும். இத்தொகை வகை விரிகளின் அமைப்பு, திருக்குறளின் அதிகார அடைவை யூன்றி நோக்குவார்க்கு நன்கு விளங்குவதாம்.

"பாயிரத் திலக்கணம் பகருங் காலை
நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி
ஆசிரியத் தானும் வெண்பா வானும்
மருவிய வகையால் நுவறல் வேண்டும்"



என்னும் சூத்திரவிதியின்படி திருக்குறளின் பாயிரம் அமைந்திருக்கின்றது.

திருக்குறள் முப்பாலினுள் (பாயிரம் ஒழிந்த) அறத்துப்பால் கடவுள் வாழ்த்தில் அடக்கமாம்; பொருட்பால் வான்சிறப்பில் அடக்கமாம்; காமத்துப்பால் நீத்தார் பெருமையில் அடக்கமாம். கடவுள் வாழ்த்தினும் மிக்க அறமில்லை; மழையினும் சிறந்த பொருளில்லை; நீத்தார்க்குண்டாகும் இன்பத்தினும் சிறந்த இன்பமில்லை என்பதுணர்வார்க்கு அறமனைத்தும் கடவுள் வாழ்த்திலும், பொருளனைத்தும் மழையிலும், இன்பமனைத்தும் நீத்தார்க்குண்டாகும் இன்பத்திலும் அடங்குமென்பது செவ்விதின் விளங்குவதாம். 'நூனுதல் பொருளைத் தன்னகத் தடக்கி' என்னும் விதிப்படி அறத்துப்பால் கடவுள் வாழ்த்திலும், பொருட்பால் வான் சிறப்பிலும், காமத்துப்பால் நீத்தார் பெருமையிலும் அடங்குவனவாக, அறன்வலியுறுத்தல் கூறியது எற்றுக்கென்றோர் ஆசங்கை நிகழ்தல் கூடும்; அவ்வாசங்கையை ஒழித்தற் பொருட்டு ஆசிரியர் திருவள்ளுவனார்

கடவுள் வாழ்த்துள் அடங்கும் அறத்தை இன்றியமையாது மேற்கொண்டு ஒழுகு கின்றவர்க்கே இம்மைப்பயனும், மறுமைப்பயனும், வீடும் உண்டாமென்ப துணர்த்த அறன்வலியுறுத்தலென்னும் அதிகாரத்தைப் பாயிரத்தின் இறுதியில் கூறினரென்க.

இப்புத்தகத்தை யான் அச்சிடுவதற்கு முன்னும், அச்சிடுங்காலத்திலும் என்னுடனிருந்து உரைப்பொருளை விளக்கிக்கூறி எனக்கு உதவி செய்த எனது ஆசிரியர் ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியார் அவர்களது நன்றி எஞ்ஞான்றும் என் சித்தத்துள் நிலைபெறுவதற் குரியதாம்.

இப்புத்தகத்தை யான் அச்சிடுங்காலத்துச் சென்னை - கோமளேசுவரன் பேட்டை, ஸ்ரீசாது இரத்தினவேதாந்த சபையினருள் ஒருவரும், எனது ஆப்தரு மாகிய ஸ்ரீமத் ம. ஷண்முக முதலியார் அவர்களும், சென்னை இந்துதியலாஜி கல் ஐஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமத் ச. கந்தசாமி முதலியார் அவர்களும் என்னுடனிருந்து எனக்குச்செய்த உதவி அளவிறந்ததாம்; அஃது எக்காலத் தும் மறத்தற்குரிய தன்றாம்.

இந்நூலைச் செப்பமாக அச்சிட்டுத்தந்த சென்னை - திருவல்லிக்கேணி கோபில் அச்சியந்திரசாலை அதிபரின் நன்றியும் மறக்கற்பால தன்றாம்.

இந்நூலின்கண் பிரமப்பிரமாதங்களால் தவறு நேரிட்டிருத்தல்கூடும்; அதனை வித்வச்சிரோமணிகள் தெரிவிப்பாராயின், அது மறுபதிப்புப் புத்தகத் தைச் சுத்தமாக அச்சிடுவதற்குப் பேருபகாரமாம்.

இப்புத்தகத்தை யான் அச்சிடுமாறு எனது சித்தத்தின்கண் இருந்து என்னை ஏவிவந்த ஸ்ரீ நடராஜப்பிரபு இந்நூல் எஞ்ஞான்றும் நிலைபெறுமாறுங் கருணை புரிவாராக. இதில் பிழையுளதாயின், உலகம் பொறுக்க.

கா. பொன்னுசாமி நாட்டார்.

நெம்பர் 6. வெங்கிடேச கிராமணி தெரு, (1925)
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை. 2—4—25.

தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் திருவடி வாழ்க.

# INTRODUCTION.

---

No book in Tamil is so popular and is held in such high esteem as our Thirukural. The reasons are not far to seek. The

book is both comprehensive in its scope and universal in its appeal. Probably THIRUVALLUVAR is the only sage who had the ambition and the capacity to write on all the Purusharthams excepting Moksha, whereas Manu and other so called greater lights whether they had the capacity or not, dared not attempt such an ambitious task but were content to illumine one of these. The secret of its success lies in its universality. The sage of Mylapore is not a mere Polonius playing in the shallow waters of platitude but a great moralist, politician, poet and Seer diving deep into the very heart of the Universe, going direct to the eternal verities of life and unchanging truths of the world, leaving aside creeds and dogmas, customs and conventions. He grapples hard and solves aright the mysterious problem of life and death. His vision was telescopic rather than microscopic and he was gifted with an enviable sense of proportion and unrivalled grasp of the essential, denied to so many other moralists of the world which saved him from equating eternal truths with passing customs. In short his is a work for all times and climes. Hence it is no paradox to say that the KURAL though as old as the Christian era is as fresh as the morning breeze. Jains and Buddhists, Christians and Hindus, Theists and Atheists hail him as their poet and philosopher. He is furthermore the greatest idealist and at the same time the greatest practical man of the world. The life he plans for us is an ideal one but at the same time he throws out precious suggestions to help us live that life in the work a day world of ours.

Brevity is the life of the KURAL. This gives point and force

to its statements and thus arrests the attention of its reader leaving on the readers' mind an indelible impression. True it is that the Sanskrit sutra literature had become famous for brevity. The Sutras however are very much like algebraical formulas complex and confused ; it is brevity with a vengeance. In the Kural on the other hand, brevity is the hand maid of lucidity. The sutras are in prose and that too in very bad prose giving us terrifying lessons in



intellectual gymnasium. The kural, however, is every word of it a poetry, a work of art and as such a joy for ever.

Therefore if brevity is its life poetry is its very soul. The apt similes work not merely by the law of association of ideas but also by the more wonderful law of association of emotions. They not only make the statements vivid but kindle in us the right kind of emotion necessary to appreciate the truth. Thiruvalluvar is revealed to us in all his glory and grandeur as a great poet and dramatist in the third part of his work KAMATHU PAL. VIRASOLIAM takes almost all its illustrations for explaining its principles on rhetoric from Thirukural. Thiruvalluvar is therefore a great master of practical rhetoric though probably he was unconcious of it himself.

Such an important work as this especially because of its brevity must be interpreted aright to be well understood by all. Many have been the commentators of whom ten have become

immortal. Unfortunately till now the commentary of PARIMELALAGAR alone has seen the light of day and the editor of the present work is bringing to light another commentary that of MANAKKUDAVAR. Not only will this commentary help us to take a step forward in the textual and historical criticism of the Kural but will also enable us "to estimate aright the original contributions of PARIMELALAGAR. Where the other eight commentaries are Heaven alone knows. Something however is better than nothing and let us heartily thank the editor for having rescued this at least from the clutches of oblivion and given us a scholarly edition of the work. Only those who have seen the manuscripts at least once in their life, can appreciate the scholarship patience labour and time involved in editing a work like the one now published.

Tamilagam,
Chintadripet,
Madras, 26-3-1925.

T. P. MEENAKSHI SUNDARAN,
M.A., B.L.,
Councillor, Corporation of Madras.

உ.

திருக்குறள்

# பாலியல் அதிகார அட்டவணை.

## 1 - அறத்துப்பால் (38)

### 1. பாயிரம். (4)

## 2. இல்லறவியல்.

| | |
|---|---|
| 9 | 24 |
| 10 | 26 |
| 11 | 28 |
| 12 | 30 |
| 13 | 31 |
| 14 | 33 |
| 15 | 35 |
| 16 | 37 |
| 17 | 39 |
| 18 | 41 |

## 3. துறவறவியல்.

(13)

4. ஊழ் (1)



## 2. பொருட்பால். (70)

### 1. அரசியல்.

**(25).**

## 2. அமைச்சியல்.

## 3. பொருளியல். (5)



## 4. நட்பியல். (5)

## 5. துன்பவியல்.

## 6. குடியியல்.

| | |
|---|---|
| 4 | 168 |
| 5 | 170 |
| 6 | 172 |
| 7 | 174 |
| 8 | 176 |
| 9 | 178 |
| 10 | 180 |
| 11 | 182 |
| 12 | 183 |

**(13)**

11 204

12 206

13 208

11

பாலியல் அதிகார அட்டவணை.

3. காமத்துப்பால். (25)

## 1. களவியல். (7)

109 தகையணங்குறுத்தல்
110 குறிப்பறிதல்
111 புணர்ச்சிமகிழ்தல்
112 நலம்புனைந்துரைத்தல்
113 காதற்சிறப்புரைத்தல்
114 நாணுத்துறவுரைத்தல்
115 அலரறிவுறுத்தல்

## 2. கற்பியல். (18).

*பால் என்பதன் பொருள் பகுப்பாம்; அதிகாரம் என்பதன்பொருள் அதிகரித்தலாம். சேனாவரையர் அதிகாரமென்பதற்குப்பொருள் ஒருபொருள் நுதலிவரும் பல ஓத்தினது தொகுதியாமென்பர்.*

# திருவள்ளுவர் வரலாறு.

---

## நேரிசை யாசிரியப்பா.

நயமிகு புகழ்ச்சோ ணாட்டுளோ ரந்தண
னுயர்மனைக் கிழத்தியங் குயிர்த்தவோர் மைந்தன்
னியாணர்சால் பகவ னெனப்பெய ரீந்துபின்
கோணிலை நாணிலை குறித்தசா தகத்தாற்
புன்குல மாதுதோள் புணருமென் றோர்ந்திவ்
தென்குலக் கிழுக்கதா மெனவுளங் கழீஇய
பீழையி னேடுறீஇப் பின்னொரு சிலநாள்
மாழையுண் கண்ணியை மதலையைத் தணந்து
கோணைநீர்க் கங்கையிற் குடைகுவா னேகினன்
பேணுமச் சிறுவனும் பிரம சாரியமேற்
றுருவா வருமறை யோதிநூ லுணர்ச்சியின்
மூவா கலத்தினம் மூவாட் டையனு
யெந்தைநிற் பிரிதாற் கேதுசெய் வனெனத்தாய்
புந்திநைந் துரைசெயப் பொருண்வட புலந்துரீஇப்
போதரு நெறியிடைப் புலையர்கள் கருவூ
ராதியென் பெயரின ளரும்பெறற் செல்வியள்
பொற்கொடி போன்றெதிர் புகமருண் டினிய
சொற்கொடு புதுநலந் தோய்ந்துணர்ந் ததன்பி
னிச்செய றகாதென வெண்ணிவிட் டேகுழி
மெய்ச்செயற் கற்பினள் விடாதுடன் றொடரக்
கண்டுருத் தொருசிலை கைக்கொடு நுதன்மிசைப்
புண்பட வெறிந்தவட் போக்குபு விரைந்துபோய்த்
திகழ்பா கீரதி தீரமே லுளபதி
யகமெலாந் தேடியு மத்தனைக் கண்டிலா
தாங்கையிற் றனுதிநா டடைகுவான் மீண்டு
வரும்பொழு திரவவன் மருவறச் சாலையிற்
றற்பிரி வாற்றாத் தளர்ச்சியோ டேர்தொழு
மற்பக னேடுறு மாதிதற் காணு

வுற்றடி வணங்கலு முயர்மறை யோனவ



## திருவள்ளுவர் வரலாறு.

னெற்றியிற் சிலைவடு நேரி னோக்கிமுன்
பிணங்குமா தெனத்தெளிந் திவண்வா வென்னென
வணங்குநிற் பிரிந்துறி னுவிவா ழேனென
லீன்றிடு மகவெலா மீன்றுழி யேவிடுத்
தூன்றிய துணிபொடு முடன்வர வல்லைமே ல்
உருகென வண்ணலட் மடவர லியைதலா
லிருவரூர் தலந்தொறு மியங்குகா லங்களி
னுப்பை யௌவை யுறுவை வள்ளியென்
றிப்புவி போற்றுமீ ரிருவர் மகளிரு
மன்னுசீ ரதிகமான் வள்ளுவர் கபில
ரென்னு மாடவ ரிம்மூ வருப்பிறந்
தெவ்வத் தலமெவ ரெவர்க்குப் பிறப்பிட
மவ்வத் தலங்களி லவரவர் வளர்ந்தனர்
செப்புமவ் வெழுவருட் டிருவள் ளுவரா
மைப்புய லணிபொழின் மயிலாப் பூரில
வள்ளுவர் மனையிடை வளர்ந்தன ராங்கவ
ருள்ளுமுத் தேவரு மொருவ ராகிய
சதுர்முகன் றிருவவ தார மாகலின்
முதுமறை யாகம முத்தமிழ்க் கலைமு
வையந் திரிபிலா தனைத்துநன் குணர்ந்து
தெய்வப் புலமையிற் சிறந்தான் குருவா
யற்புத நீறணிக் கைந்தெழுத் தியம்பித்
தற்பர லிங்கமெய் தரித்தருள் செயப்பெற்றி
வலங்கொள்பூ சைவசியா மடியினுற் றொருகுண
மிலங்குறு வாசுகி யெனும்பெயாத தையலை

யணைந்தசு னமர்ந்து மகிழ்ந்துற வறத்தருட்
வணங்குற வில்லற வாழ்வினுற் றருளா
லென்னி னுயாவரு மினிததமிழ் மொழியமை
மூன்றூறு பெருவட மொழியமுக காறுற
மலைதரும் பற்பல மதத்தரும் வியந்து
தலைமிசைக் கொண்டிது தக்கதென் றேத்த
விம்மை மறுமைவீ டெய்தவிந் நூலொன்
றம்ம வகைமையுமென் றறிஞருள் ளுவப்ப
வெங்கட் கிணையிலை யெனத்தருக் குறுகடைச
சங்கப் புலவரத் தருக்குளத் தொழிய
வீரிரு வேதமே யெழுவா யாகிய
சீரிய விழுமிய செவ்விய நூல்களிற்
சிறந்த பொருளெலாஞ் செந்தமிழ்க் குறளி
லறம்பொருள் காமமென் றுகுமுப் பாலாற்
கூறின வொருநூல் கொண்டுளங்
தேறினர் பயனெலாஞ் சேர்ந்துவாழ் குவரே.

---

14

## திருவள்ளுவர் சோடசஸ்துதி.

திருமுடி மிசையார் மயிர்முடி யழகுந் தீர்க்கபுண் டரநுத லழகும்
திரண்மணி புயங்கை வருஞ்சவி யழகுந் திகழ்நெடுந் தாடியி னழகும்.
அருமுடி செபமா லிகைசின்முத் திரைசே ரபயநேர் வலக்கையி னழகும்
அமிழ்துறழ் தமிழ்மா மறைமுறை வரத மமைதரு மிடக்கையி னழகும்,
கருமுடி யோகப் பட்டையி னழகுங் கடிகொள்கீட் கோவண வழகும்
கழல்களிற் றிகிரி வளைவரை யழகுங் கமலகல் லாதனத் தழகும்,
தருமுடி முனிவரே மயிலையி னிடைமா தவர்கள்கண் டிறைஞ்சவீற் றிருக்கும்
தமிழ்புகழ்த் திருவள் ளுவரெனு நாம சற்குரு சரணமே சரணம.

## திருவள்ளுவர் குருபூஜைத் திருநட்சத்திரம்.

வெண்பா.

*மாசியுத்தி ரத்தினத்தில் வள்ளுவனார் மாநிலம்விட்*
*டாசில்பர முத்தி யடைந்தாரால் - காசினியில்*
*கொல்லா விரதங் குறிக்கொண்டா ரெல்லாரும்*
*நல்லார்வஞ் செய்மினந்த நாள்.*

## திருவள்ளுவரின் பெயர்கள்.

1. *திருவள்ளுவர்*
2. *தேவர்*
3. *முதற்பாவலர்*
4. *மாதாநுபங்கி*
5. *தெய்வப்புலவர்*
6. *செந்நாப்போதார்*
7. *பெருநாவலர்*
8. *நான்முகனார்*
9. *புலவர்*
10. *பொய்யில்புலவர்*
11. *நாயனார்*

## திருக்குறளின் பெயர்கள்.

1. *திருக்குறள்*
2. *முப்பானூல்*
3. *பொய்யாமொழி*
4. *வாயுறைவாழ்த்து*
5. *உத்தரவேதம்*
6. *தெய்வநூல்*
7. *திருவள்ளுவர்*
8. *தமிழ்மறை*
9. *பொதுமறை*
10. *திருவள்ளுவப் பயன்*
11. *பொருளுரை*

## திருக்குற ளுரையாசிரியரின் பெயர்கள்.

1. *தருமர்*
2. *மணக்குடவர்*
3. *தாமத்தர்*
4. *நச்சர்*
5. *பரிமேலழகர்*
6. *பருதி*
7. *திருமலையர்*
8. *மல்லர்*
9. *கவிப்பெருமாள்*
10. *காளிங்கர்*

**15**

# பண்டிதர்களின் அபிப்பிராயம்.

---

**நிலைமண்டில ஆசிரியப்பா.**

---

ஒன்றே தெய்வம் ஒன்றே தனிவழி
இன்றே தெளிந்து இன்புற்று இருக்க
இன்பத் தமிழில் எங்கள் வள்ளுவன்
இன்பப் பேறு இரும்புவி பெற்றிட
அறம்பொருள் இன்பம் அடங்கிய ஒருநூல்
திறனுடன் செப்பிய தெய்வத் திருநூல்
உலப்பிலா பெருநூல் உலகுக் கீந்தனன்
அளப்பெறும் அந்நூல் அதனுக் கான்றோர்
ஒருவரை யன்றி ஒன்பது செய்தனர்
சீருற் றிலங்கும் சிறந்தே அதனுள்
கண்மணக் குடவர் கவின்ற உரையே
பொன்னே என்னப் போற்றி இதனைப்
பரிமேல ழகன் பரிவுடன் கற்றுச்
சரிசரி எனவே சதுரர் சாற்றக்
கருப்பஞ் சாற்றில் கலந்தது தேனென
விருப்ப மிகவே விரிவுரை பெருக்கினன்
முன்னோ ருரையில் முதனிலை பெற்றதாய்ப்
பின்னோன் செய்த பேருரைக் குதவியாய்
இருந்த இவ்வுரை எங்கும் விளங்கிடத்
திருந்திய அன்பும் தெளிந்த ஞானமும்
ஒருங்கே விளங்க உதித்த தூயோன்
மருங்குளோ ரனைவரும் மாண்புறச் செய்வோன்
ஒழுக்கமும் பொறையும் ஊக்கமும் கல்வியும்
வழுக்கியும் மறவா வடிவேல் இறைவன்
அடிக்கீழ் இருந்தே அருந்தமிழ் கற்றவன்
திருந்திய அறிவும் திவ்விய குணமும்
பொருந்திய புண்ணியன் பொன்னு சாமி
என்னும் பெயரினன் எவரும் பயனுறப்
பண்ணுறும் அச்சில் பதிப்பித் தனனே.

குறள் வெண்பா.

பொன்னுசா மிப்புலவன் போதுறைவா ரின்னருளால்
மன்னியென் றும் வாழ்க மகிழ்ந்து.

ஆ. ச. அண்ணாமலை முதலியார் B. A.,
Assessor, Corporation of Madras,
7 உலகப்ப மேஸ்திரி தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை.

ஆசிரியர் - ஸ்ரீமத் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் மாணவருளொருவரும்
இந்து தியாலாஜிகல் ஹைஸ்கூல் தமிழாசிரியருமான
ஸ்ரீமத் - கீ. வேணுகோபால நாயகரியற்றிய
நிலைமண்டில வாசிரியப்பா.

---

திருவளர் கல்விச் சிறப்பெலா மமைந்து
இரும்புவ னத்திடை யெப்பா லார்க்கும்
ஒப்ப முடிக்கதா யொண்பொரு ணிறைந்த
செப்பருஞ் சீர்த்தி செறிந்த நீதிநூல்
முப்பா லாக மொழிந்தனன் தமிழ்மறை
இப்பார் கடந்த எழில்வள் ளுவனே !
அவ்வரு நூற்கு அரும்பொருள் கண்டார்
எவ்வயிற் புலவர் ஈரைந்து பேரில்
அரிய வுரையென அணிபெற உலகர்
பரிமே லழகரைப் படித்தின் புறுவர்
எத்தனை யுரையதற் கிருக்கினும் படிக்க
கற்றிடு நல்லவர் நலமதை யறிந்து
குணக்கட லாய குன்றம் போல்வான்
மணக்குட வரெனும் மாண்புடை நாயன்
வீடுற வரித்த வீறுரை தன்னை
ஏடுறச் செய்வித் தெண்பே றெய்தச
சீருறுஞ் சென்னைச்சிந் தாதிரிப் பேட்டை
ஒருற வாழும் இணையில் புலவன் ;
கோமள புரிவாழ் குருபர னவோன்
நேமமார் நிட்டை நிறையனு பூதி

சத்துவ குணத்தன் சாந்த சீலன்
தத்துவ முணர்த்தும் தயாபர னுவோன்
வேத முடிவாம் வித்தை யெவர்க்கும
போத முறவே போதித்து வருவோன்
பிரபல சுருதி பீடுற வுணர்ந்த
சிரமணி யன்ன சிரேட்ட னுகும்
சாது வடிவேற் சற்குரு தன்னிடம்
ஒதுமைந் திலககணம் ஒப்பிற் றருக்கநூல்
ஆதியாப் பலகலை யன்பா யுணர்ந்தவன்

நீதி தவறு நெறியி னுய்ந்து
பிழைபா டிலாமற் பிறங்கிடு நூலாய்
மழையது போன்று மாறு வேண்டான்
கன்னல் தேனே கண்டுடன் பாகே
இன்னமு தேயென எவர்க்கு முதவிஞன்
என்னுடை நண்பன் இருகில சோதரன்
பொன்னுசா மியெனும் புகழ்பெய ரானே.

---

உ

கடவுள் துணை.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர்

அருளிச்செய்த

# திருக்குறள் மூலமும், தேவருரை

அல்லது

# மணக்குடவருரையும்.

---

## 1. அறத்துப்பால்—(38).

# I. பாயிரம்—(4).

## 1 - ம் அதிகாரம்.

## கடவுள் வாழ்த்து.

*கடவுள் வாழ்த்தாவது கடவுளை வாழ்த்துதல்.*

1. அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இதன் பொருள்.) *எழுத்துக்க ளெல்லாம் அகரமாகிய வெழுத்தைத் தமக்கு முதலாக வுடையன; அவ்வண்ணமே, உலகம் ஆதியாகிய பகவனைத் தனக்கு முதலாக வுடைத்து,* (என்றவாறு). 1

2. கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்.

(இ - ள்.) *மேற்கூறிய வெழுத்தினா னாகிய சொற்க ளெல்லாங் கற்றதனா னாகிய பயன் வேறியாது? விளங்கின வறிவினை யுடையவன் திருவடியைத் தொழாராயின்,* (எ - று). மெய்யுணர்வின் - பர்?

*சொல்லினானே பொரு ளறியப்படுமாதலான் அதனைக் கற்கவே மெய் யுணர்ந்து வீடுபெறலாகும், மீண்டும் வணக்கம் கூறியது எற்றுக்கென்றாற்கு, இஃது அதனாற் பயனிது வென்பதூஉம், வேறுவேறு பயனில்லையென்பதூஉம் கூறிற்று. "கற்பக் கழிமட மஃகும்" என்றாரு முளர்.* 2



3. மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

(இ - ள்.) *மலரின்மேல் நடந்தானது மாட்சிமைப்பட்ட திருவடியைச் சேர்ந்தவரன்றே நிலத்தின்மேல் நெடுங்காலம் வாழ்வார்,* (எ - று).

*'நிலம்' என்று பொதுப்படக் கூறியவதனான் இவ்வுலகின்கண்ணும்*

மேலுலகின்கண்ணு மென்று கொள்ளப்படும். தொழுதாற் பயனென்னேயென் ருற்கு, போகநுகர்தலும் வீடுபெறலுமென்று கூறுவார் முற்படப் போகநுகர்வ ரென்று கூறினர். 3

4. தனக்குவமை யில்லாதான் ருள்சேர்ந்தார்க் கல்லான்
மனக்கவலே மாற்ற லரிது.

(இ - ள்.) தனக்கு நிகரில்லாதானது திருவடியைச சோ்தவர்க் கல்லது மனத்துண்டாங் கவலையை மாற்றுத லரிது, (எ - று).

வீடுபெறலாவது அவலககவலைக் கையாற்றினீங்கிப் புண்ணிய பாவமென்னு மிரண்டினையுஞ் சாராமற் சாதலும் பிறத்தலுமில்லாததொரு தன்மையை யெய்து தல். அது பெறுமென்பார் முற்படக் கவலே கெடுமென்ருர்; அதனுல், எல்லாத் துன்பமும் வருமாதலின். 4

5. அறவாழி யந்தணன் ருள்சேர்ந்தார்க் கல்லாற்
பிறவாழி நீந்த லரிது.

(இ - ள்.) அறமாகிய கடலேயுடைய அந்தணனது திருவடியைச் சேர்த வர்க்கல்லது ஒழிந்தபேர்களுக்குப் பிறவாழியை நீந்தலாகாது; அது பெறுத லரிது, (எ - று).

இது காமமும் பொருளும் பற்றிவரும் அவலங் கெடு மென்றது.

6. வேண்டுதல்வேண் டாமை யிலானடி சேர்ந்தார்
யாண்டு மிடும்பை யிலர்.

(இ - ள்.) இன்பமும் வெகுளியு மில்லாதானது திருவடியைச் சேர்ந்தவர் எவ்விடத்து மிடும்பை யில்லாதவர், (எ - று).

பொருளுங் காமமு மாகாவென்றற்கு 'வேண்டுதல் வேண்டாமை யிலான்' என்று பெயரிட்டார்.

7. இருள்சே ரிருவினையுஞ் சேரா விறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

(இ - ள்.) மயககத்தைச் சேர்ந்த நல்வினை தீவினையென்னு மிரண்டு வினை யுஞ் சேரா; தலைவனது ஆகிய மெய்ப்பொருள் சேர்ந்த புகழ்ச்சிச் சொற்களைப் பொருந்தினர் மாட்டு, (எ - று). 7

8. பொறிவாயி லைந்தவித்தான் பொய்தீ ரொழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

(இ - ள்.) *மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்பொறிகளின் வழியாக வரும் (ஊறு சுவை யொளி நாற்ற மோசை யென்னு மைந்தின்கண்ணுஞ் செல்லும் மன நிகழ்ச்சியை) அடக்கினனது பொய்யற்ற வொழுக்க நெறியிலே நின்றாரன்றே நெடிது வாழ்வார்,* (எ - று).

*இது சாவில்லை யென்றது.* 8

9. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தா
ரிறைவனடி சேரா தவர்.

(இ - ள்.) *பிறவியாகிய பெரிய கடலை நீந்தியேறுவர்; இறைவனது அடியைச் சேர்ந்தவர், சேராதவ ரதனு ளழுந்துவார,* (எ - று). 9

10. கோளில் பொறியிற் குணமிலவே யெண்குணத்தான்
றாளை வணங்காத் தலை.

(இ - ள்.) *அறிவில்லாத பொறிகளையுடைய பாவைகள்போல, ஒரு குணமுமுடையனவல்ல; எட்டுக் குணத்தினை யுடையவன் திருவடியினை வணங்காத தலையினையுடைய உடம்புகள்,* (எ - று).

*உயிருண்டாகில் வணங்குமென் றிழித்து உடம்புக ளென்றார.* 10

---

## 2 - ம் அதிகாரம்.
## வான்சிறப்பு.

*வான்சிறப்பாவது மழையினது தலைமை கூறுதல்.*

*இது கடவுட் செய்கைத்தாதலான் அதன்பிற் கூறப்பட்டது. இஃதீண்டுக் கூறியதென்னையெனின், பின்னுரைக்கப் படுகின்ற இல்லறமுந் துறவறமு மினிது நடப்பது மழையுண்டாயி னென்றற்குப் போலும்; அன்றியும், காலத்தின் பொருட்டுக் கூறினாரெனினும் அமையும்.*

11. சிறப்பொடு பூசனை செல்லாது வானம்
வறக்குமேல் வானோர்க்கு மீண்டு.

(இ - ள்.) சிறப்புச் செய்யப்படுகின்ற விழவு பூசனை நடவாது; வானம் புலருமாகில் தேவர்களுக்கும் இவ்வுலகின்கண், (எ - று).

மழைபெய்யாக்கால் வரும் குற்றங் கூறுவார் முற்பட நான்குவகைப்பட்ட அறங்களில் பூசை கெடுமென்றார். 1



12. தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(இ - ள்.) தானமுந் தவமுமாகிய விரண்டறமு முளவாகா; அகன்ற வுலகத்துக்கண் மழை பெய்யாதாயின், (எ - று).

இது தானமுந் தவமுங் கெடுமென்றது. 2

13. நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு.

(இ - ள்.) நீரையின்றி யுலகம் அமையாதாயின், யாவர்க்கும் மழையையின்றி ஒழுக்கம் உண்டாகாது, (எ - று).

ஒழுக்கம் - விரதம். இஃது ஆசாரங்கெடுமென்றது. இவை மூன்றினானும் நான்கறமுங் கெடுமென்று கூறினார். 3

14. விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி.

(இ - ள்.) வானமானது விலைநிற்கப் பொய்க்குமாயின், விரிந்த நீரினையுடைய அகன்ற வுலகத்திடத்தே பசியானது நின்று வருத்தாநிற்கும்; எல்லாவுயிர்களையும், (எ - று).

பொய்த்தல் - தன்றொழிலை மறுத்தல். இது 'பசி' என்று பொதுப்படக் கூறியவதனான் மக்களும் விலங்கும், பொருளுங் காமமுந் துய்க்கலாற்றாது துன்பமுறுமென்று கூறிற்று. 4

5

15. விசும்பிற் றுளிவீழி னல்லான்மற் றாங்கே
பசும்புற் றலைகாண் பரிது.

(இ - ள்.) வானின்று துளிவீழினல்லது அவ் விடத்துப் பசுத்த புல்லினது தோற்றமுங் காண்டல் அரிது, (எ - று).

ஆங்கென்பதனை அசையாக்கினு மமையும். இஃது ஓரறிவுயிருங் கெடு மென்றது. 5

16. நெடுங்கடலுந் தன்னீர்மை குன்றுந் தடிந்தெழிலி
தானல்கா தாகி விடின்.

(இ - ள்.) நிலமேயன்றி நெடியகடலும் தனது தன்மை குறையும்; மின்னி மழையானது பெய்யாவிடின், (எ - று).



தடிந்தென்பதற்கு, கூறுபடுத்து என்று பொருளுரைப்பாரு முளர். இது நீருள் வாழ்வனவும் படுவனவுங் கெடுமென்றது. இவை நான்கினுனும் பொருட் கேடு கூறினர்; பொருள்கெட இன்பங்கெடு மென்பதனால் இன்பக்கேடு கூறிற் றிலர். 6

17. ஏரி னுழாஅ ருழவர் புயலென்னும்
வாரி வளங்குன்றிக் கால்.

(இ - ள்.) ஏரினுழுதலைத் தவிர்வாருழவா; புயலாகிய வாரியினுடைய வளங் குறைந்தகாலத்து, (எ - று).

இஃது உழவ ரில்லை யென்றது. 7

18. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

(இ - ள்.) பெய்யாது நின்று எல்லாப்பொருளையுங் கெடுப்பதும், அவை கெடப் பட்டார்க்குத் துணையாய்த் தான் பெய்து பொருள்களெல்லாவற்றையும் அவ் விடத்தே யுண்டாக்குவதும், மழை, (எ - று).

இஃது இரண்டினையுஞ் செய்வதென்றவாறு. 8

19. துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத்
துப்பாய தூஉ மழை.

(இ - ள்.) பிறிதொன்றுண்பார்க்கு அவருண்டற்கான வுணவுகளையு முண் டாக்கித், தன்னை யுண்பார்க்குத் தானே உணவாவதும் மழையே, (எ - று).

இது பசியைக் கெடுக்கு மென்றது. 9

20. வானின் றுலகம் வழங்கி வருதலாற்
றானமிழ்த மென்றுணரற் பாற்று.

(இ - ள்.) மழைவளம் நிலை நிற்றலானே உலகநடை தப்பாது வருதலான், அம் மழைதான் உலகத்தார் அமுதமென்றுணரும் பகுதியது, (எ - று).

இஃது அறம் பொரு ளின்பங்களை யுண்டாக்குதலானும், பலவகைப்பட்ட வுணவுகளை நிலை நிறுத்தலானும், இம் மையினை ஏற்றுள்ள பூத பாத்திரமாக நினைக்கப் படாதென்ற நிலைமை கூறிற்று. 10.

---

## 3 - ம் அதிகாரம்.

## நீத்தார் பெருமை.

நீத்தார் பெருமையாவது துறந்த முனிவரது பெருமையைக் கூறல்.

இது கடவுளை வணங்கினாற்போல் முனிவரையும் வணங்கவேண்டுமென் பதனானும் அவர் அதை யடக்கத்தக்கவரென்ற கருத்தினாலும் அவையிற்றின்பிற் கூறப்பட்டது.



21. ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து
வேண்டும் பனுவற் றுணிவு.

(இ - ள்.) ஒழுக்கத்தின் பொருட்டு எல்லாப் பொருளையுந் துறந்தாரது பெருமையை நூல்களின் றுணிவு விழுப்பத்தின் பொருட்டு வேண்டும், (எ-று).

யாதானுமொரு பொய்யைச் சொல்லும் நூலும் தன்னையெல்லாருங் கொண் டாடுதற்காகத் துறந்தார் பெருமையை நன்கு மதித்துக் கூறும்; அதனானே யானுஞ் சொல்லுகின்றேனென்பது. 1

22. துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்
திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று.

(இ - ள்.) காம முதலாகத் துறந்தார் பெருமைக்கு அளவு கூறின், உலகத் துப்பிறந்திறந்தாரை இத்துணையரென்று எண்ணி யறியலுற்றாற் போலும், (எ-று)

இது பெருமைக்கெல்லை கூறுத லரிதாயினுஞ் சில சொல்லப் புகாநின்றே னென்றது கருதிக் கூறிற்று. 2

23. உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(இ - ள்.) அறிவாகிய தோட்டியானே பொறியாகிய யானையைத்திணையும் புலன்களிற் செல்லாமல் மீட்பவன் மேலாகியவிடத்தே யாதற்கு இவ்விடத்தே யிருப்பதொரு வித்து, (எ - று).

பெருமை சொல்லுவார் முற்பட மக்கள் தன்மையனும் இவ்வுலகின்கண் வாழ்பவனல்லன்; தேவருளொருவனென்று கூறினர். 4 3

24. சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு.

(இ - ள்.) சுவை முதலாகக் கூறிய வைந்து புலன்களின் வகையை யாராய்வான் கண்ணதே யுலகம், (எ - று).

எனவே, இவற்றின் காரியம் வேறொன்றாகத் தோன்றுமன்றே; அதனை அவ்வாறு கூறுபடுத்துக் காணக் காரணத் தோற்றுமாதலால், காரியமான வுலகம் அறிவான்கண்ணதா மென்றவா றாயிற்று. 4

25. ஐந்தவித்தா னாற்ற லகல்விசும்பு ளார்கோமா
னிந்திரனே சாலுங் கரி.

(இ - ள்.) நுகர்ச்சியாகிய வைத்தினையுந் துறந்தானது வலிக்கு அகன்ற விசும்பிலுள்ளார்க்கு நாயகனாகிய இந்திரனே யமையுஞ் சான்று, (எ - று).

பாயிரம் - 3 - வது நீத்தார் பெருமை. 7

இந்திரன் சான்றென்றது; இவ்வுலகின்கண் மிகத் தவஞ்செய்வாருளராயின், அவன் தன்பதம் இழக்கின்றானாக நடுங்குமாதலான். இது தேவரினும் வலிய னென்றது. 5

26. இருமை வகைதெரிந் தீண்டறம் பூண்டார்
பெருமை (யே) பிறங்கிற் றுலகு. பரி(தூஉய்ப பின்பக)

(இ - ள்.) பிறப்பும் வீடுமென்னு மிரண்டினது கூறுபாட்டை யாராய்ந்து இவ்விடத்தே துறவறத்தை மேற்கொண்டவரது பெருமை (யே) உலகத்தில் மிக்கது. இஃது எல்லாராலும் போற்றப்படுமென்றது. 3 6

27. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

(இ - ள்.) நிரம்பிய கல்வியையுடைய மாந்தரது பெருமையை அவராற் சொல்லப்பட்டு நிலத்தின்கண் வழங்காநின்ற மந்திரங்களே காட்டும், (எ - று).

இஃது அவராணை நடக்குமென்று கூறிற்று. 7

28. குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி
கணமேயுங் காத்த லரிது.

(இ - ள்.) குணமாகிய மலையை மேற்கொண்டு நின்றார்மாட்டு உளதாகிய வெகுளியால் வருந்தீமையைச் சிறிது பொழுதாயினும் வாராமற் காத்தலரிது.

சுருவ்ஷன் பெரும்பாம்பாயினன். இது வெகுளி பொறுத்தலரிதென்றது. 8

29. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.

(இ - ள்.) செயற்கு அரியன செய்வாரைப் பெரியோரென்று சொல்லுவர்; அவற்றைச் செய்யமாட்டாதாரைத் துறந்தாராயினுஞ் சிறியோரென்று சொல்லுவர், (எ - று)

செயற்கரியன - இயம நியம முதலாயின. இவ்வதிகாரம் நீத்தார்பெருமையென்று கூறப்பட்டதாயினும், துறந்த மாத்திரத்தானே பெரியரென்று கொள்ளப்படார்; செயற்கரியன செய்வாரே பெரியரென்று கொள்ளப்படுவரென்று இது கூறிற்று. 9

30. அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

(இ - ள்.) எல்லாவுயிர்க்குஞ் செவ்விய தட்பஞ்செய்தலை மேற்கொண்டொழுகலானே, அந்தணரென்போரும் துறந்தாராகக் கொள்ளப்படுவர், (எ-று).

மேல் துறந்தவர்களினுஞ் சிறியாருளரென்று கூறினர்; இதனானே துறவாதாரினும் பெரியாருளரென்று கூறினர். இவை யெட்டானும் துறவறத்தின் பெருமை கூறப்பட்டது. 10

---

8

## திருக்குறள் - அறத்துப்பால்.

### 4 - ம் அதிகாரம்.

### *அறன்வலியுறுத்தல்.*

*அறன்வலியுறுத்தலாவது அறம் வலிமையுடைத் தென்பதனை யறிவித்தல். இதனானே அறத்துப்பால் முற்கூறுதற்குக் காரணஞ் சொன்னாருமாம். இது மேற்கூறிய முனிவராற் கொண்டியக்கப்படுதலின், பிற்கூறப்பட்டது.*

31. சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங்
காக்க மெவனோ வுயிர்க்கு.

(இ - ள்.) முத்தியுந்தரும் செல்வமும் தரும் ஆதலால், அறத்தின்மேல் உயிர்

கட்கு ஆக்கமாவது பிறிதில்லை, (எ - று).

இது பொருளான் ஆக்கமுண்டென்பாரை மறுத்து, அறன் வலியுடைத்தென்று கூறிற்று. 1

32. ஒல்லும் வகையா னறவினை யோவாதே
சேல்லும்வா யெல்லாஞ் சேயல்.

(இ - ள்.) தமக்கியலுங் திறத்தானே, அறவினையை ஒழியாதே செய்யலாமிடமெல்லாஞ் செய்க, (எ - று).

இயலுந்திறமென்பது மனமொழிமெய்களும் பொருளும், செல்லும்வாய் என்பது அறஞ்செய்தற் கிடமாக்கிய பல விடங்களும். ஒழியாதென்றது நாடோறு மென்றது. இஃது அறம் வலிதென் றறிந்தவர்கள் இவ்வாறு செய்கவென்றது.

33. அன்றறிவா மென்னா தறஞ்சேய்க மற்றது
போன்றுங்காற் போன்றாத் துணை.

(இ - ள்.) பின்பே அறிந்து செய்வோமென்னாது முன்பே அறத்தைச் செய்க, அது சாங்காலத்தினுஞ் சாகாதே நின்று பிறக்குமிடத்திற்குத் துணையாம்.

இஃது அறஞ்செய்யுங்கால் விரைந்து செய்யவேண்டுமென்பதும் அது மறுமைக்குத் துணையாமென்பதும் கூறிற்று.

பரி: ஆக்கம் அளவை (?)

34. அறத்தா றிதுவேன வேண்டா சிவிகை
போறுத்தானோ டூர்ந்தா னிடை.

(இ - ள்.) நீங்கள் அறநெறி யித்தன்மைத்தென் றறிய வேண்டா, சிவிகைக் காவுவானோடு செலுத்துவானிடைக் காணலாம், (எ - று).

இது பொன்றினாலுந் துணையாகுமோ என்றார்க்குத் துணையாயினவாறு காட்டிற்று. 4.

பாயிரம் - 4 - வது - அறன்வலியுறுத்தல். 9

35. அறத்தான் வருவதே யின்பமற் றேல்லாம்
புறத்த புகழு மில.

(இ - ள்.) அறத்தால் வருவது யாதொன்று, அதுவே இன்பமும் புகழுமாம்; அதனாலன்றி வருவனவெல்லாந் துன்பமாம்; புகழுமிலவாம், (எ - று).

*இஃது எல்லாப் போக நுகர்ச்சியும் இதனானே வருமென்றது.* 5

36. வீழ்நாள் படாஅமை நன்றாற்றி னஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

(இ - ள்.) *ஒருவன் ஒருநாளிடைவிடாமல் நன்மையைச் செய்வானாயின், அச் செயல் அவனது பிறப்பும் இறப்புமாகிய நாள் வருகின்ற வழியை யடைப்பதொரு கல்லாம்,* (எ - று).

*இது வீடு தருமென்றது.* 6

37. செயற்பால தோரு மறனே யொருவற்
குயற்பால தோரும் பழி.

(இ - ள்.) *ஒருவனுக்குச் செய்யும் பகுதியது அறமே; தப்பும் பகுதியது பழியே,* (எ - று).

*மேல் அறஞ் செய்யப் பிறப்பறு மென்றார்; அதனோடு பாவமுஞ் செய்யின் அறாதென்றற்கு இது கூறினார்.* 7

38. அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை
மறத்தலினூங் கில்லையாங் கேடு.

(இ - ள்.) *ஒருவனுக்கு அறஞ் செய்தலின் மேற்பட்ட ஆக்கமுமில்லை; அதனைச் செய்யாமையின் மேற்பட்ட கேடுமில்லை,* (எ - று).

*இஃது அறஞ் செய்யாக்கால் கேடுவருமென்று கூறிற்று.* 8

39. அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல் நான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

(இ - ள்.) *மனக்கோட்டமும், ஆசையும், வெகுளியும், கடுஞ் சொல்லும் என்னும் நான்கினையும் ஒழித்து நடக்குமது யாதொன்று அஃது அறமென்று சொல்லப்படும்,* (எ - று).

*பின்னர்ச் செய்யலாகாதென்று கூறுவனவெல்லாம் இந்நான்கினுள் அடங்குமென்று கூறிய அறம் எத்தன்மைத்தென்றற்கு இது கூறப்பட்டது.* 9





40. மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தற
னாகுல நீர பிற.

(இ - ள்.) ஒருவன் தன்மனத்தின்கட் குற்றமிலனாதலே எல்லாவறமுமாம்; அதில் அழுக்குண்டாயின், மேற்செய்வனவெல்லாம் ஆரவார நீர்மைய, (எ-று).

பிறரறியவேண்டிச் செய்தானுமென்றவாறாயிற்று. மேல் நான்கு பொருளைக் கடியவேண்டுமென்றார் அவை நான்கும் மனமொன்றுந் தூயதாகப் போமென்று அதன்பின் இது கூறினர். 10

---

## 2. இல்லறவியல்—(20).

இல்லறமாவது இல்லின்கணிருந்து தான முதலாயின செய்தல். அது கூறிய அதிகார மிருபதினும் இல்வாழ்வான் வாழுந்திற மோரதிகாரத்தானும் அதற்குத் துணையான மனைவி யிலக்கண மோரதிகாரத்தானும் கூறி, அதன் பின் இல்லறப் பகுதியான பிரமசரியங் காருகத்தமென்னு மிரண்டினுள்ளும் பிரம சரியத்திற்கு ஆதாரமாகிய புதல்வரைப் பெறுதல் ஓரதிகாரத்தாற் கூறிக், காருகத்த விலக்கணங் கூறுவார் நல்கூர்ந்தார், நல்குரவினீங்கினார், செல்வர், வள்ளியோரென்னும் நால்வரினும் அன்புடைமை முதலாக ஒழுக்கமுடைமை யீறாக நல்கூர்ந்தாராற் செய்யப்படுவன வேழும், பிறனில் விழையாமை முதலாகத் தீவினையச்சமீறாக இவராற் றவிரப்படுவனவேழும் பதினோரதிகாரத்தாற் கூறி, இவற்றோடுங்கூட ஒப்புரவறிதல் நல்குரவினீங்கினாராற் செய்யப்படுமென்று கூறி, இவற்றோடுங்கூட ஈதல் செல்வராற் செய்யப்படுமாறு கூறி, இவற்றோடுங் கூடப் புகழ் வள்ளியோராற் செய்யப்படுமென்று கூறினாராகக் கொள்ளப்படும். இல்லறம் முற்படக் கூறியது; துறவறத்தினின்றாரையும் ஓம்புதல் இல்வாழ்வான் கண்ணதாதலான்.

### 1 - ம் அதிகாரம்.

### இல்வாழ்க்கை.

அவற்றுள், இல்வாழ்க்கையாவது இல்லின்கண் இருந்து வாழ்வார் வாழுந் திறன் கூறுதல். மேல் அறஞ் செய்கவென்றார் இது முதலாக அறஞ் செய்யுமாறு கூறுகின்றாராதலின், இது பிற்கூறப்பட்டது.

41. இல்வாழ்வா னென்பா னியல்புடைய மூவர்க்கு
நல்லாற்றி னின்ற துணை.

(இ - ள்.) இல்வாழ்வானென்று சொல்லப்படுமவன் இயல்புடைய மூவர்க்கும் நல்ல வழியின்கண்ணே நின்றவொருதுணை, (எ - று).



என்றது தானமாகிய வில்லறஞ் செய்யுமவன் தவத்தின்பாற்பட்ட விரதங்கொண் டொழுகாநின்ற பிரமச்சாரிக்கும், தவமேற்கொண் டொழுகாநின்ற வானப்பிரஸ்தன் ஸந்நியாசிகளுக்கும், தத்தம் நிலைகுலையாம லுணவு முதலாயின கொடுத்துப் பாதுகாத்தலின், அவர்க்கு நல்லுலகின்கண் செல்லும் நெறியிலே நின்ற வொரு துணையென்று கூறியவாறாயிற்று. திணையென்றது இடையூறு வாராம லுய்த்து விடுவாரை. 1

42. துறந்தார்க்குந் துவ்வா தவர்க்கு மிறந்தார்க்கு
மில்வாழ்வா னென்பான் றுணை.

(இ - ள்.) வருணத்தினையு ம காமத்தினையுந் துறந்தார்க்கும், துறவாது நல்குரவாளரா யுண்ணப் பெறாதார்க்கும், பிறராய் வந்து செத்தார்க்கும் இல்வாழ்வானென்று சொல்லப்படுமவன் துணையாவான், (எ - று).

மேற்கூறிய மூவரும் வருணாசிரமங்களைத் துறவாமையா லீண்டுத் துறந்தாரென்று கூறினார். செத்தார்க் கிவன் செய்ய வேண்டியன புறங்காட்டுய்த்தல் முதலாயின. இது மேற்கூறியவர்க்கே யன்றி இவர்க்கும் துணையென்று கூறிற்று. 2

43. தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை.

(இ - ள்.) பிதிரர், தேவர், புதியராய் வந்தார், சுற்றத்தார், தானென்னு மைந்திடமாகிய நெறியைக் கெடாமலோம்புதல் தலையான வில்வாழ்க்கை, (எ - று).

தனக்குண்டான பொருளை ஆறு கூறாக்கி ஒருகூறு அரசற்குக் கொடுத்தொழிந்தவைந்து கூறினுள் தான் கொள்வது ஒரு கூறென்றற்குத் தன்னையு மெண்ணினர் இது தலையான இல்வாழ்க்கை வாழும் வாழ்வு கூறிற்று; என்னை? இவையெல்லா மொருங்கு செய்யப்படுதலின். மேற்கூறிய அறுவரும் விருந்தினது வகையினரென்று கொள்ளப்படுவர். 3

44. பழியஞ்சிப் பாத்தூ ணுடைத்தாயின் வாழ்க்கை
வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்.

(இ - ள்.) இல்வாழ்க்கையாகிய நிலை பழியையுமஞ்சிப் பகுத்துண்டலையு முடைத்தாயின், தனதொழுக்கு இடையறுதல் எக் காலத்திலுமில்லை, (எ - று).

மேல் பகுக்குமாறு கூறினார், பகுக்குங்கால் பழியொடு வாராத பொருளைப் பகுக்கவேண்டுமென்று கூறினார். 4

45. அன்பு மறனு முடைத்தாயி னில்வாழ்க்கை
பண்பும் பயனு மது.

(இ - ள்.) இல்வாழ்க்கையாகிய நிலை யாவர்மாட்டும் அன்பு செய்தலையும் அறஞ்செய்தலையும் உடைத்தாயின், அதற்குக் குணமாவதும் பயனாவதும் அவ் விரண்டினையு முடைமை தானே, (எ - று).



பயன் வேறு வேண்டாம்; தனக்கும் பிறர்க்கும் உண்டான முகமலர்ச்சி தானே பயமையுமென்பது. இது பழியொடு வாராத வுணவை நகா வேற்பார் மாட்டு அன்புசெய்யவேண்டுமென்பதும் சிலனுய்க் கொடுக்கவேண்டுமென்பதும் கூறிற்று. 5

46. அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்.

(இ - ள்.) இல்வாழ்க்கையாகிய நிலையை அறநெறியிலே செலுத்தவல்லவனாயின், புறநெறியாகிய தவத்திற் போய்ப் பெறுவது யாதோ? (எ - று).

மேல் சிலனுய்க் கொடுக்கவேண்டுமென்றார் அவ்வாறு செய்யின் தவப்பயனும் இது தானே தருமென்றார். 6

47. ஆற்றி னொழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை
நோற்பாரி னோன்மை யுடைத்து.

(இ - ள்.) பிறரையும் நன்னெறியிலே ஒழுகப்பண்ணித் தானும் அறத்தின் பாலொழுகும் இல்வாழ்க்கை தவஞ்செய்வாரினும் வலியுடைத்து, (எ - று).

ஒழுகப் பண்ணலாவது அவர்க்கு வேண்டுவன அமைத்தல். இது தவத்தினும் வலியுடைத்தென்றது 7

48. இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

(இ - ள்.) நெறியினானே யில்வாழ்க்கை வாழ்பவனென்பான், முயல்வா ரெல்லாரினுந் தலையாவான், (எ - று).

முயறல் - பொருட்கு முயறல். 8

49. வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந்
தெய்வத்துள் வைக்கப் படும்.

(இ - ள்.) இல்வாழ்க்கை வாழும்படியிலே வாழுமவன் உலகத்திலே தேவ ஒருவனாக மதிக்கப்படுவன், (எ - று).

இவன் எல்லாராலும் நன்கு மதிக்கப்படுவ னென்றவாறு. 9

50. அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை யஃதும்
பிறன்பழிப்ப தில்லாயி னன்று.

(இ - ள்.) அறனென்று சிறப்பித்துச் சொல்லப்பட்டது இல்வாழ்க்கையே; அதுவும் நன்றாவது பிறனொருவனாற் பழிக்கப்படுவதொன்றை யுடைத்தல்ல வாயின், (எ - று).

பழிக்கப்படுவதென்றது இழிகுலத்தாளாகிய மனையாளை. இனி வாழ்க்கைத் துணைநலம் கூறுகின்றாராகலின், இது கூறப்பட்டது. 10



2 - ம் அதிகாரம்.

## வாழ்க்கைத் துணை நலம்.

வாழ்க்கைத் துணைநலமாவது வாழ்க்கைக்குத் துணையாகிய மனையாளது பெண்மை யிலக்கணங் கூறுதல்.

51. மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்
வளத்தக்காள் வாழ்க்கைத் துணை.

தகக நறுமை

(இ - ள்.) தான் பிறந்த குடிக்குத்தகக வொழுக்கத்தை யுடையாளாய்த் தன்னைக் கொண்டவனது வருவாய்க்குத் தகக செலவினையுடையவள் இல் வாழ்க்கைக்குத் துணையாவள், (எ - று). 1

52 52. மனைமாட்சி யில்லாள்க ணில்லாயின் வாழ்க்கை
யெனைமாட்சித் தாயினு மில்.

(இ - ள்.) குடிக்குத்தக்க வொழுக்கம் மனையாள்மாட்டு இல்லையாகில், அவ் வில்வாழ்க்கை எத்துணை நன்மைகளை யுடைத்தாயினும் ஒரு நன்மையும் இன்றாம், (எ - று). 2

53. சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்

நிறைகாக்குங் காப்பே தலை.

(இ - ள்.) மகளிரைச் சிறைசெய்து காக்குங்காவல் யாதினைச் செய்யும்? அவரது கற்புக் காக்குங் காவலே தலையான காவல், (எ - று). 3

54. பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின்,

(இ - ள்.) பெண் பிறப்புப்போல மேம்பட்டன யாவையுள? கற்பாகிய திண்மை யுண்டாகப் பெறின், (எ - று). 4

55. புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை யிகழ்வார்முன்
னேறுபோற் பீடு நடை.

(இ - ள்.) புகழ்பொருந்தின மனையாளை இல்லாதார்க்கு இல்லையாம்; தம்மை யிகழ்ந்துரைப்பார்முன் ஏறுபோல நடக்கும் மேம்பட்ட நடை, (எ - று).

ஏறு நடை - அசைவும் தலையெடுப்பும் பொருந்திய நடை. 5

11 திருக்குறள் - அறத்துப்பால்.

56. இல்லதே னில்லவண் மாண்பானா லுள்ளதே
னில்லவண் மாணாக் கடை.

(இ - ள்) ஒருவனுக்கு மனையாள் மாட்சிமையுடையாளானால், எல்லா மிலனேயாயினும் இல்லாதது யாது? மனையாள் மாட்சிமை இல்லாளானால், எல்லா முடையானாயினும் உண்டானது யாது? (எ - று). 6

57. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

(இ - ள்) தன்னையுங் காத்துத், தன்னைக்கொண்ட கணவனையும் பேணி, நன்மையமைந்த புகழ்களையும் படைத்துச் சோர்வின்மையுடையவளே பெண் ணென்று சொல்லப்படுவள், (எ - று). 7

58. தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

(இ - ள்.) தெய்வத்தைத் தெய்வமென்று தொழாளாய், எல்லாத் தெய்வமுந் தன்கணவனென்றே கருதி, அவனை நாடோறுந் தொழுதெழுமவள் பெய் யென்று சொல்ல மழை பெய்யும், (எ - று).

எழுதல் - உறங்கி எழுதல். 8

59. பெற்றாற் பெறிற்பெறுவர் பெண்டிர் பெருஞ்சிறப்புப்
புத்தேளிர் வாழு முலகு.

(இ - ள்.) பெண்டிரானவர் தம்மை மனைவியாகப் பெற்றவனையே தமக்குத் தலைவராகப் பெறின், தேவர் வாழும் பெரிய சிறப்பினையுடைய உலகத்தைப் பெறுவர், (எ - று). 9

60. மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு.

(இ - ள்.) ஒருவனுக்கு அழகென்று சொல்லுப, மனையாள் ஒழுக்கமுடையாளாதலை; அவ் வழகின்மேலே நல்ல அணிகலனென்று சொல்லுப, நல்ல புதல்வரைப் பெறுதலை, (எ - று). 10

## 3 - ம் அதிகாரம்.

## புதல்வரைப் பெறுதல்.

*புதல்வரைப் பெறுதலாவது புதல்வரைப் பெற்றதனாலாய பயன் கூறுதல்.*

61. பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

(இ - ள்.) ஒருவன் பெறும் பொருள்கள் அறிவுடைய மக்களைப்பெறுதல்; பயன்படுவதொழிந்த பொருள்களெல்லாம் அவற்றினும் சிறந்தனவாக யாம் கண்டறிவதில்லை, (எ - று). 1



62. எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்.

(இ - ள்.) எழுபிறப்பினுந் துன்பங்கள் சாரா; ஒருபிறப்பிலே பழியின்கண் மிகாத குணத்தினையுடைய புதல்வரைப் பெறுவாராயின். (எ - று). 2

63. தம்பொரு ளென்பதம் மக்க ளவர்பொரு
டந்தம் வினையான் வரும்.

(இ - ள்.) தம்முடைய பொருளென்று சொல்லுவர் உலகத்தார் தம்மக்களை, அம் மக்களுடைய பொருள் தத்தம்முடைய வினையோடே கூடவருதலான், (எ - று).

64. அமிழ்தினு மாற்ற வினிதேதம் மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

(இ - ள்) இனிமையுடைத்தாகிய அமிழ்தினும் மிகவினிது ; தம்முடைய மக்கள் சிறுகையாலே யளைபப்பட்ட கூழ், (எ - று). 4

65. மக்கண்மெய் தீண்ட லுடற்கின்ப மற்றவர்
சொற்கேட்ட லின்பஞ் செவிக்கு.

(இ - ள்.) தமமக்கள் தமதுடம்பினைச் சார்தல் தம்முடம்பிற் கின்பமாம். அவர் சொற்களைக் கேட்டல் செவிக்கின்பமாம, (எ - று). 5

66. குழலினி தியாழினி தென்பதம் மக்கண்
மழலைச்சொற் கேளா தவர்.

(இ - ள்) குழலோசை யினிது, யாழோசை யினிதென்று சொல்லுவர் தம் மக்களது மழலைச் சொற்களைக் கேளாதவர் ; கேட்டவர் சொல்லார், (எ - று). 6

67. தம்மிற்றம் மக்க ளறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லா மினிது.

(இ - ள்.) தம்மகக ளறிவுடையாராகுல் அது தம்மினும் உலகத்துயிர்கட் கெல்லாம் இனிதாம், (எ - று). 7

68. ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

(இ - ள்.) தான்பெற்ற காலத்தினும் மிக மகிழும் ; தன்மகனைச் சான்றோனென்று பிறர்சொல்லக் கேட்டகாலத்துத் தாய், (எ - று). 8

69. தந்தை மகற்காற்று நன்றி யவையத்து
முந்தி யிருப்பச் செயல்.

(இ - ள்.) தந்தை மகனுக்குச் செய்யும் உபகாரம், அவையத்தின்கண்ணே முந்தியிருக்குமாறு கல்வி யுண்டாக்குதல், (எ - று). 9



70. மகன்றந்தைக் காற்று முதவி யிவன்றந்தை
யென்னோற்றான் கொல்லெனுஞ் சொல்.

(இ - ள்.) மகன் தந்தைக்குச் செய்யும் உபகாரம், இவன் தந்தை என்ன தவஞ் செய்தானென்று உலகத்தார் சொல்லுஞ் சொல்லைப்படைத்தல், (எ - று).

இது நெறியினொழுகுவாரை உலகத்தார் புகழ்வாராதலான், மகனும் ஒழுக்க முடையனாக வேண்டுமென்றது. 10

## 4 - ம் அதிகாரம்.

## அன்புடைமை.

*அன்புடைமையாவது தன்னைச் சார்ந்தார் மாட்டுக் காதலுடையவனாதல்.*

77 71. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம்.

(இ - ள்.) *என்பிலாத சீவனை வெயில் சுடுமாறு போறச் சுடும்; அன்பிலாத வுயிரினை அறம்,* (எ - று). 1:7

78 72. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பார்க்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று.

(இ-ள்.) *தன்னிடத்து அன்பில்லாத வுயிரினது வாழ்க்கை, வலியபாரிடத்து உண்டாகிய உலர்ந்த மரம் தளிர்த்தாற் போலும்,* (எ - று).

*தளிர்த்தற்குக் காரணமின்மையால் தளிராதென்றவாறு.* 2:8

79 73. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
யகத்துறுப் பன்பி லவர்க்கு.

(இ - ள்.) *உடம்பிற்கு அகத்துறுப்பாகிய அன்பிலார்க்குப், புறத்துறுப்புக்களெல்லாம் யாதினைச் செய்யும்?* (எ - று). 3:9

80 74. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு.

(இ - ள்.) *உயிர்க்கு நிலைபேறு அன்பின் வழியதாகிய அறத்தினான் வரும்; ஆதலால், அவ் வன்பிலாதார்க்கு உளதாவது என்பின்மேற் றோலினாற் போர்க்கப்பட்ட வுடம்பு,* (எ - று)

*இது வீடு பெறாதென்றது.* 4:10

72 75. அன்பிலா ரெல்லாந் தமக்குரிய ரன்புடையா
ரென்பு முரியர் பிறர்க்கு.

(இ - ள்.) *அன்பிலாதார் எல்லாப் பொருளையுந் தமக்கு உரியராக வுடையார்; அன்புடையார் பொருளேயன்றித் தம்முடம்புக் கங்கமாகிய வெலும்பினையும்*

பிறர்க்கு உரிமையாக வுடையர், (எ - று).

அன்புடையார்க்கல்லது அறஞ்செய்த லரிதென்றவிற்று. 5 : 9



73 76. அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(இ - ள்.) முற்பிறப்பின்கண் அன்போடு பொருந்தச் சென்ற செலவென்று சொல்லுவர்; பெறுதற்கரிய வுயிர்க்கு இப் பிறப்பின்கண் உடம்போடு இடைவிடாத நட்பினை, (எ - று). 6 : 3

75 77. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு.

(இ - ள்.) முற்பிறப்பின்கண் பிறர்மேலன்பு வைத்துச் சென்ற செலவென்று சொல்லுவர்; இப்பிறப்பின்கண் உலகத்தில் இன்பமுற்றார் அதன் மேலுஞ் சிறப்பெய்துதலை, (எ - று).

இது போகர் துயப்பரென்றது. 7: 5

74 78. அன்பீனு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

(இ - ள்.) அன்பு தரும் ஆர்வமுடைமையை; அவ்வார்வமுடைமை தரும், நட்பென்று சொல்லப்பட்ட ஆராய்தலில்லாத சிறப்பினை, (எ - று) 8 : 4

76 79. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை.

(இ - ள்.) அன்பானது அறஞ்செய்வார்க்கே சார்பாமென்பர் அறியாதார்; அவ்வன்பு மறஞ்செய்வார்க்குந் துணையாம், (எ - று). 9 : 6

71 80. அன்பிற்கு முண்டோ வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும்.

(இ - ள்.) அன்பினை யடைக்குந்தாழுமுளதோ? அன்புடையார்மாட்டு உளதாகிய புல்லிய கண்ணின் நீர்தானே ஆரவாரத்தைத் தரும், (எ - று). 10 : 1

# 5 - ம் அதிகாரம்.

## விருந்தோம்பல்.

*விருந்தோம்பலாவது உண்ணுங் காலத்துப் புதியார் வந்தால் பகுத்துண்ண வேண்டுமென்பது கூறல்.*

81. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) *இல்லின்கண் இருந்து பொருளைப் போற்றி வாழும் வாழ்க்கை யெல்லாம், வந்தவிருந்தினரைப் போற்றி அவர்க்கு உபகரித்தற்காக,* (எ - று). 1



82. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) *விருந்தினர் இப்புறத்தாராகத் தானே யுண்டல், சாவாமைக்கு உண்ணும் மருந்தாயினும் வேண்டும் பகுதியுடைத்தன்று,* (எ - று). 2

83. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(இ-ள்.) *நாடோறும் வந்தவிருந்தினரைப் போற்றுவானது ஆக்கம், வருத்த முற்றுக் கேடுபடுவதில்லை,* (எ - று). 3

84. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில்.

(இ - ள்.) *திருவினுள் மனம்பொருந்தி உறையும்; நல்லவிருந்தினரை முகம் பொருந்திப் போற்றுவானது மனையின்கண்,* (எ - று).

*இது கேடின்மையன்றிச் செல்வமுமுண்டாமென்றது.* 4

85. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம்.

(இ - ள்.) *விருந்தினரை யூட்டி மிக்க வுணவை யுண்ணுமவன் புலத்தின் கண், விளைதற் பொருட்டு விதைக்கவும் வேண்டுமோ? தானே விளையாதோ?*

*பொருள் வருவாயாக இயற்றுமிடம் நன்றாகப் பயன்படுமென்றவாறு.* 5

86. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா

னல்விருந்து வானத் தவர்க்கு.

(இ - ள்.) *வந்த விருந்தினரைப் போற்றி வாராத விருந்தினரது வரவு பார்த்திருக்குமவன், வானத்தவர்க்கு நல்விருந்தாவன்,* (எ - று).

*வரவுபார்த்தல் - விருந்தின்றி யுண்ணாமை.* 6

87. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன்.

(இ - ள்.) *விருந்தினர்க்கு அளித்ததனால் வரும் பயன் இன்ன அளவினை யுடைத்தென்று சொல்லலாவது ஒன்றில்லை; அவ்விருந்தினரின் தன்மை யாதோரளவிற்று அத்தன்மை யளவிற்று விருந்தோம்பலின் பயன்,* (எ - று). 7

88. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார்.

(இ - ள்.) *விருந்தினரைப் போற்றி யுபசரிக்க மாட்டாதார், வருந்தி யுடம்பொன்றையும் ஒம்பிப் பொருளற்றேமென் றிரப்பர்,* (எ - று) 8



89. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ணுண்டு.

(இ - ள்.) *உடைமையின்கண்ணே யில்லாமைபோல, விருந்தினர்க்கு அளித்தலைப் போற்றாத பேதைமை, பேதைமையார்மாட்டே யுளதாம்,* (எ - று) 9

90. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து.

(இ - ள்.) *எல்லா மலரினும் மெல்லிதாகிய அனிச்சப்பூ மோந்தாலல்லது வாடாது; விருந்தினரை முகந்திரிந்து நோக்க அவர் வாடுவர்,* (எ - று).

*இது முகநோக்கி னினிமை கூறவேண்டுமென்றது.* 10

---

## **6** - ம் அதிகாரம்.

## இனியவை கூறல்.

2

இனியவை கூறலாவது கேட்டார்க்கு மனமகிழுஞ் சொற்களைக் கூறுதல்.

92 91. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
இன்சொல னாகப் பெறின்.

(இ - ள்.) மனம் பொருந்திக் கொடுத்தலினும் நன்று; முகம் பொருந்தி இனிமைச்சொல் சொல்ல வல்லவனாயின், (எ - று) 1: 2

93 92. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம்.

(இ - ள்.) கண்ணாலே பொருந்தி இனிதாக நோக்கி மனத்தோடே பொருந்திய இன்சொல் சொல்ல வல்லவனாயின், அதுதானே யறமாம், (எ - று). 2: 3

96 93. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின்.

(இ - ள்.) நல்லவான சொற்களை யாராய்ந்து இனியவாகச் சொல்லுவானாயின், அதனாலே அறமல்லாதன தேய அறம் வளரும், (எ - று). 3: 6

95 94. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

(இ - ள்.) ஒருவனுக்கு அழகாவது தாழ்ச்சி யுடையனா யினிய சொற்களைக் கூற வல்லவனாதல்; பிறவாகிய அழகெல்லாம் அழகெனப்படா, (எ - று).
இது தாழ்ந்துக் கூறவேண்டு மென்பதும் அதனாலாம் பயனுங் கூறிற்று. 4: 5



98 95. சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும்.

(இ - ள்.) புன்மையுள் நின்று நீங்கிய இனிய சொற்கள், இம்மையின்கண்ணும் மறுமையின்கண்ணும் இன்பத்தைத் தரும், (எ - று) 8: 5

94 96. துன்புறாஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறாஉ மின்சொ லவர்க்கு.

(இ - ள்.) துன்பமுறுவிக்கின்ற நல்குரவு இல்லையாகும், யாவர்மாட்டுங் கூறு மின்பமுறுவிக்கின்ற இனியசொல்லை யுடையாரக்கு, (எ-று) : 4

97. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(இ - ள்) *பிறரால் விரும்பப்படுதலையும் பயந்து, பொருளையும் பயந்து அறத்தினையும் பயக்கும்; குணத்தினின்று நீங்காத சொல்,* (எ - று). 7

98. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்.

(இ - ள்) *இருவாறுபடச் சொன்ன மாற்றத்தினது உண்மைப் பொருளைக் கண்டார் கூறும் மெய்யாகிய சொற்களும் இன்சொலாதலானே அருளொடு பொருந்திக் குற்றமிலவாம்,* (எ - று).

*இஃது ஒருவனைக் கடிந்து சொல்லவேண்டிவிடத்தும் இன்சொல்லாலே கடிய வேண்டுமென்றது* 8

99. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

(இ - ள்.) *ஒருவன் இனியவாகச் சொல்லுஞ் சொற்கள் இன்பத்தைப் பயத்தலைக் காண்பான், அதற்கு மறுதலையாகிய வன்சொல்லை வழங்குவது எப் பயனை நோக்கியோ?* (எ - று). 9

100. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று.

(இ - ள்.) *பிறர்க்கினியவாகச் சொல்லுஞ் சொற்க ளின்பத்தைத் தருதலைக் கண்டவன் இனிய சொற்கள் இருக்கக் கடிய சொற்களைக் கூறுதல்; பழமுங் காயும் ஓரிடத்தே யிருக்கக் கண்டவன் பழத்தைக் கொள்ளாது காயைக் கொண்ட தன்மைத்து,* (எ - று). 10

இல்லறவியல் - **7** - வது செய்ந்நன்றி யறிதல். 21

**7 - ம் அதிகாரம்.**

## *செய்ந்நன்றி யறிதல்.*

*செய்ந்நன்றி யறிதலாவது பிறர் செய்த தீமையை மறந்து நன்மையை மறவாமை.*

101. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு.

(இ - ள்) தனக்குத் துன்பம் வந்தகாலத்து வலியாயினார் நட்பை விடா தொழிக ; எக்காலத்தும் குற்றமற்றாரது நட்பை மறவா தொழிக, (எ - று). 1 : 6

102. நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல
108 தன்றே மறப்பது நன்று.

(இ - ள்.) பிறர் செய்த நன்றியை மறப்பது என்றும் நன்றல்ல ; பிறர் செய்த தீமையை அன்றே மறப்பதன்றே நன்றாம், (எ - று).

இது தீமையை மறக்கவேண்டு மென்று கூறிற்று. 2 : 8

103. செய்யாதார் செய்த வுதவிக்கு வையகமும்
10! வானகமு மாற்ற லரிது.

(இ - ள்) முன்னொருதவி செய்யாதார்க்கு ஒருவன்செய்த வுதவிக்கு உலக முஞ் சுவர்க்கமும் நிறையாற்றுத லரிது, (எ - று). 3: 1

104. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி
103 னன்மை கடலிற் பெரிது.

(இ - ள்.) தமக்கொரு பயனை நோக்காதவராய்ச் செய்த வுபகாரத்தா னுண் டாய நன்மையை யாராயின், அதனு னுண்டாய நன்மை கடலினும் பெரிது, () 3

105. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு
102 ஞாலத்தின் மாணப் பெரிது.

(இ - ள்.) உதவவேண்டுங்காலம் தப்பாமற் செய்தவுதவி தான்சிறிதா யிருந்த தாயினும், உலகத்தினும் மிகப் பெரிது, (எ - று).

இது காலந் தப்பாமற் செய்த வுதவி உலகத்தினும் பெரிதென்றது. 5 : 2

106. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
104 கொள்வர் பயன்றெரி வார்.

(இ - ள்.) தினையளவு நன்றி செய்தாராயினும் அதனை யவ்வளவிற்கன்று நினையாது பனையளவாகக் கொள்வார், அதன் பயனை யறிபவர், (எ - று)

பனையளவு - அதனுயர்ச்சி. 6 : 4

107. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு.

(இ - ள்.) தங்கண் உற்ற துன்பத்தை நீக்கினவரது நட்பை அப் பிறப் பிலே யன்றி எழுமையிலுந் தோற்றும் பிறப்பெல்லாம் நினைப்பர் சான்றோர், 7

108. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து.

(இ - ள்.) முன்னே செய்த வுதவியின் அளவன்று பின்பு செய்யும் மாற் றுதவி; அவ்வுதவி செய்யப்பட்டவர் தன்மை எவ்வளவிற்று அவ்வளவிற்று அவர் செய்யும் மாற்றுதவி, (எ - று).

இது மாற்றுதவிக்கு அளவில்லை என்றது. 8

109. கொன்றன்ன வின்னா செயினு மவர்செய்த
வொன்றுநன் றுள்ளக் கெடும்.

(இ - ள்.) தமக்கு முன்பு நன்மை செய்தார் தம்மைக் கொன்றாலொத்த இன்னாமையைப் பின்பு செய்யினும், அவர் முன்பு செய்த நன்றி யொன்றை நினைக்க அவ்வின்னாமை யெல்லாங் கெடும், (எ - று). 9

110. எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள்.) எல்லா நன்மைகளையுஞ் சிதைத்தார்க்கும் பின்பொரு காலத்தே யாயினும் உய்வுண்டாம்; ஒருவன் செய்த நன்றியைச் சாவாக்கின மகனுக்கு ஒருகாலத்திலும் உய்தலில்லை, (எ - று). 10

---

## 8 - ம் அதிகாரம்.
## நடுவு நிலைமை.

நடுவுநிலைமையாவது நட்டார்மாட்டும் பகைவர்மாட்டும் ஒக்க நிற்குநிலைமை.

111. சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
118 கோடாமை சான்றோர்க் கணி.

(இ - ள்.) சமன்வரைப்பண்ணி யிரண்டுதலையுஞ் சீரொத்தால் தூக்கிப் பார்க்கப்படுகின்ற கோலைப்போல, வீக்கம் தாக்கமற்று ஒருவன் பக்கமாக நெஞ்சைக் கோடவிடாமை சான்றோர்க்கு அழகாவது, (எ - று).

இது நடுவுநிலைமை வேண்டுமென்றது. 6 : 1

இல்லறவியல் - 8 - வது - நடுவு நிலைமை. 23

112. சொற்கோட்ட மில்லது செப்ப மொருதலையா
119 வுட்கோட்ட மின்மை பெறின்.

(இ - ள்.) நடுவுநிலைமையாவது கோட்டமில்லாததாய சொல்லாம்; உறுதியாக மனக்கோட்ட மின்மையோடு கூடுமாயின், (எ - று).

இது நடுவுநிலைமையாவது செவ்வை சொல்லுத லென்பதூஉம் இருபொருட் பொதுமொழி கூறுதலன்றென்பதூஉம் கூறிற்று. 2 : 9

113. தகுதி யெனவொன்று நன்றே பகுதியாற்
111 பாற்பட் டொழுகப் பெறின்.

(இ - ள்) நடுவு நிலைமை யென்று சொல்லப்படுகின்ற தொன்று நலலதே; அவரவர் நிலைமைப்பகுதியோடே அறத்தின்பாற்பட்டு ஒழுகப் பெறுமாயின், () 1

114. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
120 பிறவுந் தமபோற் செயின்.

(இ - ள்.) வாணிகஞ் செய்வார்க்கு வாணிகமாம்; பிறர் பொருளையுந் தமது பொருள்போலப் பேணிச் சோர்வுபடாமற் செய்வாராயின், (எ - று).

வாணிகம் - இலாபம். 4 : 10

115. கேடும் பெருக்கமு மில்லல்ல நெஞ்சத்துக்
115 கோடாமை சான்றோர்க் கணி.

(இ-ள்) கேடுவருதலும் ஆக்கம் வருதலும் உலகத்தில்லையல்ல; அவ்விரண்டினுள்ளும் யாதானுமொன்று வந்த காலத்துத் தன்னெஞ்சு கோடாம லொழுகல் சான்றோர்க்கு அழகாம், (எ - று). 5

116. கெடுவாக வையா துலக நடுவாக
117 நன்றிக்கட் டங்கியான் றாழ்வு.

(இ - ள்) நன்மையின்கண்ணே நடுவாக நின்றவனுக்கு அது காரணமாகப் பொருட்கேடு உண்டாயின், அதனை உலகத்தார் கேடாகச் சொல்லார், ஆக்கத் தோடே யென்னுவர், (எ - று). 6 : 7

117. நன்றே தரினு நடுவிகந்தா மாக்கத்தை
113 யன்றே யொழிய விடல்.

(இ - ள்.) பெருமையே தரினும் நடுவுநிலைமையை நீங்கி வரும் ஆக்கத்தை அவ்வாக்கம் வருதற்குத் தொடக்கமான அன்றே யொழிய விடுக, (எ - று). 7 : 3

118. கெடுவல்யா னென்ப தறிகதன் னெஞ்ச
116 நடுவொரீஇ யல்ல செயின்.

(இ - ள்.) தனது நெஞ்சு நடுவுநிலைமையை நீங்கி நடுவல்லாதவற்றைச்செய்யு மாயின், அஃதேதுவாக எனக்குக் கேடு வருமென்று தானே யறிக, (எ - று). 8 : 6



119. தக்கார் தகவில ரென்ப தவரவ
114 ரெச்சத்தாற் காணப் படும்.

(இ - ள்.) செவ்வை யுடையார் செவ்வையிலரென்பது அவரவர் ஆசாரத் தொழிலினானே காணப்படும், (எ - று).

இது தமானவிலே நிற்பதல்லது தம் மக்களையும் விடாதென்பது கூறிற்று (இதனால் எச்சத்தால் என்பதற்கு மக்களானே என்றுரையிருக்கலாமென்பது விளங்குகின்றது.) 4 : 9

120. செப்ப முடையவ னாக்கஞ் சிதைவின்றி
112 யெச்சத்திற் கேமாப் புடைத்து.

(இ - ள்) நடுவு நிலைமை யுடையவனது செல்வம் தன்னளவிலுங் கேடின்றியே நின்று, தன் வழியுள்ளார்க்குங் கேடுவாராமற் காவலாதலையுடைத்து,(எ-று).
நடுவுநிலைமையுடையார் செல்வம் அழியாதென்றவாறு. 2 : 10

---

## 9 - ம் அதிகாரம்.
## அடக்கமுடைமை.

*அடக்கமுடைமையாவது மன மொழி மெய்களால் அடங்கி ஒழுகுதல்.*

121. காக்க பொருளா வடக்கத்தை யாக்க
122 மதனினூங் கில்லை யுயிர்க்கு

(இ - ள்.) *ஒருவன் தனக்குப் பொருளாக அடக்கத்தை யுண்டாக்குக. அவனுயிர்க்கு ஆக்கம் அதனின் மேற்பட்டது பிறிதில்லை, (எ - று).* 1

122. செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந்
123 தாற்றி னடங்கப் பெறின்.

(இ - ள்.) *அறியப்படுவனவும் அறிந்து அடக்கப்படுவனவும் அறிந்து நெறியினானே யடங்கப்பெறின், அவ்வடக்கம் நன்மை பயக்கும், (எ - று).*

*அறியப்படுவன - சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் அடக்கப்படுவன - மெய் வாய் கண் மூக்குச் செவி.* 2

123. ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி
126 னெழுமையு மேமாப் புடைத்து.

(இ - ள்) *ஒருபிறப்பிலே பொறிகளைந்தினையும் ஆமைபோல அடக்க வல்லவனாயின், அவனுக்கு அதுதானே எழுபிறப்பினும் காவலாதலை யுடைத்து.*



124. நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற
124. மலையினு மாணப் பெரிது.

(இ - ள்.) *தனது நிலையிற் கெடாதே யடங்கினவனது உயர்ச்சி மலையினும் மிகப் பெரிது, (எ - று).*

*நிலை - வன்னாச்சிரம தன்மம்.* 4

125. யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற்
127 சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

(இ-ள்.) *எல்லாவற்றையும் அடக்கிலராயினும் நாவொன்றினையும் அடக்குக; அதனை அடக்காக்காற் சொற்சோர்வுபட்டுத் தாமே சோகிப்பா ராதலான், (எ-று).*

*இது சோகத்தின்மாட்டே பிணிக்கப் படுவரென்றது.* 5

126. தீயினாற் சுட்டபு ணுள்ளாறு மாறாதே
129 நாவினாற் சுட்ட வடு.

(இ - ள்.) தீயினாற் சுட்டபுண் உள்ளாறித் தீரும்; நாவினாற் சுட்ட புண் ஒருகாலத்தினுந் தீராது, (எ - று). 6

127. ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி
128 னன்றாகா தாகி விடும்.

(இ - ள்.) ஒரு சொல்லேயாயினும் கேட்டார்க்கு இனிதாயிருந்து தீயசொல்லின் பொருளைப் பயக்குமாயின், நன்மையாகாதாகியே விடும், (எ - று).

இது சால மொழிகூறினாலுந் தீதாமென்றது. 7

128. எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ்
125 செல்வர்க்கே செல்வந் தகைத்து.

(இ - ள்.) அடங்கியொழுகல் எல்லார்க்கும் நன்மையாம்; அவரெல்லாரினுஞ் செல்வமுடையார்க்கே மிகவும் நன்மையுடைத்தாம், (எ - று).

செல்வம்-மிகுதி. 8

129. கதங்காத்துக் கற்றடங்க லாற்றுவான் செவ்வி
130 யறம்பார்க்கு மாற்றி னுழைந்து.

(இ - ள்.) வெகுளியும் அடக்கிக் கல்வியுமுடையனாய் அதனால் வரும் பெருமிதமும் அடக்கவல்லவன்மாட்டு, அறமானது நெறியானே வருந்தித் தானே வருதற்குக் காலம் பார்க்கும், (எ - று).

இஃது அடக்கமுடையார்க்கு அறமுண்டாமென்றது. 9

4



130. அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
121 யாரிரு ளுய்த்து விடும்.

(இ - ள்.) மன மொழி மெய்களை யடக்கி யொழுக அவ்வடக்கம் தேவரிடத்தே கொண்டு செலுத்தும்; அவற்றை யடக்காதொழிய அவ்வடங்காமை தானே நரகத்திடைக் கொண்டு செலுத்திவிடும், (எ - று).

மேல் பலவாகப் பயன் கூறினாராயினும், ஈண்டு அடக்கத்திற்கும் அடங்காமைக்கு மிதுவே பயனென்று தொகுத்துக் கூறினர். 10

## **10** - ம் அதிகாரம்.

## ஒழுக்கமுடைமை.

*ஒழுக்கமுடைமையாவது தத்தம் குலத்திற்கும் இல்லறத்திற்கும் ஏற்ற ஒழுக்கமுடையாராதல்.*

131. பரிந்தோம்பிக் காக்க வொழுக்கந் தெரிந்தோம்பித்
தேரினு மஃதே துணை.

(இ - ள்.) *வருந்திப் போற்றி யொழுக்கத்தினைக் காக்க; எல்லா வறங்களினும் நல்லதனைத் தெரிந்து அதனையுந் தப்பாமலாராய்ந்து பார்ப்பினும் தமக்கு அவ்வொழுக்கமே துணையாமாதலால்,* (எ - று).

*இஃது ஒழுக்கங் காக்கவேண்டுமென்றது.* 1

132. உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங்
கல்லா ரறிவிலா தார்.

(இ - ள்.) *அறிவிலாதார் பல நூல்களைக் கற்றாலும்,உயர்ந்தாரோடு பொருந்த ஒழுகுதலை அறியார்,* (எ - று).

*இஃது ஒழுக்கமாவது உயர்ந்தாரொழுகின நெறியில் ஒழுகுதலென்பதூஉம் அவ்வொழுக்கம் கல்வியினும் வலியுடைத்தென்பதூஉம் கூறிற்று.* 2

133. மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

(இ - ள்.) *பிராமணன் வேதத்தினை ஓதி மறந்தானாயினும், பின்னும் ஓதிக்கொள்ளலாம்; ஒழுக்கங் குறையுமாயின் குலங்கெடும்,* (எ - று).

*இஃது ஒழுக்கம் கல்வியினும் வலிதானவாறு கூறிற்று.* 3



134. ஒழுக்கத்தி னொல்கா ருரவோ ரிழுக்கத்தி
னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) *ஒழுக்கத்தினின்று நீங்கார் அறிவுடையார்; அதனைத் தப்பினால் குற்றம் வருதலை யறிந்து,* (எ - று).

இஃது இதனை அறிவுடையார் தவிராரென்றது. குற்றம் வருதல் பின்னே காணப்படும். 4

135. ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
133 மிழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்.) ஒருவன் இழிந்த குலத்தானாயினும் ஒழுக்க முடையவனாக உயர் குலத்தனாம்; அதனைத் தப்பி ஒழுகுவனாயின், உயர்குலத்தனாயினும் இழிகுலத் தானாயே விடும், (எ - று).

இது குலங்கெடுமென்றது. 5

136. அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
135 யொழுக்க மிலான்க ணுயர்வு.

(இ - ள்.) மனக்கோட்ட முடையவன்மாட்டு ஆக்கம் இல்லை யானாற்போல' ஒழுக்கமில்லாதான்மாட்டு மிகுதியில்லையாம், (எ - று).

இஃது உயர்ச்சியில்லையா மென்றது. 6

137. ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி
137 னெய்துவ ரெய்தாப் பழி.

(இ - ள்.) ஒழுக்கத்தாலே தமக்கு எய்தாத மேம்பாட்டை எய்துவர்; அஃதின்மையாலே தமக்கு அடாதபழியை எய்துவர், (எ - று). 7

138. நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கந் தீயொழுக்க
138 மென்று மிடும்பை தரும்.

(இ - ள்.) முத்திக்கு விதையாகும் நல்லொழுக்கம்; தீயவொழுக்கம் என்றும் இடும்பையைத் தரும், (எ - று).

தீயவொழுக்கம் நாடோறுந் துன்பத்தையே தருமென்றவாறு. என்றும் - இருமையின்கண்ணுமென்றவாறு. 8

139. ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
139 வழுக்கியும் வாயாற் சொலல்.

(இ - ள்.) தீமைபயக்குஞ் சொற்களை மறந்தும் தம்வாயாற் சொல்லுதல், ஒழுக்க முடையார்க்கு இயலாது, (எ - று). 9

28 திருக்குறள் - அறத்துப்பால.

140. ஒழுக்கம் விழுப்பந் தரலா னொழுக்க
131 முயிரினு மோம்பப் படும்.

(இ - ள்.) ஒழுககமுடைமை சிறமையைத தருதலானே, அவவொழுககத தைத தனது உயிரைககாட்டிலும மிகக காககவேணடும, (எ - று)

இஃது ஒழுககம மேறகூறிய தனமையெலலாந தருமாதலின, அதனைத தபபாமற செயயவேணடுமெனறு வலியுறுததிறறு 10

---

## 11 - ம் அதிகாரம்.

## பிறனில் விழையாமை.

பிறனில விழையாமையாவது பிறனுடைய மனையாளது தோள நலம விரும பாமை

141. அறனியலா னில்வாழவா னென்பான் பிறனியலாள
141 பெண்மை நயவா தவன்.

(இ - ள்) அறநெறியானே இலவாழவானெனறு சொலலபபடுவான, பிறனவழியானவளது பெணமையை விருமபாதவன, (எ - று)

இது பிறனில விழையாமை வேணடும எனறது 1

142. பிறன்பொருளாட் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்
141 தறம்பொருள கண்டாரக ணில்.

(இ - ள்) பிறனுடைய பொருளாயிருபபவளை விருமபியொழுகுகினற அறியாமை, உலகதது அறமும பொருளும அறிநதாரமாட்டு இலலையாம, (எ - று) 2

143. அறன்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
142 நின்றாரிற் பேதையா ரில்.

(இ - ள்) காமததினகணணே நினறா எலலாரினும், பிறனொருவன கடைததலை பறறி நினறவாகளைபபோல அறியாதாரிலலை, (எ - று) 3

144. எனைத்துணைய ராயினு மென்னாந் தினைத்துணையுந்
144 தேரான் பிறனில் புகல்.

(இ - ள்) எலலாவமைதியினையும உடையராயினும, இனையளவுந தேராது பிறனுடைய இலலிலே புகுதல யாதாயப பயககுமோ? (எ - று)

பிறனில விழைவால வரும குறறங கூறுவார முறபட வெலலாக குணமு மழியுமெனறு கூறினார 4

145. விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரிற்
143 றீமை புரிந்தொழுகு வார்.

(இ - ள்.) தம்மைத் தெளிந்தாரில்லின்கண்ணே தீமையைப் பொருந்தி ஒழுகுவார் மெய்யாக, செத்தாரின் வேறல்லர், (எ - று)

இஃது அறம் பொருளின்பம் எய்தாமையின், பிணத்தோ டொப்பரென்றது.

146. எளிதென வில்லிறப்பா னெய்துமெஞ் ஞான்றும்
145 விளியாது நிற்கும் பழி.

(இ-ள்.) தனக்கு எளிதென்று நினைத்துப் பிறனுடைய இல்லின்கண்ணே மிகுமவன் எல்லா நாளும் அழியாது நிற்கும் பழியைப் பெறுவான், (எ - று).

இது பழியுண்டா மென்றது. 6

147. பகைபாவ மச்சம் பழியென நான்கு
14[illegible] மிகவாவா மில்லிறப்பான் கண்.

(இ - ள்.) பகையும் பாவமும் அச்சமும் பழியுமென்னும் நான்கு பொருளும் நீங்காவாம்; பிறனில்லின்கண்ணே மிகுவான் மாட்டு, (எ - று). 7

148. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
148 கறனென்றோ வான்ற வொழுக்கு.

(இ - ள்.) பிறனது மனையாளைப் பாராத பெரியவாண்மைதானே, சான்றோர்க்கு அறனும் அமைந்த வொழுக்கமுமாம், (எ - று).

இஃது இதனை விரும்பாமைதானே அறனும் ஒழுக்கமு மென்றது. 8

149. நலக்குரியார் யாரெனி னாமநீர் வைப்பிற்
149 பிறற்குரியா டோடோயா தார்.

(இ - ள்.) நலத்துக்கு உரியார் யாரெனின், நினைத்ததைத் தருகின்ற நீர் சூழ்ந்த வுலகத்தில் பிறனுக்கு உரியவளது தோளைத் தீண்டாதார், (எ - று).

நலக்குரியார் - விரும்புதற்குரியார். 9

150. அறன்வரையா னல்ல செயினும் பிறன்வரையாள்
150 பெண்மை நயவாமை நன்று.

(இ - ள்.) அறத்தை வரையாதே அறமல்லாதன செய்யினும், பிறனிடத்து ஆளானவளது பெண்மையை விரும்பாமை நன்று, (எ - று).

இஃது ஓரறமுஞ் செய்திலனாயினும நன்மை பயக்குமென்றது. 10



## 12 - ம் அதிகாரம்.

## பொறையுடைமை.

*பொறையுடைமையாவது தமக்குத் துன்பஞ் செய்தாரைத் தாமுந் துன்பஞ் செய்யாது அவர்மாட்டுச் சென்ற வெகுளியை மீட்டல்.*

151. பொறுத்த லிறப்பினை யென்று மதனை
152 மறத்த லதனினு நன்று.

(இ - ள்.) *பிறர் செய்த மிகையினை யென்றும் பொறுத்தல் நன்று; அதனை மறத்தல் அப் பொறையினும் நன்று, (எ - று).* 1

152. திறனல்ல தற்பிறர் செய்யினு நோநொந்
~~154~~ 157 தறனல்ல செய்யாமை நன்று.

(இ - ள்.) *தகுதியல்லாதவற்றைத் தனக்குப் பிறர்செய்தாராயினும்; அவற்றைத் தானுஞ் செய்தால் அவர்க்கு உளதாம் நோவுக்கு நொந்து அறமல்லாதவற்றைச் செய்யாமை நன்று, (எ - று).* 2

153. நிறையுடைமை நீங்காமை வேண்டிற் பொறையுடைமை
154 போற்றி யொழுகப் படும்.

(இ - ள்.) *தனக்கு நிறையுடைமை நீங்காதொழிய வேண்டுவனாயின், பொறையுடைமையைப் பாதுகாத்தொழுக வேண்டும், (எ - று).*

*நிறையென்பது காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம்.* 3

154. அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
151 யிகழ்வார்ப் பொறுத்த றலை.

(இ - ள்.) *தன்னை யகழ்வாரைத் தரிக்கின்ற நிலம்போலத், தம்மை யிகழுமவர்களைப் பொறுத்தல் தலைமையாம், (எ - று).*

*இது பொறுத்தாரென் றிகழ்வாரில்லை; அதனைத் தலைமையாகக் கொள்வார் உலகத்தாரென்றது.* 4

155. மிகுதியான் மிக்கவை செய்தாரைத் தாந்தம்
158 தகுதியான் வென்று விடல்.

(இ - ள்.) *தமது செல்வ மிகுதியாலே மிகையானவற்றைச் செய்தவர்களைத் தாங்கள் தமது பொறையினாலே வென்று விடுக, (எ - று).*

*இது பொறுத்தாரென்பது தோல்வியாகாது; அதுதானே வெற்றியாமென்றது.* 5



156. இன்மையு ளின்மை விருந்தொரால் வன்மையுள்
153 வன்மை மடவார்ப் பொறை.

(இ - ள்.) *வலியின்மையுள் வைத்த வலியின்மையாவது புதுமையை நீத்தாமை; வலியுடைமையுள் வைத்த வலியுடைமையாவது அறியாதாரைப் பொறுத்தல், (எ - று).*

*புதுமை யென்றது கேட்டறியாதது. நீக்காமை - பொறுமை.* 6

157. ஒறுத்தாரை யொன்றாக வையாரே வைப்பர்
155 பொறுத்தாரைப் பொன்போற் பொதிந்து.

(இ - ள்.) *தமக்குத் துன்பஞ் செய்தாரை மாறாக ஒறுத்தாரை யொரு பொருளாக மதித்து வையார்; பொறுத்தாரைப் பொன்னைப் பொதிந்து வைத்தாற்போலப் போற்றுவார் உலகத்தார், (எ - று).* 7

158. ஒறுத்தார்க் கொருநாளை யின்பம் பொறுத்தார்க்குப்
156 பொன்றுந் துணையும் புகழ்.

(இ - ள்.) *ஒறுத்தவர்க்கு அற்றைநாளை யின்பமே உண்டாம்; பொறுத்தவர்க்குத் தாம் சாமளவும் புகழுண்டாம், (எ - று).*

*இது புகழுண்டா மென்றது.* 8

159. உண்ணாது நோற்பார் பெரியர் பிறர்சொல்லு
160 மின்னாச்சொ னோற்பாரிற் பின்.

(இ - ள்.) *உண்ணாது பொறுப்பார் எல்லாரினும் பெரியர்; அவர் பெரியாராவது பிறர் சொல்லுங் கடுஞ்சொல்லைப் பொறுப்பாரின் பின், (எ - று).*

*இது தவம் பண்ணுவாரினும் பெரியரென்றது.* 9

160. துறந்தாரிற் றூய்மை யுடையா ரிறந்தார்வா
159 யின்னாச்சொ னோக்கிற் பவர்.

*(இ - ள்.) மிகையாய்ச் சொல்லுவாரது தீச்சொல்லைப் பொறுக்குமவர், துறந்தவர்களைப் போலத் தூய்மை யுடையார், (எ - று).*

*இது பற்றறத் துறந்தவரோ டொப்பரென்றது.* 10

---

## 13 - ம் அதிகாரம்.

## அழுக்காறாமை.

*அழுக்காறாமையாவது பிறராக்க முதலாயின கண்டு பொறாமையால் வருகின்ற மனக்கோட்டத்தைச் செய்யாமை.*

161. ஒழுக்காறாக் கொள்க வொருவன்றன் னெஞ்சத்
161 தழுக்கா றிலாத வியல்பு.



(இ - ள்.) *ஒருவன் தன்னெஞ்சத்து அழுக்காறு இல்லாதவியல்பைத், தனக்கு ஒழுக்க நெறியாகக் கொள்க,* (எ - று).

*இஃது அழுக்காறு தவிரவேண்டு மென்றது.* 1

162. விழுப்பேற்றி னஃதொப்ப தில்லையார் மாட்டு
162 மழுக்காற்றி னன்மை பெறின்.

(இ - ள்.) *விழுமிய பேறுகளுள், யார்மாட்டும் அழுக்காறு செய்யாமையைப் பெறுவனாயின், அப்பெற்றியினை யொப்பது பிறிதில்லை,* (எ - று).

*இஃது அழுக்காறு செய்யாமை யெல்லா நன்மையினும் மிக்கதென்றது.* 2

163. அழுக்காற்றி னல்லவை செய்யா ரிழுக்காற்றி
164 னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) *அழுக்காற்றினானே அறமல்லாதவற்றைச் செய்யார்; நல்லோர் அவ்வறத்தைத் தப்பின நெறியினாற் குற்றம் வருவதை யறிந்து,* (எ - று). 3

164. அவ்விய நெஞ்சத்தா னாக்கமுஞ் செவ்வியான்
169 கேடு நினைக்கப் படும்.

(இ - ள்.) *அழுக்காற்று நெஞ்சத்தானுடைய ஆக்கமும் செவ்வியநெஞ்சத்*

தானுடைய கேடும் விசாரிக்கப்படும், (எ - று). 4

165. அழுக்கற் றகன்ரு மில்லையஃ தில்லார்
170 பெருக்கத்திற் றீர்ந்தாரு மில்.

(இ - ள்.) அழுக்காற்றைச் செய்து பெரியாராயினரும் இல்லை; அச் செயலிலாதார் பெருக்கத்தி னீங்கினரு மில்லை, (எ - று). 5

166. அறனுக்கம் வேண்டாதா னென்பான் பிறனுக்கம்
163 பேணு தழுக்கறுப் பான்.

(இ - ள்.) தனக்கு அறனுகிய வாழ்வு வேண்டாதானென்று சொல்லப்படுவான்; பிறனுடைய ஆக்கத்தை விரும்பாதே அழுக்காறு செய்வான், (எ - று).

இஃது அழுக்காறுடையார்க்குப் புண்ணிய மில்லையாமென்று கூறிற்று. 6

167. கோடுப்ப தழுக்கறுப்பான் சுற்ற முடுப்பதூஉ
166 முண்பதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) பிறனொருவன் மற்றொருவனுக்குக் கொடுப்பதனை அழுக்காற்றினாலே விலக்குமவனது சுற்றம் உடுப்பதும் உண்பதும் இன்றிக்கெடும், (எ-று).

இது நல்குரவு தருமென்றது 7

* இது பரிமேலழகருரை.



168. அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ
167 டவ்வையைக் காட்டி விடும்.

(இ - ள்) அழுக்காறுடையானைத் திருமகள் தானும் அழுக்காறு செய்து, தன் தவ்வையாகிய மூதேவிக்குக் காட்டி, இவன்பாற் செல்லென்று போம், (எ- று)

இது நல்குரவிற்குக் காரணங் கூறிற்று. 8

169. அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
168 தீயுழி யுய்த்து விடும்.

(இ - ள்.) அழுக்காறென்று சொல்லப்படுகின்ற வொருபாவி செல்வத்தையுங் கெடுத்துத் தீக்கதியுள்ளுஞ் கொண்டு செலுத்திவிடும், (எ - று).

ஒரு பாவி - நிகரில்லாத பாவி. இது செல்வங் கெடுத்தலே யன்றி நரகமும் புகுவிக்கு மென்றது.

170. அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
165 வழுக்கியுங் கேடீன் பது.

(இ - ள்.) அழுக்காறுடையார்க்கு அவ்வழுக்காறு தானே அமையும்; பகைவர் கேடுபயத்தல் தப்பியும் கெடுப்பதற்கு, (எ - று).

இஃது உயிர்க்கு கேடுவருமென்று கூறிற்று. 10

---

## 14 - ம் அதிகாரம்.

## வெஃகாமை.

வெஃகாமையாவது பிறர் பொருளை விரும்பாமை.

171. வேண்டற்க வெஃகியா மாக்கம் விளைவயின்
177 மாண்டற் கரிதாம் பயன்.

(இ - ள்.) பிறர்பொருளை விரும்பிப் பெறுகின்ற ஆக்கத்தை வேண்டா தொழிக; அது பயன்படும் காலத்தில் ஆகும் பயன் நன்றாத லில்லையாதலான். 1

172. அஃகி யகன்ற வறிவென்னும் யார்மாட்டும்
175 வெஃகி வெறிய செயின்.

(இ - ள்.) நுண்ணிதாகப் பரந்த அறிவுடையானாயினும் அதனாற் பயன் யாதாம்? எல்லார்மாட்டும் பொருளை விரும்பி யீரமில்லாதன செய்வனாயின், ()

இஃது அறிவுடையார் செய்யாரென்றது. 2

5



173. இலமென்று வெஃகுதல் செய்யார் புலம்வென்ற
174 புன்மையில் காட்சி யவர்.

(இ - ள்.) வறிய மென்று பிறர்பொருளை விரும்புதல் செய்யார்; ஐம்புலனையும் வென்ற புன்மையிலாத தெளிவுடையார், (எ - று).

இது தெளிவுடையார் செய்யா ரென்றது. 3

174. சிற்றின்பம் வெஃகி யறனல்ல செய்யாரே
173 மற்றின்பம் வேண்டு பவர்.

(இ - ள்.) சிற்றின்பமாகிய பொருளை விரும்பி அறனல்லாதவற்றைச் செய்

யார்; பேரின்பமாகிய வீடுபேற்றைக் காமிப்பவர், (எ - று).

இது வீடுபெற வேண்டுவார் செய்யாரென்றது 4

175. படுபயன் வெஃகிப் பழிப்படுவ செய்யார்
172 நடுவன்மை நாணு பவர்.

(இ - ள்.) தமக்குப் பயனுண்டாக வேண்டிப் பழியொடுபடுவன செய்யார்; நடுவன்மைக்கு நாணுபவர், (எ - று).

இது நடுவுநிலைமை வேண்டுபவர் செய்யாரென்றது. 5

176. அருள்வெஃகி யாற்றின்க ணின்றான் பொருள்வெஃகிப்
176 பொல்லாத சூழக் கெடும்.

(இ - ள்.) அருளை விரும்பி யறநெறியிலே நின்றவனும், பொருளை விரும்பி அறனல்லாதவற்றைச் சூழக் கெடுவன், (எ - று).

இஃது அருளுடையானும் கெடுவனென்றது. 6

177. நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
171 குற்றமு மாங்கே தரும்.

(இ - ள்.) நடுவுநிலைமையின்றி மிக்கபொருளை விரும்புவானாயின், அதனானே குலமுங்கெட்டு அவ்விடத்தே குற்றமு முண்டாம், (எ - று).

இது சந்தான நாச முண்டாமென்றது. 7

178. இறலீனு மெண்ணாது வெஃகின் விறலீனும்
180 வேண்டாமை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) விசாரியாதே பிறர் பொருளை விரும்புவானாயின், அது கேட்டைத் தரும்; அதனை வேண்டாமையாகிய பெருமிதம் ஆக்கத்தைத்தரும், (எ - று)

இஃது உயிர்க்குக் கேடு தருமென்றது 8

இல்லறவியல் - **15** - வது புறங்கூறாமை. 35

179. அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை
178 வேண்டும் பிறன்கைப் பொருள்.

(இ - ள்.) செல்வஞ் சுருங்காமைக்குக் காரண மியாதோவெனின், பிறன் வேண்டுங் கைப்பொருளைத் தான் வேண்டாமை, (எ - று).

இது செல்வ மழியாதென்றது. 9

180. அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேருந்
179 திறனறிந் தாங்கே திரு.

(இ - ள்.) அறத்தை யறிந்து பிறர் பொருளை விரும்பாத அறிவுடையாரைத் திருமகள் தானே தகுதியறிந்து அப்போதே சேரும், (எ - று).

அறனறிதல் - விரும்பாமை யென்றறிதல். இது செல்வ முண்டாமென்றது.

---

## 15 - ம் அதிகாரம்.

## புறங் கூறாமை.

புறங்கூறாமையாவது யாவரையும் இகழ்ச்சியானவர்றைப் புறத் துரையாமை.

181. கண்ணின்று கண்ணறச் சொல்லினுஞ் சொல்லற்க
184 முன்னின்று பின்னோக்காச் சொல்.

(இ - ள்.) ஒருவன் கண்ணெதிரே நின்று கண்பார்த்த லொழியச்சொல்லினும் அமையும்; பிற்காலத்து அவன் முன்னே நின்று எதிர்முகம் நோக்க வொண்ணாத சொல்லைச் சொல்லா தொழிக, (எ - று).

இது புறங் கூறுதல் தவிர்க வென்றது; இதனாற் கடிய சொற் கூறலும் ஆகாதென்றது. 1

182. புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலிற் சாத
183 லறங்கூறு மாக்கந் தரும்.

(இ - ள்.) காணாவிடத்துப் புறஞ்சொல்லிக் கண்டவிடத்துப் பொய்செய்து உயிரோடு வாழ்தலின், புறங்கூறா திருந்து நல்குரவினாற் சாதல் அறநூல் சொல்லுகின்ற ஆக்க மெல்லாந் தரும், (எ - று). 2

183. அறங்கூறா னல்ல செயினு மொருவன்
181 புறங்கூறா னென்ற லினிது.

(இ - ள்.) ஒருவன் அறத்தை வாயாற் சொல்லுதலுஞ் செய்யானாய்ப் பாவஞ் செய்யினும், பிறரைப் புறஞ் சொல்லானென்று உலகத்தாரால் கூறப் படுதல் நன்றாம், (எ - று).

இது பாவஞ்செய்யினும் நன்மை பயக்கும் என்றது. 3



184. அறஞ்சொல்லு நெஞ்சத்தா னன்மை புறஞ்சொல்லும்
185 புன்மையாற் காணப் படும்.

(இ - ள்.) ஒருவன் அறத்தை நினைக்கின்ற மனமுடையனல்லாமை, அவன் பிறரைப் புறஞ்சொல்லும் புல்லியகுண மேதுவாக அறியப்படும், (எ - று).

*இஃது இதனைச் சொல்லுவார் அறமறியா ரென்றது.* 4

185. அறனழீஇ யல்லவை செய்தலிற் றீதே
182 புறனழீஇப் பொய்த்து நகை.

(இ - ள்) *அறத்தை யழித்து அறமல்லாதவற்றைச் செய்வதனிலும் தீது, ஒருவனைக் காணாத விடத்து இழித்துரைத்துக் கண்டவிடத்துப் பொய் செய்து நகுதல்,* (எ - று).

*இது பாவத்ினும் மிகப் பாவமென்றது* 5

186. பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
187 நட்பாட றேற்றா தவர்.

(இ - ள்.) *கெடும்படி சொல்லித் தங் கேளிரானாரைப் பிரிப்பர்; மகிழச் சொல்லி நட்பாடலை உயாவு பண்ண மாட்டாதார,* (எ - று).

*இது நட்டவரை யிழப்பர் என்றது* 6

187. துன்னியார் குற்றமுந் தூற்று மரபினா
188 ரென்னைகொ லேதிலார் மாட்டு.

(இ - ள்.) *தம்மோடு செறிந்தார் குற்றத்தையும் பிறர்க்கு உரைக்கின்ற சேதியை யுடையார், செறிவில்லாதாரமாட்டு யாங்ஙனஞ் செய்வரோ?* (எ - று)

*இது யாவரோடும் பற்றிலரென்றது.* 7

188. அறனோக்கி யாற்றுங்கொல் வையம் புறனோக்கிப்
189 புன்சொ லுரைப்பான் பொறை.

(இ - ள்.) *பிறனில்லாதவிடம் பார்த்துப் புறஞ்சொற் கூறுவானது உடற் பாரத்தை நிலம் தானே அறத்தை நோக்கிப் பொறுத்ததாம்; அல்லது போக்கும்,* (எ - று).

*இது புறங்கூறுவார்க்குத் துணையாவாரில்லை யென்றது.* 8

189. பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளுந்
186 திறன்றெரிந்து கூறப் படும்.

(இ - ள் ) *பிறனுடைய பழியைச் சொல்லுமவன், தனக்குண்டான பழிகளிலுஞ் சிலவற்றை வேறுபடத் தெரிந்து பிறரால் சொல்லப்படுவன்,* (எ - று).

190. ஏதிலார் குற்றம்போற் றங்குற்றங் காண்கிற்பிற்
190 றீதுண்டோ மன்னு முயிர்க்கு.

*(இ - ள்.) அயலார் குற்றம்போலத் தமது குற்றத்தையுங் காண வல்லாராயின், நிலைபெற்ற வுயிர்க்கு வருந் தீமை யுண்டோ? (எ - று).*

*இது காண்பாராயின், சொல்லாரென்று புறஞ் சொல்லாமைக்குக் காரணங் கூறிற்று.* 10

---

## 16 - ம் அதிகாரம்.
## பயனில சொல்லாமை.

*பயனில சொல்லாமையாவது கேட்டார்க்குந் தனக்கும் நற்பயன்படாத சொற்களைக் கூறாமை.*

191. சொல்லுக சொல்லிற் பயனுடைய சொல்லற்க
200 சொல்லிற் பயனிலாச் சொல்.

*(இ - ள்.) சொல்லுவனாயின் பயனுடைய சொற்களைச் சொல்லுக; சொற்களிற் பயனில்லாத சொற்களைச் சொல்லா தொழிக, (எ - று).*

*இது பயனில சொல்லாமை வேண்டுமென்றது.* 1

192. பயனில பல்லார்முற் சொல்ல னயனில
192 நட்டார்கட் செய்தலிற் றீது.

*(இ - ள்.) பயனில்லாதவற்றைப் பலர் முன்பு கூறுதல், விருப்பமில்லாதவற்றை நட்டார்மாட்டுச் செய்தலினுந் தீதே, (எ - று).*

*இது பயனில சொல்லல் இம்மை மறுமை யிரண்டின்கண்ணுந் தீமை பயக்குமென்றது.* 2

193. நயனில னென்பது சொல்லும் பயனில
193 பாரித் துரைக்கு முரை.

*(இ - ள்.) நயனுடைய னல்லனென்பதனை யறிவிக்கும்; பயனில்லாதவற்றைப் பரக்க விட்டுச் சொல்லுஞ் சொற்கள், (எ - று).*

*இது பயனில சொல்வார் இம்மையின்கண் பிறராலியம்பப்படாரென்றது.* 3

194. நயன்சாரா நன்மையி னீக்கும் பயன்சாராப்
194 பண்பிற்சொற் பல்லா ரகத்து.

(இ - ள்) ஒருவன் ஒரு பயனைச் சாராத பண்பில்லாச் சொல்லைப் பல ரிடத்துக் கூறுவானாயின், அவன் நடுசாராது நன்மையி னீங்கும், (எ - று).

இது விரும்பப்படாமையுமன்றி நன்மையும் பயவாதென்றது. 4



195. சீர்மை சிறப்போடு நீங்கும் பயனில
195 நீர்மை யுடையார் சொலின்.

(இ-ள்) பயனிலவாதவற்றை நீர்மையுடையார் கூறுவாராயின், அவர்க்கு உண்டான சீர்மையுஞ் சிறப்பும் போம், (எ - று)

இது நீர்மையுடையா ராயினும் எல்லா நன்மையும் போமென்றது 5

196. பல்லார் முனியப் பயனில சொல்லுவா
191 னெல்லாரு மெள்ளப் படும்

(இ - ள்) பயனில்லாதவற்றைப் பலர் வெறுக்கச் சொல்லுபவன், எல்லா ராலும் இகழப்படுவன், (எ - று) 6

197. பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
196 மக்கட் பதடி யெனல்.

(இ - ள்) பயனில்லாத சொல்லைக் கொண்டாடுவானை மகனென்னு தொழிக, மக்களில் பதரென்று சொல்லுக (எ - று)

இது மக்கட் பண்பிலனென்றது 7

198. அரும்பய னாயு மறிவினார் சொல்லார்
198 பெரும்பய னில்லாத சொல்.

(இ - ள்) அரிய பொருளை யாராயும் அறிவினையுடையார் சொல்லார் பெரிய பயனில்லாத மொழிகளை, (எ - று)

இது மேற் கூறிய குற்றமெல்லாம் பயத்தலின், இதனை யறிவுடையார் கூறாரென்றது 8

199. பொருடீர்ந்த பொச்சாந்துஞ் சொல்லார் மருடீர்ந்த
149 மாசறு காட்சி யவர்.

(இ - ள்) பொருளில்லாத சொல்லை மறந்துஞ் சொல்லார், மயக்கந் தீர்ந்த

குற்றமற்ற தெளிவினை யுடையார், (எ - று)

இது தெளிவுடையார் கூறுமென்றது. 9

200. நயனில சொல்லினுஞ் சொல்லுக சான்றோர்
197 பயனில சொல்லாமை நன்று.

(இ - ள்) சான்றோர் நயனில்லாதவற்றைச் சொல்லினுஞ் சொல்லுக, அமையும், பயனில்லாதவற்றைச் சொல்லாமை நன்று, (எ - று)

இது சான்றோர்க்கு ஆகாதென்றது 10

---

## இல்லறவியல் - **17** - வது தீவினையச்சம். 39

## **17** - ம் அதிகாரம்.

## தீவினையச்சம்.

*தீவினையச்சமாவது தீவினைகளைப் பிறர்க்குச் செய்யாமை.*

201. தன்னைத்தான் காதல னாயி னெனைத்தொன்றுந்
209 துன்னற்க தீவினைப் பால்.

(இ - ள்.) தனக்குத் தான் நல்லவனாயின், யாதொன்றாயினுந் தீவினைப் பகுதியாயினவற்றைப் பிறர்க்குச் செய்யாதொழிக, (எ - று).

இது தீவினைக்கு அஞ்சவேண்டுமென்றது. 1

202. எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை
207 வீயாது பின்சென் றடும்

(இ - ள்.) எல்லாப்பகையும் உற்றார்க்கும் உய்தியுண்டாம்; தீவினை யாகிய பகை நீங்காது என்றும் புகதழிப் புகுந்து கொல்லும், ( எ - று).

அஃதாமாறு பின் கூறப்படும் 2

203. தீயவை செய்தார் கெடுத னிழறன்னை
208 வீயா தடியுறைந் தற்று.

(இ - ள்.) தீயவானவற்றைப் பிறர்க்குச் செய்தார் கெடுதல், நிழல் தன்னை நீங்காதே உள்ளடியின்கீழ் ஒதுங்கினாற் போலும், (எ - று).

மேல் வினைப்பகை பின் சென்றடுமென்றார் அஃதடுமாறு காட்டினார் 3

204. மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழி
204 னறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

(இ - ள்.) பிறனுக்குக் கேட்டை மறந்துஞ் சூழாதொழிக; சூழ்வனாயின், அவனுற் சூழப்பட்டவன் அதற்கு மாறாகக் கேடு சூழ்வதன்முன்னே சூழ்ந்தவனுக்குக் கேட்டைத் தீமை செய்தார்க்குத் தீமை பயக்கும் அறந்தானே சூழும், (எ - று).

இது தீமை நினையினுங் கேடு தருமென்றது. 4

205. இலமென்று தீயவை செய்யற்க செய்யி

205 னிலனுகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) நல்கூர்ந்தேமென்று நினைத்துச் செல்வத்தைக் கருதித் தீவினையைச் செய்யாதொழிக; செய்வனாயின், பின்பும் நல்குரவினனாவன்; அது செல்வம் பயவாது, (எ-று).

இது வறுமை தீரத் தீமை செய்யினும் பின்பும் வறியனாகுமென்றது. 5



206. தீப்பால தாண்பிறர்கட் செய்யற்க நோய்ப்பால

206 தன்னை யடல்வேண்டா தான்.

(இ - ள்.) தன்னைத் துன்பப்பகுதியானவை கலிதல் வேண்டாதவன், தீமையாயினவற்றைத் தான் பிறர்க்குச் செய்யாதொழிக, (எ - று)

இது நோயுண்டாமென்றது. 6

207. தீயவை தீய பயத்தலாற் றீயவை

202 தீயினு மஞ்சப் படும்.

(இ - ள்.) தீத்தொழிலானவை தமக்குத் தீமை பயத்தலானே, அத்தொழில்கள் தொடிற் சுடுமென்று தீக்கு அஞ்சுதலினும் மிக அஞ்சப்படும், (எ - று). 7

208. தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்

201 தீவினை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்). என்றுந் தீத்தொழில் செய்வா ரஞ்சார்; சீரியாரஞ்சுவர்; தீவினையாகிய களிப்பை, (எ - று)

இஃது இதற்கு நல்லோ ரஞ்சுவ ரென்றது. 8

209. அருங்கேட னென்ப தறிக மருங்கோடித்

210 தீவினை செய்யா னெனின்.

(இ - ள்.) ஒருமருங்கு ஓடிப் பிறர்க்குத் தீவினைகளைச் செய்யானாயின்,

தனக்குக் கேடுவருவ தில்லை யென்று தானே யறிக. (எ - று).

இது கேடில்லை யென்றது. 9

210. அறிவினு ளெல்லாந் தலையென்ப தீய
செறுவார்க்குஞ் செய்யா விடல்.

(இ - ள்) எல்லா அறங்களையும் அறியும் அறிவு எல்லாவற்றுள்ளும் தலையான அறிவென்று சொல்லுவர் நல்லோர்; தமக்குத் தீமை செய்வார்க்கும் தாம் தீமை செய்யாதொழிதலே, (எ - று).

இஃது எல்லாவற்றுள்ளும் தலைமை யுடைத்தென்றது. 10

---



## 18 - ம் அதிகாரம்.

## ஒப்புரவறிதல்.

*ஒப்புரவறிதலாவது இல்லென இரந்துவந்தார் யாவர்க்கும் வரையாது கொடுக்குமாற்றல் இலரெனினும் தம்மளவிற்கும் தம் வருவாயளவிற்கும் ஏற்கத் தக்கார்க்குத் தக்களவறிந்து கொடுத்தல்.*

211. தாளாற்றித் தந்த பொருளெல்லாந் தக்கார்க்கு
212 வேளாண்மை செய்தற் பொருட்டு.

(இ - ள்.) ஒருவன் முயன்று ஈட்டிய பொருளெல்லாம் தகுதியுடையார்க்கு உபகரித்தற்காகவாம், (எ - று).

இது பொருளுண்டானால் ஒப்புரவு செய்கவென்றது. 1

212. கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்
211 டென்னாற்றுங் கொல்லோ வுலகு.

(இ - ள்.) ஒப்புரவு செய்யுங்கால் கைம்மாறு கருதிச்செய்ய வேண்டா; எல்லார்க்கும் நல்வழி சுரக்கின்ற மாரிக்கு உலகம் கைம்மாறு செய்தலுண்டோ?

கடப்பாடு-ஒப்புரவு. இஃது ஒப்புரவாவது கைம்மாறு வேண்டாத கொடை யென்று கூறிற்று. 2

213. இடனில் பருவத்து மொப்புரவிற் கொல்கார்
218 கடனறி காட்சி யவர்.

(இ - ள்.) செல்வம் விரிவற்ற காலத்திலும் ஒப்புரவிற்குத் தளரார்; ஒப்புரவை யறியும் அறிவுடையார், (எ - று).

இது செல்வம் விரிவில்லாத காலத்திலும் செய்யவேண்டு மென்றது. 3

214. நயனுடையா னல்கூர்ந்தா னாதல் செயனீர்மை
219 செய்யா தமைகலா வாறு.

(இ - ள்.) நயனுடையான் நல்கூர்ந்தானாகின்றது செய்ய வேண்டுவன செய்யாதே யமைய மாட்டாத வியல்பாம், (எ - று).

இது செல்வங் குறைபடினுஞ் செய்வரென்றது. 4

215. ஒப்புரவி னான்வருங் கேடெனி னஃதொருவன்
220 விற்றுக்கோட் டக்க துடைத்து.

6



(இ - ள்.) ஒருவன் ஒப்புரவு செய்தலினாலே பொருட்கேடு வருமென்று சொல்லின், அக்கேட்டைக் கேடாகச் சேர்த்துக்கொள்ளல் கூடாது; அஃது ஒன்றை விற்று ஒன்றைக் கொள்ளுகின்ற வாணிகமாகக் கொள்ளுந் தகுதி யுடைத்து, (எ - று).

கெட்டானாயினும் அதனை ஆக்கமாகக் கொள்ளல் தகும்; பிற்பயப்பன நன்மையாதலான். 5

216. ஊருணி நீர்நிறைந் தற்றே யுலகவாம்
215 பேரறி வாளன் றிரு.

(இ - ள்.) ஊர் உண்கின்றகேணி நீர் நிறையப் புகுந்தாலொக்கும்; உலகத்தா ரெல்லாராலும் நச்சப்படுகின்ற பெரிய வொப்புரவு அறிவானது செல்வம்,(எ-று).

இஃது ஒப்புரவறிவார்க்கு உளதாகிய செல்வம் நச்சிச்சென்றார் வேண்டிய வாறு முகக்கலா மென்றது. 6

217. பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ
216 நயனுடை யான்கட் படின்.

(இ - ள்.) பயன்படுமரம் ஊர்நடுவே பழுத்தாற்போலும்; பிறரால் விரும்பப் படுவான்மாட்டுச் செல்வ முண்டாயின், (எ - று).

இது வேண்டாதார்க்கும் பயன்படு மென்றது. 7

218. மருந்தாகித் தப்பா மரத்தற்றாற் செல்வம்
217 பெருந்தகை யான்கட் படின்.

(இ - ள்.) பிணிமருந்தாகித் தேடுவார்க்கு மறைதலில்லாத மரத்தை யொக்கும்; செல்வமானது பெருந்தகைமையான்மாட்டு உண்டாயின், (எ - று).

தப்புதலென்றது ஒளித்தலை. 8

219. ஒத்த தறிவா னுயிர்வாழ்வான் மற்றையான்
214 செத்தாருள் வைக்கப் படும்.

(இ - ள்.) ஒப்புரவறிவான் உயிர்வாழ்வானென்று சொல்லப்படுவன்; அஃதறியான் செத்தவருள் ஒருவனாக எண்ணப்படுவன், (எ - று).

இஃது ஒப்புரவறியாதார் பிணத்தோ டொப்ப ரென்றது. 9

220. புத்தே ளுலகத்து மீண்டும் பெறற்கரிதே
213 யொப்புரவி னல்ல பிற.

(இ - ள்.) ஒப்புரவு செய்தலின் நன்றாயிருப்பது தேவருலகத்தினும் இவ்வுலகத்தினும் பெறுதற்கு அரிதாம், (எ - று). 10

---

இல்லறவியல் - 19 - வது ஈகை. 43

## 19 - ம் அதிகாரம்.

### ஈ கை.

ஈகையாவது இல்லென இரந்துவந்தார் யாவர்க்கும் வரையாது கொடுத்தல்.

221. நல்லா றெனினுங் கொளறீது மேலுலக
222 மில்லெனினு மீதலே நன்று.

(இ - ள்.) ஒருவன்மாட்டுக் கொள்ளல் நன்மை பயக்கும் நெறியெனினும் கோடல் தீது; ஒருவர்க்குக் கொடுத்தாற் பாவமுண்டெனினும் கொடுத்தல் நன்று.

கொள்வோ ரமைதி யறிந்து கொடுக்கவேண்டுமெனினும், இது வரையாது கொடுத்தலாதலால், யாதொருவாற்றானும் கொடை நன்றென்பது கூறிற்று. 1

222. வறியார்க்கொன் றீவதே யீகைமற் றெல்லாங்

221 குறியெதிர்ப்பை நீர துடைத்து.

(இ - ள்.) *ஈகையாவது இல்லாதார்க்கு யாதானும் ஒன்றைக் கொடுத்தல்; இஃதொழிந்த கொடையெல்லாம் குறியெதிர்ப்பை கொடுத்த நீர்மையாதலை யுடைத்து,* (எ - று).

*இது கொடுக்குங்கால் இல்லாதார்க்குக் கொடுக்கவேண்டு மென்றது.* 2

223. இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
223 குலனுடையான் கண்ணே யுள.

(இ - ள்.) *இரந்துவந்தார்க்கு இல னென்னுகின்ற துன்பத்தைக் கூறாது ஈதலும் குடிப்பிறந்தான்மாட்டே யுளதாம்,* (எ - று).

*இது கொடுக்குங்கால் மாறாது கொடுக்க வேண்டுமென்றது.* 3

224. இன்னா திரக்கப் படுத லிரந்தவ
224 னின்முகங் காணு மளவு.

(இ - ள்.) *பிறனொருவனு லிரக்கப்படுதலும் இன்னாது; எவ்வளவுமெனின், இரந்துவந்தவன் தான் வேண்டியது பெற்றதனுனே இனிதானமுகங் காணு மளவும்,* (எ - று).

*இது கொடுக்குங்கால் தாழாது கொடுக்கவேண்டுமென்றது.* 4

225. சாதலி னின்னாத தில்லை யினிததூஉ
230 மீத லியையாக் கடை.



(இ - ள்.) *சாதலின் மிக்க துன்பமில்லை, அதுவும் இனிதாம்; இரந்து வந தார்க்குக் கொடுத்தல் முடியாவிடத்து,* (எ - று).

*இஃது ஈயாது வாழ்தலில் சாதல் நன்றென்றது.* 5

226 ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றுமுடைமை
228 வைத்திழக்கும் வன்க ணவர்.

(இ - ள்.) *கொடுத்த கொடையினுல் பெற்றவர்க்கு வரும் முகமலர்ச்சியைக் கண்டறியாரோ? தாமுடைய பொருளைக் கொடாதே வைத்துப் பின் னிழக்கின்ற வன்கண்ணர்,* (எ - று).

*இஃது இடார் இழப்பரென்றது.* 6

227. இரத்தலி னின்னாது மன்ற நிரப்பிய
229 தாமே தமிய ருணல்.

(இ - ள்.) இரத்தல்போல மெய்யாக இன்னாதாம்; தேடின வுணவைத் தாமே தமியராயிருந் துண்டல், (எ - று).

தமியரா யென்றது ஒருவருங் காணாமலென்றது. 7

228. பாத்தூண் மரீஇ யவனைப் பசியென்னுந்
227 தீப்பிணி தீண்ட லரிது.

(இ - ள்.) பகுத்து உண்டலைப் பழகியவனைப் பசியாகிய பொல்லா நோய் தீண்டுத லில்லை, (எ - று).

இஃது ஒருவன் பிறர்க்கியா தொழிகின்றமை ஏத்தாற் பொருள் குறையும், அதனாலே பசியுண்டாமென் றஞ்சியன்றோ! அவ்வாறு நினைத்தல் வேண்டா; பகுத்துண்ணப் பசி வாராதென்று கூறிற்று. 8

229. அற்றா ரழிபசி தீர்த்த லஃதொருவன்
226 பெற்றான் பொருள்வைப் புழி.

(இ - ள்.) பொருளற்றாரது குணங்களையழிக்கும் பசியைப்போக்குக; அது செய்ய ஒருவன் தான் தேடின பொருள்வைத்தற்கு இடம் பெற்றானாம், (எ-று).

இது பகுத்துண்ணப் பொருளழியாது என்றது. 9

230. ஆற்றுவா ராற்றல் பசியாற்ற லப்பசியை
225 மாற்றுவா ராற்றலிற் பின்.

(இ - ள்.) பெரியாரது பெருமையாவது பசியைப் பொறுத்தல்; அதுவும் பெரிதாவது பிறர் பசியைத் தீர்ப்பாரது பெருமைக்குப் பின்பு, (எ - று).

இது தவம்பண்ணுவாரினும் தானம் பண்ணுவார வலியுடைய ரென்றது. 10

---



## **20** - ம் அதிகாரம்.

## புகழ்

புகழாவது புகழ்பட வாழ்தல்.

231. தோன்றிற் புகழொடு தோன்றுக வஃதிலார்
236 தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ - ள்.) பிறக்கிற் புகழுண்டாகும் பிறக்க, அஃதிலார் பிறக்குமதிற் பிறவாமை நன்று, (எ - று).

இது புகழ்பட வாழவேண்டு மென்றது. 1

232\. ஈத லிசைபட வாழ்த லதுவல்ல
2.31 ஊதிய மில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) புகழ்பட வாழ்தலாவது கொடுத்தல்; அதனோடையானல்லது உயிர்க்கு இலாபம் வேறொன்றில்லை, (எ - று).

இது புகழுண்டாமாறு கூறிற்று. 2

233\. உரைப்பா ருரைப்பவை யெல்லா மிரப்பார்க்கொன்
2.32 றீவார்மே னிற்கும் புகழ்.

(இ - ள்.) சொல்லுவார் சொல்லுவனவெல்லாம், இரந்துவந்தார்க்கு அவர் வேண்டியதொன்றைக் கொடுப்பார்மேல் நில்லாநின்ற புகழாம், (எ - று). 3

234\. ஒன்றா வுலகத் துயர்ந்த புகழல்லாற்
2.33 பொன்றாது நிற்பதொன் றில்.

(இ - ள்.) உயர்ந்தபுகழல்லது இணை யின்றாக உலகத்துக் கெடாது நிற்பது பிறிதில்லை, (எ - று).

இது புகழ் மற்றுள்ள பொருள்போலன்றி அழியாது நிற்கு மென்றது. 4

235\. நிலவரை நீள்புக ழாற்றிற் புலவரைப்
2.34 போற்றாது புத்தே ளுலகு.

(இ - ள்.) ஒருவன் நிலத்தெல்லையின்கண்ணே நெடிய புகழைச் செய்வனாயின், தேவருலகம் புலவரைப் போற்றாது இவனைப் போற்றும், (எ - று).

புலவரென்றார் தேவரை; அவர் புலனுடையாராதலான். இது புகழ் செய்தாரைத் தேவருலகம் போற்றுமென்றது. 5



236\. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
2.37 யிகழ்வாரை நோவ தெவன்.

(இ - ள்.) புகழ்பட வாழ மாட்டாதார் தங்களை நோவாது தம்மை யிகழ்வாரை நோகின்றது யாதினுக்கு? (எ - று).

இது புகழ்பட வாழமாட்டாதார் இகழப்படுவரென்றது. 6

237. வசையென்ப வையத்தார்க் கெல்லா மிசையென்னு
238 மெச்சம் பெறாஅ விடின்.

(இ - ள்.) உலகத்தார்க்கெல்லாம் புகழாகிய ஒழிபு பெறாவிடின், அப் பெருமைதானே வசையாமென்று சொல்லுவர், (எ - று).

மேல் புகழில்லாதாரை யிகழ்பவென்றார் அவர் குற்றமில்லாராயின் இகழப் படுவரோவென்றார்க்கு, வேறு குற்றம் வேண்டா ; புகழின்மைதானே யமையு மென்றார். 7

238. வசையொழிய வாழ்வாரே வாழ்வா ரிசையொழிய
240 வாழ்வாரே வாழா தவர்.

(இ - ள்.) வசையொழிய வாழுமவர்களே உயிர் வாழ்வாராவர்; புகழொழிய வாழ்வாரே உயிர் வாழாதார், (எ - று).

இது புகழில்லார் பிணத்தோ டொப்ப ரென்றது. 8

239. வசையிலா வண்பயன் குன்று மிசையிலா
239 யாக்கை பொறுத்த நிலம்.

(இ - ள்.) புகழில்லாத வுடம்பைப் பொறுத்த நிலம் பழியற்ற நல்வினைவு குறையும், (எ - று).

இது புகழில்லாதா ளிருந்தவிடம் விளைவு குன்றுமென்றது. 9

240. நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
235 வித்தகற் கல்லா லரிது.

(இ- ள்.) ஆக்கம் போலக் கேடும் உளதானாற்போலச் சாதலும் வல்லவற் கல்லது அரிது, (எ - று).

இது புகழ்பட வாழ்தல் மக்களெல்லார்க்கும் அரிதென்றது. 10

இல்லறவியல் முற்றிற்று.

---

துறவறவியல் - 1 - வது அருளுடைமை.

*மேல் துறவறம் பதின்மூன்றதிகாரங்களால் கூறுவார்.*

## 1 - ம் அதிகாரம்.

## அருளுடைமை.

*அருளுடைமையாவது யாதானுமோருயிர் இடர்ப்படின் அதற்குத் தன்னுயிர்க்கு உற்ற துன்பத்தினால் வருந்துமாறு போல வருந்தும் ஈரமுடைமை.*

241. நல்லாற்றா னாடி யருளாள்க பல்லாற்றாற்
242 றேரினு மஃதே துணை.

(இ - ள்.) *நல்ல வழியாலே நாடி அருளையுண்டாக்குக; பலவழியினும் ஓடி யாராயினும், தமக்கு அவ்வருளே துணையாம்,* (எ - று).

*'நல்லாற்றானாடியருளாள்க' என்றது அருளுடைமை யுண்டாகப் பலவறங் களையுஞ் செய்கவென்றவாறு. இஃது அருளுடைமை வேண்டுமென்றது.* 1

242 அருட்செல்வஞ் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
241 பூரியார் கண்ணு முள.

(இ - ள்.) *செல்வத்துள் வைத்துச் செல்வமாவது அருளுடைமையாகிய செல்வமாம்; பொருட் செல்வமானது கீழாயினோர்மாட்டும் உளவாதலால்,* (எ - று).

*இஃது அருள்நிலை கூறிற்று.* 2

243. அருள்சேர்ந்த நெஞ்சினார்க் கில்லை யிருள்சேர்ந்த
243 வின்னா வுலகம் புகல்.

(இ - ள்.) *அருளைப் பொருந்தின நெஞ்சினையுடையவர்க்கு இருளைப் பொருந்தின நரக லோகம் புகுதலில்லை,* (எ - று).

*இது நரகம் புகாரென்றது.* 3

244. மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப
244 தன்னுயி ரஞ்சும் வினை.

(இ - ள்.) *நிலைபெற்ற உயிரை ஓம்பி அருளை ஆள்வானுக்குத் தன்னுயிரஞ்ச வரும் வினை வருவ தில்லையென்று சொல்லுவார்,* (எ - று).

*இது தீமை வாராதென்றது.* 4

245. அல்ல லருளாள்வார்க் கில்லை வளிவழங்கு
245 மல்லன்மா ஞாலங் கரி.



(இ - ள்.) *அருளுடையார்க்கு அல்லலில்லை; அதற்குச் சான்று காற் றியங்குகின்ற வளப்பத்தினை யுடைய பெரிய வுலகம்,* (எ - று)

*இஃது அருளுடையார்க்கு அல்லலின்மை உலகத்தார்மாட்டே காணப்படு மென்றது.* 5

246. ‹ அருளிலார்க் கவ்வுலக மில்லை பொருளிலார்க்»
247 கிவ்வுலக மில்லாகி யாங்கு.

(இ - ள்.) *அருள் இல்லாதார்க்கு மேலுலகமுறுங் காட்சியில்லை ; பொருள் இல்லாதார்க்கு இவ்வுலகின்கண் இன்பமுறுங்காட்சி யில்லையானாற்போல,* (எ-று).

*இஃது அருளில்லாதார் சுவர்க்கம் புகாரென்றது.* 6

247. தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றாற் றேறி
249 னருளாதான் செய்யு மறம்.

(இ - ள்.) *தெளிவில்லாதான் மெய்ப்பொருளைத் தெளிந்தாற் போலும் ; ஆராயின், அருளில்லாதான் செய்யும் அறமும்,* (எ - று).

*இஃது அறஞ்செய்யவும் மாட்டாரென்றது,* 7

248. பொருணீங்கிப் போச்சாந்நா ரென்ப ரருணீங்கி
24 யல்லவை செய்தொழுகு வார்.

(இ - ள்.) *முற்பிறப்பின்கண் அருளினின்று நீங்கி அல்லாதவற்றைச் செய் தொழுகினவர் இப்பிறப்பின்கண் பொருளினின்று நீங்கி மறவியு முடையவ ரென்று சொல்லுவர்,* (எ - று).

*இது பொருளில்லையாமென்றது.* 8

249. பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
248 ரற்றார்மற் றாத லரிது.

(இ - ள்.) பொருளில்லாதார் ஒருகாலத்தே பொருளுடையாதலும் கூடும்; அருளில்லாதார கெட்டார், பின்பு ஆக்கமுண்டாகாது, (எ - று).

இது பொருளின்மையேயன்றி எல்லாக கேடு முண்டா மென்றது. 9

250. வலியார்முற் றம்மை நினைக்கதாந் தம்மின்
மெலியார்மேற் செல்லு மிடத்து.

(இ - ள்.) தாம் தம்மின் மெலியார்மேல் வெகுண்டெழுமிடத்து, தம்மின் வலியார்முன் தாம் நிற்குநிலையை நினைக்க, (எ - று). 10

துறவறவியல் - **2** - வது புலான் மறுத்தல். 49

**2** - ம் அதிகாரம்.

## புலான் மறுத்தல்.

புலான் மறுத்தலாவது புலால்தின்றால் அருளில்லையா மென்பதனாற் புலாலை விடுகை.

251. உண்ணாமை வேண்டும் புலாலைப் பிறிதொன்றின்
புண்ண துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) புலாலை யுண்ணாமை வேண்டும்; அது பிறிதொன்றின் புண்; ஆதலால்; அதனை அவ்வாறு காண்பாருண்டாயின்; (எ - று).

இது புலால் மறுத்தல் வேண்டுமென்பதூஉம், அது தீயதாமென்பதூஉங் கூறிற்று. 1

252. பொருளாட்சி போற்றாதார்க் கில்லை யருளாட்சி
யாங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ - ள்.) பொருளினை யாளுதல் அதனை காக்கமாட்டாதார்க்கு இல்லை; அதுபோல, அருளினை யாளுதல் ஊன் தின்பவர்க்கு இல்லை, (எ - று).

இஃது ஊனுண்ண அருட்கேடு வருமென்றது. 2

253. தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

(இ - ள்.) தன்னுடம்பை வளர்த்தற்குத் தான் பிறிதொன்றினது உடம்பை உண்ணுமவன், அருளுடையவனுவது மற்றியாதானே' (எ - று).

ஊனுண்ண அருள்கெடுமோ என்றாிக்கு, இது கூறப்பட்டது. 3

254. படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா தொன்றி
253 னுடல்சுவை யுண்டார் மனம்.

(இ - ள்.) *ஆயுதம் கையிற்கொண்டவர் நெஞ்சுபோல், நன்மையை நினை யாது; ஒன்றினுடலைச் சுவைப்படவுண்டார் மனம்,* (எ - று). 4

255. தினற்பொருட்டாற் கொள்ளா துலகெனின் யாரும்
256 விலைப்பொருட்டா லூன்றருவா ரில்.

(இ - ள்.) *தின்னுதற்காக உலகத்தார் கொள்ளாராயின், விலைக்காக ஊன் விற்பார் யாரும் இல்லை,* (எ - று).

*இது கொன்று தின்னாது விலைக்குக்கொண்டு தின்பார்க்குக் குற்றமென்னை யென்றார்க்கு, அதனாலுங் கொலைப்பாவம் வருமென்று கூறிற்று.* 5

7



256. அருளல்ல தியாதெனிற கொல்லாமை கோறல்
254 பொருளல்ல தவ்வூன் றினல்.

(இ - ள்) *அருளலலது யாதெனின, கொலலாமையைச சிதைததல, பொருளலலது யாதெனின, அவவூனைத தினறல,* (எ - று)

*இஃது அதனை யுணடதனால அருள கெடுதலேயனறி, பெறுவதொரு பயனுமிலலை எனறது* 6

257. செயிரிற றலைப்பிரிநத காட்சியா ருண்ணா
258 ருயிரிற் றலைப்பிரிந்த வூன்.

(இ - ள்) *குறறததினினறு நீஙகின தெளிவுடையார உணணார, உயிரி னினறு நீஙகின உடமபை,* (எ - று)

*இது மேறகூறிய குறறமெலலாம பயததலின, அதனைத தெளிவுடையா ருணணாரென்றது* 7

258. அவிசொரிந தாயிரம் வேட்டலி னொன்றி
259 னுயிர்செகுத் துண்ணாமை நன்று.

(இ - ள்) *நெய முதலான அவியைச சொரிநது ஆயிரமவேளவி வேட்டலி*

னும, ஒனறினுயிரை ரீககி அதனுடமபை யுணணுமை ஈனற, (எ - ற) 8

259. கோல்லான் புலாலை மறுததானைக கைகூப்பி
260 யெல்லா வுயிருந தோழும்.

(இ ள்) கொலலாதுமாயப புலாலையுணடலையுந தவிாததவனை, கை குவிதது எலலாவுயிருந தொழும, (எ - ற)

மேல எலலாபபுணணியததிலும இது ஈனறெனறா அது யாகினாத தருமெனறாககு, கொலலாதவன தேவாககும மேலாவனெனறு கூறினா 9

260. உணணுமை யுளா துயிாநிலை யூனுண்ண
255 வண்ணுததல் செயயா தளறு

(இ - ள் ) உயிா நிலையைப பெறுதல ஊனை யுணணுமையினால உளளது, ஊனையுணண, உணடாரை எலலாவுலகததினும இழிநத நாகா விழுஙகிக கொணடு அஙகாவாது, (எ - று)

அஙகாவாமை - புறபபட விடாமை 10

---



## 3 - ம் அதிகாரம்.

### *தவம்.*

*தவமாவது ஊணுங் உறக்கமுங் குறைத்தலும், வெயிலும் பனியும் தாங்கலும், தேவர்வழிபாடு முதலாயினவும் மேற்கொண்டு முயறல்.*

261. தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லா
266 ரவஞ்செய்வா ராசையிற் பட்டு.

(இ - ள்.) *தங்கருமஞ் செய்வார் தவஞ் செய்வார்; அஃதல்லாதன செய்வாரெல்லாம் ஆசையிலே யகப்பட்டுப் பயனில்லாதன செய்கின்றார், (எ - று).*

*இது தவம்பண்ண வேண்டுமென்றது.* 1

262. துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொன்
263 மற்றை யவர்க டவம்.

(இ - ள்.) *துறந்தவர்களுக்கு உணவுகொடுத்தலை வேண்டித் தவிர்ந்தா*

ராயினரோ ? இல்வாழ்வார் தவஞ் செய்திலை, (எ - று).

இது தானத்திலும் தவம் மிகுதியுடைத்தென்றது. 2

263. தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
262 யஃதிலார் மேற்கொள் வது.

(இ - ள்.) தவஞ்செய்தலும் முன்பு நல்வினை செய்தார்க்கு வரும்; அந் நல்வினையில்லாதார் அத்தவத்தை மேற்கொள்வது பயனில்லை, (எ - று).

இது தவமிலார்க்குத் தவம் வாராது; வரினும் தப்புமென்றது. 3

264. உற்றநோய் நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை
261 யற்றே தவத்திற் குரு.

(இ - ள்.) தமக்கு உற்றநோயைப் பொறுத்தலும் பிறவுயிர்க்கு நோய்செய்யாமையுமாகிய அத்தன்மையே தவத்திற்கு வடிவமாம், (எ - று). 4

265. தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய
268 மன்னுயி ரெல்லாந் தொழும்.

(இ - ள்.) தன்னுயிரானது தானென்று கருதுங் கருத்து அறப் பெற்றவனை, ஒழிந்தனவாகிய நிலைபெற்ற உயிர்களெல்லாம் தொழும், (எ - று).

உயிரென்றது சலிப்பற்ற அறிவை; தானென்றது சீவனாகி நிற்கின்ற நிலைமையை; தானறுதலாவது அகங்கார மறுதல். 5



266. சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
267 சுடச்சுட நோற்கிற் பவர்க்கு.

(இ - ள்.) நெருப்பின்கண்ணே இட இடத் தன்னோடு கலந்த மாசற்று ஒளிவிடுகின்ற பொன்னைப்போல, துன்பம் கலிய கலியத் தவஞ்செய்வார்க்குத் தம்மோடு மருவின வினை விட்டு ஒளிவிடும், (எ - று).

இது வினைவிட் டொளி யுண்டாம் என்றது. 6

267. கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலி
268 னாற்ற றலைப்பட்ட வர்க்கு.

(இ - ள்.) கூற்றத்தைத் தப்புதலுங் கைகூடும், தவத்தினாகிய வலியைக கூடினார்க்கு, (எ - று).

இது மார்க்கண்டேயன் தப்பினாற்போல வென்றது. 7

268. ஒன்னார்த் தெறலு முவந்தாரை யாக்கலு
264 மெண்ணிற் றவத்தான் வரும்.

(இ - ள்.) இவ்விடத்துப் பகைவரைத் தெறுதலும், நட்டோரை யாக்குதலு மாகிய வலி ஆராயின், முன்செய்த தவத்தினாலே வரும், (எ - று)

இது பிறரை யாக்குதலும் கெடுத்தலுந் தவத்தினாலே வருமென்றது. 6

269. இலர்பல ராகிய காரண நோற்பார்
270 சிலர்பலர் நோலா தவர்.

(இ - ள்.) பொருளில்லாதார் உலகத்துப் பலராதற்குக் காரணம், தவஞ் செய்வார் சிலராதல; அது செய்யாதார் பலராதல், (எ - று) 9

270. வேண்டிய வேண்டியாங் கெய்தலாற் செய்தவ
265 மீண்டு முயலப் படும்.

(இ - ள்.) விரும்பியன விரும்பினபடியே வருதலால், தவஞ்செய்தலை யிவ் விடத்தே முயல வேண்டும், (எ - று).

இது போகநுகர்ச்சியும் இதனானே வருமென்றது. 10

---

துறவறவியல் - 4 - வது கூடாவொழுக்கம். 53

4 - ம் அதிகாரம்.

## கூடாவொழுக்கம்.

கூடாவொழுக்கமாவது மேற்கூறிய தவத்திற்குப் பொருந்தாத ஒழுக்கம்.

271. மனத்தது மாசாக மாண்டார்நீ ராடி
278 மறைந்தொழுகு மாந்தர் பலர்.

(இ - ள்.) மாசு மனத்தின்கண் உண்டாக வைத்து, மாட்சிமைப் பட்டாரது நீர்மையைப் பூண்டு, பொருந்தாத விடத்திலே மறைந்தொழுகு மாந்தர் பலர், ( )

இது பலர்க்குக் கூடாவொழுக்க முண்டாகு மென்றது. 1

272. புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி
277 மூக்கிற் கரியா ருடைத்து.

(இ - ள்.) புறத்தே குன்றி நிறம்போன்ற தூய வேடத்தா ராயினும், அகத்தே குன்றி மூக்குப் போலக் கரியாரா யிருப்பாரை உடைத்து இவ்வுலகம்.

இஃது அறிஞர் தவத்தவரை வடிவு கண்டு தேர்படா ரென்றது. 2

273. வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
273 புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

(இ - ள்.) வலியில்லாத நிலைமையை யுடையவன் வலிதாகிய தவ வுருவங் கோடல், பெற்றமானது பிறர் பயப்படும்படி புலியினது தோலைப் போர்த்துப் பைங்கூழ் மேய்ந்த தன்மைத்து, (எ - று). 3

274. தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து
274 வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) தவத்திலே மறைந்து தவ மல்லாதவற்றைச் செய்தல், வேட்டுவன் தூற்றிலே மறைந்து புள்ளைப் பிணித்தாற் போலும், (எ - று).

அர்ச்சுனன் தவமறைந்தல்லவை செய்தான். 4

275. வானுயர் தோற்ற மெவன்செய்யுந் தன்னெஞ்சந்
272 தானறி குற்றம் படின்.

(இ - ள்.) வானளவும் உயர்ந்த பெருமையுண்டாயினும், அஃதியாதினைச் செய்யவற்று; தன் னெஞ் சறியக் குற்ற முண்டாயின், (எ - று)

தான் - அசை. இஃது இக்கூடா ஒழுக்கத்தானைப் பிறரறிந்து இகழாராயினும், அவன் செய்கின்ற தவத்தினாற் பயனுண்டாகாது என்றது. 5



276. வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம் பூதங்க
271 ளைந்து மகத்தே நகும்.

(இ - ள்.) கள்ள மனத்தை யுடையானது குற்றத்தினையுடைய ஒழுக்கத்தைப் பிறரறியாராயினும், தன்னுடம்பி னுண்டான பூதங்களைந்தும் அறிந்து தம்முள்ளே நகாநிற்கும், (எ - று).

*பூதங்கொண்றது அவையிற்றின் காரியமாகிய பொறிகளை.* 6

277. நெஞ்சிற் றுறவார் துறந்தார்போல் வஞ்சித்து
276
வாழ்வாரின் வன்கணா ரில்.

(இ - ள்) *நெஞ்சிற் றுறவாராய்த் துறந்தாரைப் போல வஞ்சனை செய்து வாழுமவர்களைப்போலக் கொடியா ரில்லை யுலகத்து,* (எ - று). 7

278. பற்றற்றே மென்பார் படிற்றொழுக்க மெற்றெற்றென்
275
றேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) *பற்றினை யற்றேமென்பாரது குற்றத்தினை யுடைய ஒழுக்கம் எல்லாரும் எற்றெற்றென்று சொல்லும்படி பலகுற்றமும்முண்டாக்கும்,* (எ - று).

*எற்றென்பது இசைச்சொல்; இதுதீமைபயக்கு மென்றது.* 8

279. மழித்தலும் நீட்டலும் வேண்டா வுலகம்
280
பழித்த தொழித்து விடின்.

(இ - ள்.) *தவத்தினர்க்குத் தலையை மழித்தலும் நீட்டலும் வேண்டா; உலகத்தார் கடிந்தவையிற்றைத் தாமுங்கடிந்து விடுவாராயின்,* (எ - று).

*இது வேடத்தாற் பயனில்லை; நல்லொழுக்கமே வேண்டுமென்றது.* 9

280. கணைகொடிது யாழ்கோடு செவ்விதாங் கன்ன
279
வினைபடு பாலாற் கொளல்.

(இ - ள்.) *செவ்விய கணை கொடுமையைச்செய்யும், கோடியயாழ் செவ்வையைச் செய்யும்; அதுபோல, யாவரையும் வடிவுகண்டறியாது, அவரவர் செய்யும் வினையின்பகுதியாலே யறிந்துகொள்க,* (எ - று). 10

---

துறவறவியல் - **5** - வது கள்ளாமை. 55

## **5** - ம் அதிகாரம்.

## *கள்ளாமை.*

கள்ளாமையாவது யாதொரு பொருளையுங் களவிற் கொள்ளாராதல்.

281. எள்ளாமை வேண்டுவா னென்பா னெனைத்தொன்றுங்
2 81 கள்ளாமை காக்கதன் னெஞ்சு.

(இ - ள்.) பிறரா லிகழப்படாமையை வேண்டுவா னிவனென்று சொல்லப்படுமவன், யாதொரு பொருளையுங் களவிற் கொள்ளாமல் தன்னெஞ்சைக் காக்க, (எ - று)

இது களவு ஆகாதென்றது. 1

282. உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
2 82 கள்ளத்தாற் கள்வே மெனல்.

(இ - ள்). பிறன் பொருளை நெஞ்சினால் நினைத்தலும் தீதாம்; ஆதலால், அதனை மறைவினாலே கள்வேமென்று முயலாதொழிக. (எ - று).

இது களவு தீதென்றது. 2

283. கள்வார்க்குத் தள்ளு முயிர்நிலை கள்ளார்க்குத்
2 90 தள்ளாது புத்தே ளுலகு.

(இ - ள்.) பிறர் பொருளைக் கள்வார்க்கு உயிர்நிலையாகிய வீடு பெறுதல் தப்பும்; கள்ளாதார்க்குத் தேவருலகம் பெறுதல் தப்பாது, (எ - று).

இது கள்வார் முத்தி பெறுதலுமிலர்; கள்ளாதார் சுவர்க்கம் பெறுமையுமில ரென்றது. 3

284. களவினா லாகிய வாக்க மளவிறந்
2 83 தாவது போலக் கெடும்.

(இ - ள்). களவிற் கொண்ட பொருளா லாகிய ஆக்கம் மேன்மேலும் மிகுவதுபோலக் கெடும், (எ - று).

இது பொருள் நிலையாதென்றது. 4

285. களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண்
2 84 வீயா விழுமந் தரும்.

(இ-ள்.) களவின்கண்ணே மிக்க ஆசை, பயன்படுங் காலத்துக் கேடில்லாத நோயைத் தரும், (எ - று). 5

இது நரகம் புகுத்தும் என்றது.

286. அளவல்ல செய்தாங்கே வீவர் களவல்ல
2.89 மற்றைய தேற்ரு தவர்.

(இ - ள்.) நேர் ஆகாதன செய்து அவ்விடத்தே கெடுவார்; களவல்லாத மற்றைய அறங்களைத் தெளியாதவர், (எ - று).

இது கள்வாரை அரசர் கொல்வரென்றது. 6

287. அருள்கருதி யன்புடைய ராதல் பொருள்கருதிப்
285 பொச்சாப்புப் பார்ப்பார்க ணில்.

(இ - ள்.) அருளைக் குறித்து உயிர்மீது அன்புடையா யொழுகுதல் பொருளைக் குறித்துப் பிறரது மறவியைப் பார்ப்பார்மாட்டு இல்லை, (எ - று).

இஃது அருளும் அன்பு மில்லையாமென்றது. 7

288. அளவின்க ணின்ருெழுக லாற்ருர் களவின்கட்
2.86 கன்றிய காத லவர்.

(இ - ள்.) களவின்கண்ணே மிக்க ஆசையையுடையவர் நேரின்கணின்று ஒழுகுதலைச் செய்யமாட்டார், (எ - று).

இது நேர் செய்ய மாட்டாரென்றது. 8

289. களவென்னுங் காரறி வாண்மை யளவென்ன
287 மாற்றல் புரிந்தார்க ணில்.

(இ - ள்.) களவாகிய பொல்லா அறிவுடைமை நேராகிய பெருமையைப் பொருந்தினர்மாட்டு இல்லை, (எ - று).

இது நேரறிந்தவர் களவு காணுரென்றது. 9

290. அளவறிந்தார் நெஞ்சத் தறம்போல நிற்குங்
288 களவறிந்தார் நெஞ்சிற் கரவு.

(இ -ள்.) நேரறிந்தவர் நெஞ்சத்து அறம் நிற்குமாறுபோல, நிற்கும்; களவறிந்தவர் நெஞ்சில் வஞ்சகமும், (எ - று).

இது களவு காண்பாரைப் பின்பு களவினின்று தவிர்த்தல் முடியாதென்றது. 10

## 6 - ம் அதிகாரம்.

## வாய்மை.

*வாய்மையாவது பொய் சொல்லாமை.*

291. தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
2-93 றன்னெஞ்சே தன்னைச் சுடும்.

(இ - ள்.) *தன்னெஞ்சு அறிந்ததனைப் பொய்யாது சொல்லுக; பொய்ப்பரு யின், தன்னெஞ்சுதானே தன்னை யொறுக்கும்,* (எ - று).

*சுடுதலாவது அதனாற் பிறர்க்கு உளதாகுந் தீமையைக் கண்டு என் செய் தோம் யாமென்று வருந்துவித்தல். இது பொய்யாமை வேண்டுமென்றது.* 1

292. யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்தொன்றும்
300 வாய்மையி னல்ல பிற.

(இ - ள்.) *யாம் மெய்யாகக் கண்டவற்றுள் மெய் சொல்லுதல்போல நன்று யிருப்பன, வேறு யாதொன்றும் இல்லை,* (எ - று).

*இஃது எல்லாஅறமும் இதனோடு ஒவ்வாதென்று அதன்தலைமை கூறிற்று.* 2

293. வாய்மை யெனப்படுவ தியாதெனின் யாதொன்றுந்
2-91 தீமை யிலாத சொலல்.

(இ - ள்.) *பொய் சொல்லாத மெய்யென்று சொல்லப்படுவது யாதென்று வின்வின், பிறர்க்கு யாதொன்றானும் தீமை பயவாத சொற்களைச் சொல்லுதல்.*

*வாய்மை யாது என்றார்க்கு, இது கூறப்பட்டது.* 3

294. பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
2-92 நன்மை பயக்கு மெனின்.

(இ - ள்.) *பொய்யும் மெய்யோ டொக்கும் ; குற்றந் தீர்ந்த நன்மையைப் பயக்குமாயின்,* (எ - று). 4

295. உள்ளத்தாற் பொய்யா தொழுகி னுலகத்தா
294 ருள்ளத்து ளெல்லா முளன்.

(இ - ள்.) தன்னெஞ்சினாற் பொய்யை நினையாது ஒழுகுவனாயின், உலகத்தார் நெஞ்சினுளெல்லாம் உளனாவன், (எ - று).

இது பொய்யை நினையாதாரை எல்லாரும் போற்றுவரென்றது 5

8



296. மனத்தொடு வாய்மை மொழியிற் றவத்தொடு
295 தானஞ்செய் வாரிற் றலை.

(இ - ள்.) மனத்தோடே கூட மெய் சொல்லுவனாயின், தவத்தோடே கூடத் தானஞ் செய்வாரில் தலையாவான், (எ - று)

இஃது எல்லாநன்மையும் பயக்கு மென்றது. 6

297. பொய்யாமை யன்ன புகழில்லை பொய்யாமை
296 யெல்லா வறமுந் தரும்.

(இ - ள்.) பொய்யாமையை யுடையன் என்பதனோடு ஒத்த புகழ் வேறொன்றில்லை; பொய்யாமையானது அவனறியாமல் தானே எல்லா அறங்களையுங் கொடுக்குமாதலான், (எ - று). 7

298. பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
297 செய்யாமை செய்யாமை நன்று.

(இ - ள்) பொய்யாமையைப் பொய்யாமல் செலுத்துவனாயின், பிற அறங்களைச் செய்தல் நன்றாம்; அல்லது தீதாம், (எ - று). 8

299. புறந்தூய்மை நீரா னமையு மகந்தூய்மை
298 வாய்மையாற் காணப் படும்.

(இ - ள்) உடம்பு தூயதாதல் நீரினாலே யமைந்து விடும்; மனத்தின் தூய்மை மெய்சொல்லுதலினாலே யறியப்படும், (எ - று). 9

300. எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
299 பொய்யா விளக்கே விளக்கு.

(இ - ள்.) சான்றோர்க்கு எல்லாவறத்தினாலும் உண்டான ஒளியும் ஒளியல்ல; பொய்யாமையா லுண்டான ஒளியே ஒளியாகும், (எ - று).

இது பொய்யாவிளக்குச் சான்றோர்க்கு இன்றியமையாதென்று கூறிற்று. 10

## 7 - ம் அதிகாரம்.

# வெகுளாமை.

*வெகுளாமையாவது வெகுளுதற்குக் காரணமுள்ளவிடத்தும் வெகுளாதல்.*

301. மறத்தல் வெகுளியை யார்மாட்டுந் தீய
303 பிறத்த லதனான் வரும்.

(இ - ள்.) *வெகுளியை யார்மாட்டுஞ் செய்தலை மறக்க; தீயன பிறத்தல் அவ் வெகுளியானே வருமாதலான்,* (எ - று).

*இது வெகுளாமை வேண்டுமென்றது* 1

துறவறவியல் - 7 - வது வெகுளாமை. 59

302. செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பா னல்லிடத்துக்
301 காக்கிலென் காவாக்கா லென்.

(இ - ள்.) *தனக்கு இயலு மிடத்தே வெகுளாதவன் வெகுளாதவனாவான்; இயலாவிடத்தில் அதனைத் தவிர்த்ததனாலும் பயனில்லை; தவிராததனாலும் பயனில்லை,* (எ - று).

*இது வெகுளாமையாவது வலியவன் வெகுளாமை யென்றது.* 2

303. இணரெரி தோய்வன்ன வின்னா செயினும்
308 புணரின் வெகுளாமை நன்று.

(இ - ள்.) *தொடர்வுபட்ட நெருப்பு மேன்மேலும் வந்துற்றாற்போல, ஒருவன் தனக்கு இன்னாதவற்றைப் பலகாற்செய்யினும் கூடுமாயின், வெகுளாதொழிதல் நன்று,* (எ - று).

*மேல் வலியவன் பொறுக்கவேண்டுமென்றார் அவன் பொறுக்குங்கால் தீமை செய்யினும் பொறுக்க வேண்டுமென்றார்.* 3

304. செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்து
302 மில்லதனிற் றீய பிற.

(இ - ள்.) *இயலாவிடத்துச சினந்தீது, இயலுமிடத்தினும் அதிற் றீதாயிருப்பன பிறவில்லை,* (எ - று). 4

305. தன்னைத்தான் காக்கிற் சினங்காக்க காவாக்காற்
305 றன்னையே கொல்லுஞ் சினம்.

(இ - ள்.) ஒருவன் தன்னைத் தான் காக்கவேண்டுவனாயின், சினத் தோற்றாமற் காக்க; காவானாயின், சினம் தன்னையே கொல்லும், (எ - று).

இஃது உயிர்க்கேடு வருமென்றது. 5

306. சினமென்னுஞ் சேர்ந்தாரைக் கொல்லி யினமென்னு
306 மேமப் புணையைச் சுடும்.

(இ - ள்.) சினமென்று சொல்லப் படுகின்ற நெருப்பு தான் துன்பக்கடலி லழுந்தாமல் தன்னைக் கரையேற விடுகின்ற நட்டோராகிய புணையைச் சுடும். ()

சேர்ந்தாரைக் கொல்லி - நெருப்பு ; இது காரணக்குறி. இது சினம் தன்னை யடுத்தாரைச் கொல்லு மென்றது. 6

307. சினத்தைப் பொருளென்று கொண்டவன் கேடு
307 நிலத்தறைந்தான் கைபிழையா தற்று.

(இ - ள்.) சினத்தைப் பொருளாகக் கொண்டவன் கெடுதல், நிலத்தறிந்த வன்கை தப்பாமற் பட்டதுபோலும், (எ - று).

இது பொருட்கேடு வருமென்றது. 7



308. நகையு முவகையுங் கொல்லுஞ் சினத்திற்
304 பகையு முளவோ பிற.

(இ - ள்.) நகுதலையும் மகிழ்தலையுங் கெடுக்கின்ற சினத்தைப்போல, பகையா யிருப்பனவும் வேறு சிலவுளவோ? (எ - று).

இஃது இன்பக்கேடு வருமென்றது. 8

309. உள்ளிய வெல்லா முடனெய்து முள்ளத்தா
309 னுள்ளான் வெகுளி யெனின்.

(இ - ள்.) தன்னெஞ்சினால் வெகுளியை நினையானாகில், தானினைத்தன வெல்லாம் ஒருகாலத்தே கூடப்பெறுவன், (எ - று). 9

310. இறந்தா ரிறந்தா ரனையர் சினத்தைத்
310 துறந்தார் துறந்தார் துணை.

(இ - ள்.) சினத்தை மிகுத்தார் செத்தாரோடு ஒப்பர்; அதனை யொழிந் தார் எல்லாப்பொருளையுந் துறந்தாரோடு ஒப்பர், (எ - று).

இது வெகுளாதார் பெரியரென்றது. 10

## 8 - ம் அதிகாரம்.
## இன்னா செய்யாமை.

*இன்னாசெய்யாமையாவது தமக்கு இன்னாதவற்றைப் பிறர்க்குச் செய்யாமை. இது வெகுளி மறந்து நிகழ்வதொன்றாதலின், அதன்பின் கூறப் பட்டது.*

311. இன்னா வெனத்தா னுணர்ந்தவை துன்னாமை
316 வேண்டும் பிறன்கட் செயல்.

(இ-ள்.) *தான் இன்னாதனஇவையென்று அறிந்தவற்றைப் பிறற்குச் செய்தலை மேவாமை வேண்டும்,* (எ - று).

*இஃது இன்னா செய்யாமை வேண்டு மென்றது.* 1

312. கறுத்தின்னா செய்தவற் கண்ணு மறுத்தின்னா
312 செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) *தாஞ்செய்த குற்றத்தினாலே வெகுண்டு, இன்னாதவற்றைத் தமக்குச் செய்தவன்மாட்டும், தாம் அதற்கு மாறாகப் பின்பு இன்னாதவற்றைச் செய்யாமை குற்றமற்றார் கோட்பாடு,* (எ - று). 2



313. செய்யாமை செற்றார்க்கு மின்னாத செய்தபி
313 னுய்யா விழுமந் தரும்.

(இ - ள்.) *தானொரு குற்றஞ் செய்யாதிருக்க, தனக்கு இன்னாதவற்றைச் செய்தவர்க்கும்,இன்னாதவற்றைச் செய்யின், அஃது உய்வில்லாத நோயைத்தரும்.*

*இது காரணமின்றி இன்னாதன செய்தவர்க்கும் பொல்லாங்கு செய்தலைத் தவிரவேண்டுமென்றது.* 3

314. சிறப்பீனுஞ் செல்வம் பெறினும் பிறர்க்கின்னா
311 செய்யாமை மாசற்றார் கோள்.

(இ - ள்.) *மிகுதியைத் தருகின்ற செல்வத்தைப் பெறினும், பிறர்க்கு இன்னாதவற்றைச் செய்யாமை குற்றமற்றார் கோட்பாடு,* (எ - று).

*இது பழி வாராத செல்வம் பெறினும் தவிரவேண்டு மென்றது.* 4

315. எனைத்தானு மெஞ்ஞான்றும் யார்க்கு மனத்தானா
317 மாணாசெய் யாமை தலை.

(இ - ள்.) யாம்தானொருமிலுய, மெய்யாவது யாவர்மாட்டும் இன்னாதவற்றை மனத்தினாலும் செய்யாமை என்று, (எ - று). 5

316. அறிவினா னாகுவ துண்டோ பிறிதுநோய
315 தன்னோய்போற் போற்றாக் கடை.

(இ - ள்.) பிறிதோருயிர்க்கு உற்ற நோயைத் தனக்கு உற்ற நோய்போலக் காவாதவிடத்து, அறிவுடையனாகிய வதனால் ஆகுவதொரு பயன் உண்டாகாது.() இஃது அறிவுடையார் செய்யார் என்றது. 6

317. தன்னுயிர்க் கின்னாமை தானறிவா னென்கொலோ
318 மன்னுயிர்க் கின்னா செயல்.

(இ - ள்.) தன்னுயிர்க்கு உற்ற இன்னாமையை உயிரிலாப் பொருள்கள் போல அறியாது கிடத்தலன்றித் தான் அறியுமவன், பின்னைப் பிறவுயிர்க்கு இன்னாதவற்றைச் செய்கின்றது யாதினைக் கருதியோ? (எ - று). 7

318. பிறர்க்கின்னா முற்பகற் செய்யிற் றமக்கின்னா
319 பிற்பகற் றாமே வரும்.

(இ - ள்.) பிறர்க்கு இன்னாதவற்றை முற்பொழுது செய்யின், தாமே பிற்பொழுது தமக்கு இன்னாதனவாய் வரும்; மற்றொருவன் செய்யாமல், (எ - று) இன்னாதவை செய்ததனால் வருங் குற்றமொன்னை யென்றார்க்கு, இது கூறப்பட்டது. 8

319. நோயெல்லா நோய்செய்தார் மேலவா நோய்செய்யார்
320 நோயின்மை வேண்டு பவர்.



(இ - ள்.) இக் காலத்து நுகர்கின்ற துன்பமெல்லாம் முற்காலத்துப் பிறர்க்குத் துன்பம் செய்தார் மாட்டே யுளவாம்; ஆதலால், இக் காலத்துப் பிறர்க்குத் துன்பத்தைச் செய்யார் வருங்காலத்துத் தமக்குத் துன்பம் வாராமையைவேண்டுபவர், (எ - று). 9

320. இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண
314 நன்னயஞ் செய்து விடல்.

(இ - ள்.) இன்னாதன செய்தாரை ஒறுக்குமாறு என்னையெனின், அவர் நாணும்படியாக நல்ல நயமுடையவற்றைச் செய்துவிடுக, (எ - று) இஃது ஒறுக்கும் நெறி கூறியது. 10

## 9 - ம் அதிகாரம்.

# கொல்லாமை.

*கொல்லாமையாவது யாதோருயிரையுங் கொல்லாமை. இது வெகுளி முதிர்ந்தவழி நிகழ்வதொன்றாதலின், அதன்பின் கூறப்பட்டது.*

321. தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
327 தின்னுயிர் நீக்கும் வினை.

(இ - ள்.) *தன்னுயிர் நீங்கினும் செய்யாதொழிக; தான் பிறிதொன்றினுடைய இனிய வுயிரை விடுசெயுந் தொழில்வினை, (எ - று).*

*உயிர்க்குக் கேடுவருங் காலத்து நோய்க்கு மருந்தாகக் கொல்லுதல் குற்றமன்று என்பார்க்கு, இது கூறப்பட்டது.* 1

322. நல்லா றெனப்படுவ தியாதெனின் யாதொன்றுங்
324 கொல்லாமை சூழு நெறி.

(இ - ள்.) *நல்ல வழியென்று சொல்லப்படுவது யாதெனின், அது யாதோருயிரையுங் கொல்லாமையைச் சிந்திக்கும் வழி, (எ - று).*

*இது நன்னெறியாவது கொல்லாமை யென்றது.* 2

323. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன்
323. பின்சாரப் பொய்யாமை நன்று.

(இ - ள்.) *இணையின்றாக நல்லது கொல்லாமை; அதன்பின்பே யனைய, பொய்யாமையும் நன்று, (எ - று).*

*இது சொல்லிய அறத்தினும் பொய்யாமை நன்று; அதினும் நன்று கொல்லாமை யென்றது.* 3



324. அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல்
321 பிறவினை யெல்லாந் தரும்.

(இ - ள்.) *நல்வினை யாதெனின், கொல்லாமை; கொல்லுதல் எல்லாத் தீவினைப்பயனையுந் தருமாதலால், (எ - று).*

*இஃது அறத்தொழிலாவது கொல்லாமை யென்றது.* 4

325. நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
325 கொல்லாமை சூழ்வான் றலை.

(இ - ள்.) *மனைவாழ்க்கையில் நிற்றலை யஞ்சித் துறந்தவ ரெல்லாரினும், கொலையை யஞ்சிக் கொல்லாமையைச் சிந்திப்பான் தலைமை யுடையவன்; இல்வாழ்க்கையில் நிற்பினும்,* (எ - று).

*இஃது எல்லாத் துறவினும் நன்றென்றது.* 5

326. பகுத்துண்டு பல்லுயி ரோம்புத னூலோர்
322 தொகுத்தவற்று ளெல்லாந் தலை.

(இ - ள்) *பல்லுயிர்களுக்குப் பகுத்துண்டு அவற்றைப் பாதுகாத்தல், நூலுடையார் திரட்டின அறங்களெல்லாவற்றினும் தலையான அறம்,* (எ - று).

*இஃது எல்லாச் சமயத்தார்க்கும் நன்றென்றது.* 6

327. கொல்லாமை மேற்கொண் டொழுகுவான் வாழ்நாண்மேற்
326 செல்லா துயிருண்ணுங் கூற்று.

(இ - ள் ) *கொல்லாமையை விரதமாகக்கொண்டு ஒழுகுமவன் வாழ்நாளின் மேல், உயிருண்ணுங் கூற்றுச் செல்லாது,* (எ - று).

*பிறவாமை யுண்டாமாதலால் கூற்றுச்செல்லாது என்றார். இது கொல்லாமையின் பயன் கூறிற்று.* 7

328. உயிருடம்பி னீக்கியா ரென்ப செயிருடம்பிற்
330 செல்லாத்தீ வாழ்க்கை யவர்.

(இ - ள் ) *முற்பிறப்பின்கண் உயிரை யுடம்பினின்று நீக்கினர் இவரென்று பெரியோர் கூறுவர்; குற்றமான வுடம்பினையும் ஊனுஞ் செல்லாத தீய மனை வாழ்க்கையினையும் உடையாரை,* (எ - று).

*இது கொலையினால் வருங் குற்றங் கூறிற்று.* 8

329. கொலைவினைய ராகிய மாக்கள் புலைவினையர்
329 புன்மை தெரிவா ரகத்து.

(இ - ள்.) *கொலைத்தொழில்வினை யுடையராகிய மாக்கள் பொல்லாமையை யாராய்வாரிடத்து, தொழிற்புலையராகுவர்,* (எ - று).

*இவரை உலகத்தார் கன்மசண்டாளரென்று சொல்லுவார்.* 9

330. நன்றாகு மாக்கம் பெரிதெனினுஞ் சான்றோர்க்குக்
329 கொன்றாகு மாக்கங் கடை.

(இ - ள்.) நன்மையாகும் ஆக்கம் பெரிதேயாயினும், ஒருயிரைக் கொன்று ஆகின்ற ஆக்கம் உயர்ந்தோர்க்கு ஆகாது, (எ - று).

இது பெரியோர் வீடுபேற்றை விரும்பிக் கன்மத்தை விடுத்தலால், வேள்வியின் வருங் கொலையும் ஆகாதென்றது. 10

# 10 - ம் அதிகாரம்.

## நிலையாமை.

நிலையாமையாவது மயக்கத்தினால் தானென்று நினைத்திருக்கின்ற யாக்கையும் தனதென்று நினைத்திருக்கின்ற பொருளும் நிலை நில்லாமையைக் கூறல்.

331. நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
331 புல்லறி வாண்மை கடை.

(இ - ள்.) நில்லாத பொருள்களை நிலைநிற்பனவென்று நினைக்கின்ற புல்லிய வறிவுடைமை இழிந்தது, (எ - று).

எனவே, பொருள்களை யுள்ளவாறு காணவொட்டாத மயக்கத்தைக் கடிய வேண்டுமென்றவாறாயிற்று. 1

332. அற்கா வியல்பிற்றுச் செல்வ மதுபெற்றா
333 லற்குப வாங்கே செயல்.

(இ - ள்.) நில்லாத வியல்பை யுடைத்துச் செல்வம், அதனைப் பெற்றால், அப்பொழுதே நிற்பனவாகிய அறங்களைச் செய்க, (எ - று).

நிலையாமை மூன்று வகைப்படும், செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை என. 2

333. கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்
332 போக்கு மதுவிளிந் தற்று.

(இ - ள்.) கூத்தாட்டுக் காண்டற்கு அவைக் கூட்டம் திரண்டாற்போலக் கும் பெருஞ்செல்வத் திரளும்; அந்த அவை யெழுந்து போனாற் போலும் அது போமாறும், (எ - று). 3

334. நாளென வொன்றுபோற் காட்டி யுயிரீரும்

334 வாள துணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) காலென்பது இன்பந் தருவதொன்றுபோலக் காட்டி, உயிரை யீர்வதொரு வாளாம்; அதனை யறிவாரைப் பெறின், (எ - று)

இஃது உயிரீரும் என்றமையால், இளமை நிலையாமை கூறிற்று. 4



335. நாச்செற்று விக்குள்மேல் வாராமு னல்வினை
335 மேற்சென்று செய்யப் படும்.

(இ - ள்.) நாவழங்காமற் செறுத்து விக்குளானது மீதூர்ந்து வருவதன் முன்னே, நல்வினையை மேல் விழுந்து செய்யவேண்டும், (எ - று).

இஃது உயிரானது கழிவதன்முன்னே நல்வினையைச் செய்யவேண்டு மென்றது. 5

336. நெருந லுளனொருவ னின்றில்லை யென்னும்
336 பெருமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) ஒருவன் நேற்றுளனாயிருந்தான், இன்றில்லையாயினா னென்று சொல்லும் பெருமையை இவ்வுலகம் உடைத்து, (எ - று).

இது யாக்கை நிலையாமை கூறிற்று. 6

337. ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப
337 கோடியு மல்ல பல.

(இ - ள்.) ஒரு பொழுதளவும் தம்முயிர் நிலைநிற்கும் என்பதனை யறியாராயிருந்தும், தமது வாழ்நாளைக் கோடியுமல்ல, பலவாகக்கருதுவர் உலகத்தார், (எ - று).

மேல் ஒருநாளுளனானவன் பிற்றைஞான்று செத்தானென்றார் ஈண்டு ஒருபொழுதளவும் உயிர் நிலையாகாது என்றார். 7

338. குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
338 யுடம்போ டுயிருடை நட்பு.

(இ - ள்.) கூடு தனியேகிடக்கப் புள்ளுப் பறந்து போனாற்போலும்; உடம்போடு உயிர்க்கு உள்ள நட்பு, (எ - று).

மேல் ஒருபொழுதென்று காலங்கூறினார் ஈண்டு உயிர் நினைத்த பொழுது போமென்றார். 8

339. உறங்கு வதுபோலுஞ் சாக்கா டுறங்கி
339 விழிப்பது போலும் பிறப்பு.

(இ - ள்.) உறங்குவதனோடு ஒக்கும் சாக்காடு; உறங்கி விழிப்பதனோடு ஒக்

கும் பிறப்பு, (எ - று).

இது போன உயிர் மீண்டும் பிறக்கு மென்பதூஉம், இறத்தலும் பிறத்தலும் உறங்குதலும் விழித்தலும் போல மாறிவருமென்பதூஉம் கூறிற்று. 9

9



340. புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
340 துச்சி லிருந்த வுயிர்க்கு.

(இ-ள்.) தனதல்லாத உடம்பினுள்ளே ஒதுக்குக்குடியாக விருந்த உயிர்க்குப் போயிருப்பதற்கிடம் அமைந்ததில்லையோ? அமைந்ததாயின், இதனுள் இராது.

புக்கில் என்பது முத்தி ஸ்தானம். இது மேற்கூறியவற்றால் உயிர் மாறிப் பிறந்து வரினும் ஓரிடத்தே தவறுமென்பது கூறிற்று. 10

---

## 11 - ம் அதிகாரம்.

## துறவு.

துறவாவது ஒருவன் தவம்பண்ணு நின்றகாலத்து யாதாயினும் ஒரு தொடர்பாடு உளதாயினும், அதனைப்பற்றறத் துறத்தல். இது மயக்கமற்றார்க்கு வருவதொன்றாதலின், அதன்பின் கூறப்பட்டது.

341. அடல்வேண்டு மைந்தின் புலத்தை விடல்வேண்டும்
343 வேண்டிய வெல்லா மொருங்கு.

(இ - ள்.) துறப்பார்க்குப் பொறிக ளைந்தினுக்கும் நுகர்ச்சியான ஐந்தினையுங் கொல்லுதல் வேண்டும், அதற்காகத் தாம் விரும்பின வெல்லாவற்றையும் ஒருகாலத்திலே விடுதல் வேண்டும், (எ - று). 1

342. இயல்பாகு நோன்பிற்கொன் றின்மை யுடைமை
344 மயலாகு மற்றும் பெயர்த்து.

(இ - ள்.) யாதொருபொருளும் இலதாதல் தவத்திற்கியல்பாகும்; பொருளுடைமை மீண்டும் பிறத்தற்குக் காரணமான மயக்கத்தைத் தரும், (எ - று) 2

343. மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
345 லுற்றார்க் குடம்பு மிகை.

(இ - ள்.) பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகையாயிருக்க, மற்றுஞ் சில

தொடர்ப்பாடு உளதாவது யாதினைக்கருதியோ ? (எ - று). 3

344. பற்றி விடாஅ விடும்பைகள் பற்றினைப்
347 பற்றி விடாஅ தவர்க்கு.

(இ - ள்.) பொருள்களைப்பற்றி விடாதவரைத் துன்பங்கள் விடாதே பற்றி நிற்கும், (எ - று).

இது பொருள்களைத் துறவாக்கால் வினை கெடாதென்றது. 4

## துறவறவியல் - **11** - வது துறவு. 67

345. யாதனின் யாதனி னீங்கியா னோத
341 லதனி னதனி னிலன்.

(இ - ள்.) எவன் யாதொன்றினின்றும் யாதொன்றினின்றும் நீங்கினான் அவன் அதனளவு அதனளவு துன்பமுறுதலிலன்,( எ - று). 5

346. பற்றற்ற கண்ணே பிறப்பறுக்கு மற்று
349 நிலையாமை காணப் படும்.

(இ - ள்.) ஒருவன் யாதொரு பொருளோடும் பற்றற்ற பொழுதே அது பிறப்பையறுக்கும்; அதனை விடாதபோது நிலையாமை காணப்படும், (எ - று).

இஃது எல்லாப் பற்றினையும் அறுக்கப் பிறப்பு அறுமென்றது. 6

347. வேண்டி னுண்டாகத் துறக்க துறந்தபி
342 னீண்டியற் பால பல.

(இ - ள்.) தன்னுயிர்க்கு ஆகப உண்டாக வேண்டின், தன்னுடைமை யெல்லாவற்றையுந் துறக்க; துறந்தபின் இவ்விடத்தே யியலும்பகுதியின பல. ()

இஃது இம்மைப் பயன் கூறிற்று. 7

348. தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
348 வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ - ள்.) பற்றறத் துறந்தார் முத்தியைத் தலைப்பட்டார்; அல்லாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையிலே யகப்பட்டார், (எ - று).

இது மறுமைப் பயன் கூறிற்று. 8

349. யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
346 குயர்ந்த வுலகம் புகும்.

(இ - ள்.) *யானென்றும் எனதென்றும் நினைக்கின்ற மயக்கத்தை யறுக்குமவன், தேவர்க்கு மேலாகிய உலகத்தின்கண்ணே செல்லும்,* (எ - று). 9

350. பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
350 பற்றுக பற்று விடற்கு.

(இ - ள்.) *பற்றறுத்தானது பற்றினைப் பற்றுக; அதனைப் பற்றுங்கால், பயன் கருதிப் பற்றாது பற்று விடுதற்காகப் பற்றுக,* (எ - று).

*பற்றற்றான் பற்றாவது தியான சமாதி. பின் மெய்யுணர்தல் கூறுதலான், இது பிற்படக் கூறப்பட்டது.* 10

---



## 12 - ம் அதிகாரம்.

## மெய்யுணர்தல்.

*மெய்யுணர்தலாவது எக்காலத்திலும் எவ்விடத்திலும் அழியாது நிற்கும் பொருள் இதுவென வுணர்தல். இது பற்றறத் துறந்தாரது உள்ள நிகழ்ச்சியாதலான், அதன்பின் கூறப்பட்டது.*

351. ஐயுணர் வெய்தியக் கண்ணும் பயமின்றே
354 மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(இ - ள்.) *மெய் முதலாகிய பொறிகளைந்தினானும் அறியப்படுவனவெல்லாம் அறிந்தவிடத்தும், அதனான் ஒருபயனுண்டாகாது; உண்மையை யறியும் அறிவிலாதார்க்கு,* (எ - று). 1

352. பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரு
351 மருளானா மாணாப் பிறப்பு.

(இ - ள்.) *பொருளல்லாதவற்றைப் பொருளாகக் கொள்கின்ற மயக்கத்தினாலே உண்டாம்; மாட்சிமையில்லாத பிறப்பு,* (எ - று).

இது மெய்யுணருங்கால் மயக்கங் காண்பதாயின், பிறப்புண்டாமென்றது. 2

353. எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
355 மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) யாதொரு பொருள் யாதொரு தன்மைத்தாயினும், அப்பொருளினுடைய வுண்மையைத் தான் உண்மையாகக் காண்பது யாதொன்று அஃது அறிவாம், (எ - று).

மெய்யென்பதூஉம் அறிவென்பதூஉம் ஒன்று; என்னை? எக்காலத்தும் எவ்விடத்தும் ஒரு தன்மையாக அழியாது நிற்றலின், மெய்யாயிற்று; எல்லாப் பொருளையுங் காண்டலால், அறிவாயிற்று. 3

354. பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
358 செம்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.), பிறப்பாகிய அறியாமையினின்று நீங்கப், பிறவாமையாகிய செவ்விய பொருளைக் காண்பது அறிவாம், (எ - று).

பிறவாமை சிறந்ததாதலின், சிறப்பு என்னப்பட்டது. தான் பிறந்தானாகவும் செத்தானாகவும் கருதுகின்ற அறியாமையை விட்டுத், தனக்குச் சாவில்லையாகவும் பிறப்பில்லையாகவும் தான் நிற்கின்ற நிலைமையைக் காணவேண்டுமென்றவாறாயிற்று. 4



355. ஓர்த்துள்ள முள்ள துணரி னொருதலையாப்
357 பேர்த்துள்ள வேண்டா பிறப்பு.

(இ - ள்.) உள்ளமானது உள்ளபொருளை யாராய்ந்து ஒருதலையாக வுணருமாயின், பின்னைப் பிறப்புண்டென்று நினையாதொழிக, (எ - று)

மெய்யுணர்ந்தவர் பிறப்புண்டென்று நினையாதொழிக வென்றவாறு. 5

356. ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
35. வான நணிய துடைத்து.

(இ - ள்.) மெய்ப்பொருளை ஐயப்படுதலினின்று நீங்கித் துணிந்தவர்க்கு, இவ்வுலகத்தினும் மேலுலகம் நணித்தாம் தன்மை யுடைத்து, (எ - று).

துணிந்த அறிவின் கண்ணது எல்லாவுலகுமாதலின், அவ்வறிவுடையார்க்கு உலகம் ஒருங்குதோற்றுதலின், நணித்தாமென்றவாறு. இது மெய்யுணர்வு எவ்

விடமும் அறியுமென்றது, 6

357. இருணீங்கி யின்பம் பயக்கு மருணீங்கி
35 - மாசறு காட்சி யவர்க்கு.

(இ - ள்.) மயக்கத்தினின்று நீங்கிக் குற்றமற்ற அறிவுடையார்க்கு, அறியாமையாகிய விருள் நீங்க முத்தியாகிய வின்ப முண்டாம், (எ - று).

இது மெய்யுணர்ந்தார்க்கு வினைவிட்டு முத்தியின்ப முண்டாமென்றது. 7

358. கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
356 மற்றீண்டு வாரா நெறி.

(இ - ள்.) இவ்விடத்தே மெய்ப்பொருளை யறிந்துதெளிந்தாரே அடைவார்; மீண்டு இவ்விடத்து வாராத வழியினை, (எ - று).

கல்வி யறிவால் அறிவை அறியப் பிறப்பறு மென்றவாறு. 8

359. சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் மற்றழித்துச்
359 சார்தரா சார்தரு நோய்.

(இ - ள்.) தன்னைச் சார்வனவற்றையறிந்து அவையிற்றின் சார்வுகெட ஒழுகுவனாயின், அவ்வொழுக்கத்தினையழித்துச் சார்தலைச் செய்யா; சாரக்கடவனவாய துன்பங்கள், (எ - று).

சார்பு—வினைச்சார்பு; கெட ஒழுகல்—காமம் வெகுளி மயக்கமின்றி மெய்யுணர்ச்சியாலொழுகுதல். இஃது உண்மையைக் கண்டு அக்காட்சியைத் தப்பாமல் முடிய நிற்பனாயின், சாரக்கடவதாய் நிற்கின்ற வினை சாராதே விட்டுப்போமென்றது. 9



360. காமம் வெகுளி மயக்க மிவைமூன்றி
360 னாமங் கெடக்கெடு நோய்.

(இ - ள்.) ஆசையும் வெகுளியும் மயக்கமு மென்னும் இவை மூன்றினது நாமம்போக, வினைபோம், (எ - று)

வினைகெடுதற்கு வழி இதுவென்று கூறுதலான், இது மெய்யுணர்தலாயிற்று. 10

---

**13 - ம் அதிகாரம்.**

# அவாவறுத்தல்.

*அவாவறுத்தலாவது பொய்ப்பொருள்கள்மேற் செல்லும் ஆசையைத்தவிர்த்தல். முத்திக்குக்காரணமாக மெய்யுணர்தலே யமையுமாயினும், பின்னும் உடம்போடு நிற்றலின் தான் விட்டபொருள்கள்மாட்டு ஆசை செல்லின், மீண்டும் பிறப்பிற்குக் காரணமாம்; ஆதலான், இதனைத் தவிரவேண்டுமென்று எல்லாவற்றினும் பின் இது கூறப்பட்டது.*

361. அஞ்சுவ தோரு மறனே யொருவனை
366 வஞ்சிப்ப தோரு மவா.

(இ - ள்.) *ஒருவனை வஞ்சனை செய்வது ஆசை; ஆதலால், அதனை அஞ்சுவதே அறம்,* (எ - று).

*வஞ்சனை செய்தல் - நன்றி செய்வாரைப் போல முன்னே நின்று, பின்னே தீக்கதியுள் உய்த்தல். இஃது ஆசையின்மை வேண்டுமென்றது.* 1

362. அவாவில்லார்க் கில்லாகுந் துன்பமஃ துண்டேற்
368 றவாஅது மேன்மேல் வரும்.

(இ - ள்.) *ஆசையில்லார்க்குத் துன்பம் இல்லையாகும்; அஃது உண்டாயின், துன்பமானது கெடாது மேன்மேல் வரும்,* (எ - று). 2

363. அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
361 தவாஅப் பிறப்பீனும் வித்து.

(இ - ள்.) *எல்லாவுயிர்க்கும் எல்லா காலுங் கேடில்லாத பிறப்பைக் கொடுக்கும் விதையாவது ஆசையென்று சொல்லுவர்,* (எ - று).

*இஃது ஆசை துன்பம் தருதலேயன்றிப் பிறப்பையும் தருமென்றது.* 3

துறவறவியல் - **13** - வது அவாவறுத்தல். 71

364. அற்றவ ரென்பா ரவாவற்றார் மற்றையா
365 ரற்றாக வற்ற திலர்.

(இ - ள்.) *பற்றற்றவரென்பார் ஆசையற்றவரே; ஆசையறுதவர் பற்றினை யறுத்தாராயினும், ஆசையற்றாரைப் போலப் பற்றற தலிலர்,* (எ - று). 4

365. தூஉய்மை யென்ப தவாவின்மை மற்றது
364 வாஅய்மை வேண்ட வரும்.

(இ - ள்.) ஒருவர்க்கு « அழுக்கறுத்தலாவது » ஆசையின்மை ; அவ்வாசை யின்மை மெய் சொல்லுதலை விரும்ப வரும், (எ - று).

இது பொருள்மே லாசையில்லாதார் பொய் கூறாராதலின், மெய் சொல்ல அவாவின்மை வரும் என்று அவாவறுத்தற்குக் கருவி கூறிற்று. 5

366. அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
367 தான்வேண்டு மாற்றான் வரும்.

(இ - ள்.) ஆசையை மிகவும் போக்குவாராயின், கேடில்லாத வினை தான் வேண்டின நெறியாலே வரும், (எ - று). 6

367. வேண்டாமை யன்ன விழுச்செல்வ மீண்டில்லை
363 யாண்டு மஃதொப்ப தில்.

(இ - ள்.) அவாவின்மை போல மிக்க செல்வம் இவ்விடத்தில் இல்லை; அவ்விடத்தினும் அதனை யொப்பது பிறிதில்லை, (எ - று).

இஃது இதனின் மிக்கதொரு பொருளுமில்லை யென்றது. 7

368. இன்ப மிடையறா தீண்டு மவாவென்னுந்
369 துன்பத்துட் டுன்பங் கெடின்.

இ - ள். அவாவாகிய துன்பங்களுள் மிக்க துன்பம் கெடுமாயின், இன்ப மானது இடைபறாமல் வந்து மிகும், (எ - று).

இஃது இன்பமும் இதனாலே வருமென்றது. 8

369. வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
362 வேண்டாமை வேண்ட வரும்.

(இ - ள்) வேண்டுங்கால் பிறவாமையை விரும்புதல் வேண்டும்; அப் பிற வாமை பொருளை விரும்பாமையை விரும்பத் தானே வரும், (எ - று).

இது பிறவாமையும் இதனாலே வருமென்றது. 9



370. ஆரா வியற்கை யவாநீப்பி னந்நிலையே
370 பேரா வியற்கை தரும்.

(இ - ள்.) நிறையா இயல்பினையுடைய ஆசையை விடுவாராயின், அது விட்ட அப்பொழுதே அழியாத இயல்பினைத் தரும், (எ - று).

*இயல்பாவது என்று மொருபடிப்பட்டது. இது தன்னுடைய உருவத்தைப் பெறுமென்றது.* 10

சந்நியாசமாகிய துறவறவியல் முற்றிற்று.

## 1 - ம் அதிகாரம்.

## ஊழ்.

*ஊழாவது முன்பு செய்தவினை பின்பு விளையும் முறை. மேற்கூறிய அறப் பகுதியும் இனிக் கூறுகின்ற பொருட் பகுதியும் இன்பப் பகுதியும் முன்செய்த நல்வினையால் வருதலையும், இவற்றிற்கு மாறான பாவமும் வறுமையும் துன்பமும் தீவினையால் வருதலையும் அறியாதே அவை உலகத்தில் மக்கள்பலர் தமது முயற்சியால் வந்தனவென்பரன்றே? அதற்காக இது கூறப்பட்டது. ஒருவன் செய்த வினை தனது பயனை வழுவின்றிப் பயத்தல் அறத்தினுகுமாதலான், இஃது அறத்தினிறுதிக்கண் கூறப்பட்டது.*

371. ஆகூழாற் றேன்று மசைவின்மை கைப்பொருள்
371 போகூழாற் றேன்று மடி.

(இ - ள்) *ஒருவனுக்கு ஆக்கங் கொடுக்கின்ற ஊழ் தோற்றினுல் முயற்சி தோன்றும்; அழிவு கொடுக்கின்ற ஊழ் தோற்றினுல் மடிதோன்றும்,* (எ - று).

*இஃது ஆக்கத்திற்கும் கேட்டிற்கும் ஏதுவான முயற்சியும் முயலாமையும் ஊழால் வருமென்றது.* 1

372. பேதைப் படுக்கு மிழவூ ழறிவகற்று
372 மாகலூ ழுற்றக் கடை.

(இ - ள்) *கெடுக்கும் ஊழ் தோன்றினுல் அறியாமையை யுண்டாக்கும்; ஆக்கும் ஊழ் தோன்றினுல் அறிவை விரிக்கும்,* (எ - று).

*இஃது அறிவும் அறியாமையும் ஊழால் வருமென்றது.* 2



373. நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
373 னுண்மை யறிவே மிகும்.

(இ - ள்.) *நுண்ணியவாக வாராய்ந்த நூல்கள்பலவற்றையுங் கற்றுனுலும், பின்னையும் தனக்கு இயல்பாகிய அறிவே மிகுத்துத் தோன்றும்,* (எ - று)

*மேல் அறிவிற்குக் காரணம் ஊழ் என்றார் அஃதெற்றுக்கு? கல்வியன்றே காரணமென்றார்க்கு, ஈண்டுக் கல்வியுண்டாயினும் ஊழானுபவறிவு வலியுடைத்தென்றார்.* 3

374. ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
38C சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) *ஊழினும் மிக்க வலியுடையன யாவையுள? பிறிதொன்றை யாராயுங் காலத்தும், தான் முற்பட அவ்வாராய்ச்சிக்கு உடன்பட்டுநிற்கும், (எ-று).*

375. நல்லவை யெல்லாஅந் தீயவாந் தீயவு
37 நல்லவாஞ் செல்வஞ் செயற்கு.

(இ-ள்.) *செல்வம் உண்டாக்குவதற்குத் தனக்குமுன்பு தீதாயிருந்தன வெல்லாம் நன்றாம்; அச்செல்வத்தை யில்லையாக்குவதற்கு முன்பு நன்றாய் இருந்தன வெல்லாம் தீதாம், (எ - று).* 5

376. பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
37c சொரியினும் போகா தம.

(இ - ள்.) *தம்முடைய பகுதியல்லாதனவற்றை வருந்திக்காப்பினும் அவை தமக்கு ஆகா; தம்முடைய பகுதியாயினவற்றைக் கொண்டு சென்று சொரிந்து விடினும் அவைபோகா, (எ - று).*

*இது முன்புள்ள செல்வம் காவற்படுதலும் களவுபோதலும் ஊழினாலேயாமென்றது.* 6

377. வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
377 தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

(இ - ள்.) *விதானம் பண்ணினவன் விதானம் பண்ணின வகையினாலல்லது, கோடிபொருளை யீட்டினவர்க்கும் அதனால்வரும் பயன்கோடல் அருமையுடைத்து, (எ - று).*

*இது பொருள்பெற்றாலும் நுகர்தற்கு ஊழ்வேண்டுமென்றது.* 7





378. இருவே றுலகத் தியற்கை திருவேறு
374 தெள்ளிய ராதலும் வேறு.

(இ - ள்.) *செல்வமுடையாராதலும் தெள்ளியாராதலும் வேறு வேறு ஊழி ஞல் வரும் ; ஆதலால், இரண்டு வகையாதல் உலகத்தியல்பு,* (எ - று). 8

379. துறப்பார்மற் றுப்புர வில்லா ருறற்பால
3·18 லூட்டா கழியு மெனின்.

(இ - ள்.) *நுகரும்பொரு ளில்லாதார் துறக்கவமைவர்; தமக்குவந்துறுந் துன்பப்பகுதியானவை உருதுபோமாயின்,* (எ - று).

*இது துறவறமானது ஊழிஞல் வருமென்றது.* 9

380. நன்றுங்கா னல்லவாக் காண்பவ ரன்றுங்கா
3·19 லல்லற் படுவ தெவன்.

(இ - ள்.) *நன்மைவருங்காலத்து நன்ருகக் காண்பவர் தீமைவருங்காலத்து அல்லற்படுவது யாதினுக்கு ?* (எ - று).

*இஃது அறிந்தவர் வருவனவெல்லாம் இயல்பென்று கொள்ளவேண்டு மென்றது.* 10

அறத்துப்பால் முற்றிற்று.

---

# பொருட்பால். (70)

## 1. அரசியல். (25)

*இதனுள் இறைமாட்சி முதலாக இடுக்கணழியாமை யீருகக் கூறிய அதிகாரம் இருபத்தைந்தும் பெரும்பான்மையும் அரசர்கு உரியவாதலின் அரசியலென்றும், அமைச்சுமுதலாக அவையஞ்சாமை யீருகக்கூறிய அதிகாரம் பத்தும் பெரும்பான்மையும் அமைச்சர்க்கு உரியவாதலின் அமைச்சியலென்றும், நாடுமுதலாகப் படைச்செருக்கீருகக் கூறிய அதிகாரம் ஐந்தும் பொருட்பகுதியாதலின் பொருளியலென்றும், நட்பு முதலாகக் கூடாநட்பீருகக் கூறிய அதிகாரம் ஐந்தும்*

நட்பின் பகுதியாதலின் நட்பியலென்றும், பேதைமை முதலாக மருந்திறுகக் கூறிய அதிகாரம் பன்னிரண்டுங் கேட்டுக்குககாரணமாதலின் துன்பவியலென்றும், குடிமுதலாகக் கயமையிறுகக கூறிய அதிகாரம் பதின்மூன்றும் மக்களது இயல்பு கூறுதலின் குடியியலென்றும் ஆகப் பொருட்பால் கூறிய அதிகாரம் எழுபது பகுதியாயிற்று.

## 1 - ம் அதிகாரம்.

# இ றை ம ா ட் சி.

*இதனுள், இறைமாட்சியாவது இறைவனது உண்மை கூறுதல். இவ்வதிகாரதநுள் உரைக்கின்றபொருள் அரசனை நோக்கிற்றுதலானும் அரசன் மக்களிற் சிறந்தானுதலானும் இவ்வதிகாரங் கூறப்பட்டது*

381. படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு.

(இ - ள்.) *படையும் குடியும் கூழும் அமைச்சும் நட்பும் அரணுமென்னும் ஆறுபொருளினையும் உடையவன் அரசருள் ஏறுபோல்வான்,* (எ - று).

*ஈண்டுக் குடியுள் நாடு அடங்கிற்று. இஃது அரசனுக்கு உண்டாகுவன கூறிற்று.* 1

382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

(இ - ள்.) *அஞ்சாமையும் ஈகையும் அறிவுடைமையும் ஊக்கமுடைமையு மென்னும் இந்நான்கு குணமும் ஒழியாமை வேந்தலுக்கியல்பு,* (எ - று). 2



383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

(இ - ள்.) *மடியின்மையும் கல்வியுடைமையும் ஒருபொருளை ஆராய்ந்து துணிதலுடைமையும் என்று சொல்லப்பட்ட இம்மூன்றும் பூமியை யாள்*

*பவனுக்கு நீங்காமல்வேண்டும், (எ - று).* 3

384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
384 மான முடைய தரசு.

(இ - ள்.) *அறத்திற் றப்பாமலொழுகி, அறமல்லாத காம வெகுளியைக் கடிந்து, மறத்திற் றப்பாத மானத்தையுடையவன் அரசன், (எ - று).* 4

385. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
386 மீக்கூறு மன்ன னிலம்.

(இ - ள்.) *காண்கைக்கு எளியனுய்க் கடுஞ்சொற்கூறுதலும் அல்லனுயின், அம்மன்னனை உலகத்தார் உயர்த்துக் கூறுவா, (எ - று)*

*இது மன்னன் உலகத்தார்மாட்டு ஒழுகுந் திறங் கூறிற்று.* 5

386. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
385 வகுத்தலும் வல்ல தரசு.

(இ - ள்.) *பொருள் வரும்வழி யியற்றலும், அதனை அழியாமலீட்டலும், அதனைச் சோர்வுபடாமற் காத்தலும், காத்த அதனை வேண்டுவனவற்றிற்குப் பகுத்தலும் வல்லவன் அரசனுவான், (எ - று).*

*பகுத்தல் - யானை குதிரை முதலிய படைக்குக் கொடுத்து அவையிற்றை யுண்டாக்குதல். இது பண்டாரங் கூறுமாறு கூறிற்று.* 6

387. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
390 முடையானும் வேந்தர்க் கொளி.

(இ - ள்.) *கொடுத்தலும், தலையளி செய்தலும், செங்கோன்மையும், குடிகளைப் பாதுகாத்தலுமென்று சொல்லப்படுகின்ற இந்நான்கினையு முடையவன் வேந்தர்க்கெல்லாம் விளக்காம், (எ - று).*

*கொடுத்தல் - தளர்ந்த குடிக்கு விதை ஏர் முதலியன கொடுத்தல்; அளித்தல் - அவரிடத்துக் கொள்ளுங் கடமையைத் தளர்ச்சி பார்த்து விட்டு வைத்துப் பின்பு கோடல்; செங்கோன்மை-கொள்ளும் முறைமையைக் குறையக்கொள்ளாமை; குடியோம்பல் - தளர்ந்த குடிக்கு இறை கழித்தல். இது குடிக்கு அரசன் செய்யுந் திறங் கூறிற்று.* 7

388. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
387 றான்கண் டனைத்திவ் வுலகு.

(இ - ள்.) *இனிய சொல்லோடே கொடுத்துத் தலையளி செய்யவல்ல அரசனுக்குத் தன்னேவலாலே இவ்வுலகம் தான் கண்டாற்போலும் தன் வசத்தே கிடக்கும்,* (எ - று). 8

389. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
388 கிறையென்று வைக்கப் படும்.

(இ - ள்.) *குற்றஞ் செய்தாரை அதற்குச் செய்யும் முறைமை தப்பாமற் செய்து, எல்லாவுயிரையுங் காத்தலைச் செய்கின்ற அரசன், மனிதர்க்கு நாயகனென்று எண்ணப்படுவான்,* (எ - று). 9

390. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்தன்
389 கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

(இ - ள்.) *தன் செவி வெறுக்கும்படியாகப் பிறர் செய்த குற்றங்களைக் கேட்டு வைத்தும், அதனைப் பொறுக்கவல்ல குணமுடைய வேந்தனது குடைக்கீழே உலகு தங்கும்,* (எ - று).

*சொற்பொறுக்கும் என்பதற்குப் புரோகிதர் தன்னிடத்துச் சொல்லுஞ் சொற்களைப் பொறுக்கவல்ல என்பாருமுளர்.* 10

---

## **2** - ம் அதிகாரம்.

## கல்வி.

*கல்வியாவது கல்வியாமாறும் அதனானாகிய பயனுங் கூறுதல். இது முதலாகப் பொருள் வரவு இயற்றுந் திறங் கூறுகின்றாராதலின், அஃதியற்றுங்கால் கல்வி முந்துறவேண்டும்; அதனால், இது முன் கூறப்பட்டது.*

391. கற்க கசடறக் கற்பவை கற்றபி
391 னிற்க வதற்குத் தக.

(இ - ள்.) *கற்கப்படுவனவற்றைக் குற்றமறக் கற்க; கற்றபின்பு அக்கல்விக்குத் தக வொழுக,* (எ - று).

*இது கற்கவும் வேண்டும்; அதனைக் கடைப்பிடிக்கவும் வேண்டுமென்றது.* 1

392. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்

392 கண்ணென்ப வாழு முயிர்க்கு.

(இ - ள்.) எண்ணென்று சொல்லப்படுவனவும் மற்றை எழுத்தென்று சொல்லப்படுவனவுமாகிய இவ்விரண்டு பொருளேயும் உலகின்கண் வாழுமுயிர் களுக்குக் கண்ணென்று சொல்லுவர் அறிவோர், (எ - று). 2



393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
393 புண்ணுடையர் கல்லா தவர்.

(இ - ள்.) கற்றோர் கண்ணுடைய ரென்று சொல்லப்படுவர்; கல்லாதார் முகத்தின்கண்ணே இரண்டு புண்ணுடைய ரென்று சொல்லப்படுவர், (எ- று).

அறிவு கல்வியின்கண்ணதாகலான், அக்கல்வியில்லாதார் கண் புண்ணாயிற்று. 3

394. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
396 கற்றனைத் தூறு மறிவு.

(இ - ள்.) அகழ்ந்த அளவு மணற்கேணி நீருண்டாம்; அதுபோல, மாந்தர்க் குக் கற்ற அளவும் அறிவுண்டாம், (எ - று.)

இஃது அறிவுண்டாமென்றது. 4

395. ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற்
398 கெழுமையு மேமாப் புடைத்து.

(இ - ள்.) ஒருவனுக்கு ஒரு பிறப்பிலே கற்ற கல்வி தானே எழு பிறப் பினும் ஏமமாதலை யுடைத்து, (எ - று).

கற்ற கல்வி தானென்று கூட்டுக. இது வாசனை தொடர்ந்து நன்னெறிக்கண் உய்க்குமென்றது. 5

396. கேடில் விழுச்செல்வங் கல்வி யொருவற்கு
400 மாடல்ல மற்றை யவை.

(இ - ள்.) ஒருவனுக்குக் கேடில்லாத சீரிய பொருளாவது கல்வி; மற்றவை யெல்லாம் பொருளல்ல, (எ - று).

*இது கல்வி அழியாத செல்வமென்றது.* 6

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
397 சாந்துணையுங் கல்லாத வாறு.

(இ - ள்.) *யாதோரிடத்தே செல்லினும் அதுவே தனது நாடும் ஊரும் போலாம்; ஆதலால், ஒருவன் சாந்துணையும் கல்லாதொழுகுதல் யாதினைக்கருதி?*

*இது கல்வி எல்லாரானும் கைக்கொள்ளப்படு மென்றது.* 7

398. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
394 லனைத்தே புலவர் தொழில்.



(இ - ள்.) *மக்களிருவர் உவக்குமாறு கூடி அவர் நினைக்குமாறு பிரிதல் போலும்; கற்றோர் செய்யுந்தொழில்,* (எ - று).

*இஃது இன்பம் நுகரினும் வினை செய்யினும் பிறர்க்கும் இன்பம் பயக்கச் செய்தல் கல்வியாலாமென்றது.* 8

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
✓399 காமுறுவர் கற்றறிந் தார்.

(இ - ள்.) *தாம் இனிதாக நுகர்வதொன்றை உலகத்தார் நுகர்ந்து இன்புறுவாராகக் கண்டால், அதற்கு இன்புறுவர் கற்றறிந்தவர்,* (எ - று).

*இஃது அழுக்காறு செய்யாது இன்புறுதல் அறமாதலின், அது கல்வியானே வருமென்றது.* 9

400. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
39.. கடையரே கல்லா தவர்.

(இ - ள்.) *பொருளுடையார் முன்பு பொருளில்லாதார் நிற்குமாறுபோல, அதனைக் காதலித்து நிற்றலுமன்றிக் கற்றாரிடத்தாவர் கல்லாதார்,* (எ - று).

*இது கற்றார் எல்லாரினுந் தலையாவாரென்றது.* 10

---

## 3 - ம் அதிகாரம்.

## கல்லாமை.

*கல்லாமையாவது கல்வியில்லாமையால் உளதாகுங் குற்றங் கூறுதல். மேற்*

கல்வி வேண்டுமென்றார் அஃதிலாதார்க்கு உளதாகுங் குற்றமென்னை யென்றார்க்குக் கூறியதாதலான், அதன்பின் இது கூறப்பட்டது.

401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(இ - ள்.) கொம்மையின்றி வட்டாடினாற் போலும்; நிரம்பிய நூல்களைக் கற்றலின்றி வார்த்தைசொல்லுதல், (எ - று).

அரங்கு - சூது; வட்டாடுதல் - உண்டை யுருட்டல்; கோட்டிகொளல் - "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என்றாற்போல. இது கல்லாதார் வார்த்தை சொல்லின், அது தப்பு மென்றது. 1

402. கல்லாதான் சொற்கா முறுதல் முலையிரண்டு
மில்லாதாள் பெண்காமுற் றற்று.



(இ - ள்.) கல்வியில்லாதான் சொல்லுதற்கு ஆசைப்படுதல், இரண்டுமுலையு மில்லாதாள் பெண்மைக்குக் காமுற்றாற்போலும், (எ - று).

இது தன்னாசையல்லது சொன்னாலும் விரும்புவாரில்லை யென்றது. 2

403. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(இ - ள்.) கல்லாதவரும் ஓரிடத்து மிகவும் நல்லராவர்; கற்றவர் முன்பு உரையாடாதிருக்கக்கூடுமாயின், (எ - று).

சொல்லாதொழிய அறிவாரில்லையாவர் என்றவாறாயிற்று. இது கல்லாதார்க்கு உபாயம் இது வென்றது. 3

404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(இ - ள்.) கல்லாதானது ஒண்மை மிகவும் நன்றாயிருப்பினும், அதனை ஒண்மையாகக் கொள்ளார் அறிவுடையார், (எ - று).

ஒண்மை யெனினும் அறிவெனினும் அமையும். இது கல்லாதார் ஒள்ளியராயினும் மதிக்கப்படாரென்றது. 4

405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து

405 சொல்லாடச் சோர்வு படும்.

(இ - ள்.) கல்லாத ஒருவனது பெருமை கற்றவன் கிட்டி யுரையாட மறையும், (எ - று).

இது பெருமையுடையாராயினும் மதிக்கப் படாரென்றது. 5

406. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
409 கற்று ரனைத்திலர் பாடு.

(இ - ள்.) கல்வியில்லாதார் உயர்குலத்திற் பிறந்தாராயினும், இழிகுலத்துப் பிறந்தும் கற்றாரோடு ஒத்த பெருமையிலர், (எ - று).

இது குலமுடையாராயினும் மதிக்கப்படாரென்றது. 6

407. நுண்மா ணுழைபுல மில்லா னெழினலம்
407 மண்மாண் புனைபாவை யற்று.



(இ - ள்.) நுண்ணிதாகிய மாட்சிமைப்பட்ட ஆராய்ச்சியையுடைய கல்வியில்லாதான் அழகு, மண்ணினாலே நன்றாகச்செய்த பாவையின் அழகினை யொக்கும், (எ - று).

இஃது அழகியராயினும் மதிக்கப்படாரென்றது. 7

408. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்
406 களரனையர் கல்லா தவர்.

(இ - ள்.) உளரென்னும் அளவினையுடையாரல்லது, பயன்படாத களர்நிலத்தை யொப்பர் கல்லாதவர், (எ - று).

இது பிறர்க்குப் பயன்படாரென்றது. 8

409. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
408 கல்லார்கட் பட்ட திரு.

(இ - ள்.) கல்லார்மாட்டு உண்டாகிய வறுமைபோலப், பிறர்க்கு இன்னாமையைச் செய்யும் ; கல்லாதார்மாட்டு உண்டாகிய செல்வம், (எ - று).

இது செல்வமுண்டாயின், பிறரைத் துன்பமுறுவிப்பரென்றது. 9

410. விலங்கொடு மக்க ளனைய ரிலங்குநூல்
410 கற்றாரோ டேனை யவர்.

(இ - ள்.) விலங்குச் சாதியோடும் மக்களோடும் உள்ள வேறுபாடுடையர்; விளங்கின நூல்களைக் கற்றவரோடு கல்லாதவர், (எ - று).

இது கல்லாதார் விலங்கென்றது. 10

---

## 4 - ம் அதிகாரம்.

## கேள்வி.

கேள்வியாவது கேள்வியாமாறும் அதனானாகிய பயனும் கூறுதல். நூல்களைக் கற்கமாட்டாதார் அவற்றைக் கற்றார்மாட்டுக் கேட்டலும் அறிவுக்குக் காரணமா மென்பதனால், அதன்பின் இது கூறப்பட்டது.

411. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவன்
414 ஒற்கத்துக் கூற்றாந் துணை.

(இ - ள்.) கற்கமாட்டானாயினுங் கேட்க; அக்கேள்வி ஒருவன் தளர்ச்சிக்குத் தாங்குவதொரு துணையாம், (எ - று).

இது கேள்வி வேண்டுமென்றது. 1

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.





(இ - ள்) செவிக்கு உணவாகிய கேள்வி யில்லாதபோது வயிற்றுக்கும் சிறிது உணவு கொடுக்கத் தகும், (எ - று)

பெருக வுண்ணின் கேள்வியை விரும்பாது காமநுகர்ச்சியை விரும்புமாதலான், சிறிது என்றார் இஃது எல்லாக்காலமும் கேட்க வேண்டு மென்றது 2

413. எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
416 மான்ற பெருமை தரும்.

(இ - ள்) எவ்வளவிற்றாயினும் நல்ல நூல்களைக் கேட்க, அக்கேள்வி அவ்வளவிற்றே யாயினும், நிரம்பின பெருமையைத் தரும், (எ - று)

இஃது எல்லாக்காலமுங் கேட்டிலனாயினும், கேட்குங்கால் நல்லது கேட்க வேண்டு மென்றது 3

414. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
415 யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

(இ - ள்) வழுக்குத லுண்டான விடத்து உதவும் ஊன்றுகோல் போலும், ஒழுக்கமுடையார் கூறுஞ் சொற்கள், (எ - று)

இது கேட்பது ஒழுக்கமுடையாரமாட்டென்பது கூறிற்று 4

415. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய
419 வாயின ராத லரிது.

(இ - ள்) நுணணிதாகிய கேள்வியை யுடையாரல்லாதார், தாழ்ந்த சொற் கூறும் வாயுடையாராதல் இல்லை, (எ று)

இது கேள்வியுடையார் தம்மை வியந்து சொல்லா ரென்றது 5

416. பிழைத்துணர்ந்தும் பேதைமை சொல்லா ரிழைத்துணர்ந்
417 தீண்டிய கேள்வி யவர்.

(இ - ள) ஒரு பொருளைத் தப்ப உணர்ந்தாலும், அறிவின்மையாயின சொல்லார், ஆராய்ந்துணர்ந்து திரட்டிய கேள்வியை யுடையார், (எ - று)

இது கேட்டறிந்தார் அறியாமை சொல்லா ரென்றது 6

417. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
413 னான்றாரோ டொப்பர் நிலத்து.

(இ - ள்) செவிக்கு உணவு போன்ற கேள்வியை யுடையவர் நிலத்தின் கணணே யிருப்பினும், அவியை யுணவாக வுடைய தேவரோடு ஒப்பர், (எ - று).

418 செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வஞ்
411 செல்வத்து ளெல்லாந் தலை,



* (இ-ள்.) ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான் வருஞ் செல்வம்; அச்செல்வம் பிறசெல்வங்க ளெல்லாவற்றினும் தலையாகலான், (எ - று).

419. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
420 ளவியினும் வாழினு மென்.

(இ - ள்.) செவியால் நுகரும் இன்பத்தை யறியாத வாயால் நுகரும் இன்பத்தையறியும் மாக்கள் செத்தால் வருந் தீமை யாது? வாழ்ந்தால் வரும் நன்மை யாது? உலகத்தார்க்கு, (எ - று).

இது கேள்வியில்லாதார் பிறர்க்குப் பயன் படாரென்றது. 9

420. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
418 றோட்கப் படாத செவி.

(இ - ள்.) ஓசை மாத்திரம் கேட்டனவாயினும், அதுவுங் கேளாத செவி போலும்; நல்லோர் கூறுஞ் சொற்களால் துளைக்கப்படாத செவி, (எ - று).

இது கேள்வியில்லாதார் செவிட ரென்றது. 10

---

## 5 - ம் அதிகாரம்.

## அறிவுடைமை.

*அறிவுடைமையாவது அறிவாவது இன்னதென்பதும் அதனுலாகிய பயனும் கூறுதல். இது கல்வியும் கேள்வியுமுடையாராயினும் கேட்ட பொருளை யுள்ளவாறு உணர்ந்தறிதல் வேண்டு மாதலான், அதன்பின் கூறப்பட்டது.*

421. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
430 ரென்னுடைய ரேனு மிலர்.

(இ - ள்.) *அறிவினை யுடையார் யாதொன்று மில்லாராயினும், எல்லா முடையர்; அறிவிலார் எல்லாப் பொருளும் உடையாராயினும் ஒருபொருளும் இலர், (எ - று).*

*இஃது அறிவுடைமை வேண்டு மென்றது.* 1

422. எவ்வ துறைவ துலக முலகத்தோ
426 டவ்வ துறைவ தறிவு.

(இ - ள்.) *யாதொருவாற்று லொழுகுவது உலகர், அதனோடு கூடத் தானும் அவ்வாற்று னொழுகுதல் அறிவாவது, (எ - று).*

*அறிவாவது எத்தன்மைத்து என்றாற்கு, முற்பட உயர்ந்தாரோடு பொருந்த ஒழுகுதல் அறிவு என்றார்.* 2

* இது பரிமேலழகருரை.



423. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
425 கூம்பலு மில்ல தறிவு.

(இ - ள்.) *ஒருவனுக்கு ஒள்ளிமையாவது உலகத்தோடு பொருந்தினது; அதனை நீர்ப்பூப்போல மலர்தலுங் குவிதலுமின்றி யொருதன்மையாகச் செலுத்துதல் அறிவு, (எ - று).*

*இஃது உயர்ந்தாரோடு நட்புப் பண்ணுதலும் அறிவென்றது.* 3

424. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
423 மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) யாதொரு பொருளை யாவர் சிலர் சொல்லக் கேட்பினும், அப்பொருளினது உண்மையை யாராய்வது அறிவாவது, (எ - று).

இது யாவர் சிலர் கட்டோராயினும் பகைவராயினும் அவர் கூறக் கேட்டவற்றிற் றெள்ளியராய் ஆராய்ந்து துணித லறிவென்றது. 4

425. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய்
424 நுண்பொருள் காண்ப தறிவு.

(இ - ள்.) அறிதற்கரிய பொருளவாகிய சொற்களைத் தெளியப் பொருளாம்படி பிறரிசையச் சொல்லி, பிறர் சொல்லுஞ் சொற்களின் நுண்ணியவாகிய பொருள்களை அவர் சொல்லாமல் தானே காண்பது அறிவாவது, (எ - று).

இது சொற்பொருள் காண்ட லறிவென்றது. 5

426. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
422 நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(இ - ள்.) உள்ளஞ் சென்ற விடத்தே உடம்பையுஞ் செல்லவிடாது, தீமையை நீக்கி, நன்மைப்பகுதியிலே செலுத்துவது அறிவாவது, (எ - று).

இது காமநுகர்ச்சியின்கண் பழியும் பாவமும் பொருட்கேடும் வாராமற் செலுத்துவது அறிவென்றது. 6

427. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
428 தஞ்ச லறிவார் தொழில்.

(இ - ள்.) அஞ்சத் தகுவதனை அஞ்சாதொழிதல் ஒருவர்க்கு அறிவின்மையாதல்; அஞ்சத்தகுவதனை அஞ்சுதல் அறிவுடையார் தொழில், (எ - று).

மேல் அஞ்சாமை வேண்டு மென்றாராயினும், ஈண்டு அஞ்ச வேண்டுவனவற்றிற்கு அஞ்சுதல் அறிவென்றார். 7

428. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
427 ரஃதறி கல்லா தவர்.

அரசியல் - 6 - வது குற்றங்கடிதல். 85

(இ - ள்.) பிற்பயக்குமது அறிவார் அறிவுடையாராவார்; அதனை யறியாதவர் அறிவில்லாதவராவர், (எ - று).

இது மேற் சொல்லுவன வெல்லாம் தொகுத்துக் கூறிற்று. 8

429. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
421 முள்ளழிக்க லாகா வரண்.

(இ - ள்.) ஒருவனுக்குக் குற்றமறைக்குங் கருவியாவது அறிவு; பகைவாா லும் உட்புகுந்து அழிக்கலாகா அரணும் அதுதானே, (எ - று).

இது தனக்குள்ள குற்றத்தை மறைக்கு மென்றும், பிறரால் வருந் தீமையைக் காக்குமென்றும், அறிவினாலாம் பயன் கூறிற்று. 9

430. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
429 யதிர வருவதோர் நோய்.

(இ - ள்.) துன்பம் வருவதற்கு முன்பே வருமென்று நினைத்துக் காக்கும் அறிவையுடையார்க்கு நடுங்க வருவதொரு துன்பம் இல்லை, (எ - று).

இது முன்னை வினையால் வருந் துன்பமும் முற்பட்டுக் காக்கின், கடிதாக வாராதென்றது. 10

---

## 6 - ம் அதிகாரம்.

## குற்றங்கடிதல்.

குற்றங்கடிதலாவது காமக் குரோத லோப மோக மத மாற்சரிய மென்னும் ஆறு குற்றமுங் கடிந்து ஒழுகுதல். இஃது அறிவுடையாராயினும் குற்றங் கடிதல் வேண்டுமென்று அதன்பின் கூறப்பட்டது.

431. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே
434 யற்றந் தரூஉம் பகை.

(இ - ள்.) தமக்குப் பொருளாகக் குற்றம் வாராமற்காக்க; அக்குற்றந்தானே இறுதியைத் தரும் பகையும் ஆதலான், (எ - று).

இது குற்றங் கடிய வேண்டு மென்றது. 1

432. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
431 பெருக்கம் பெருமித நீர்த்து.

(இ - ள்.) பிறர்மனை நயத்தலும், வெகுளியும், சிறியார் செய்வன செய்தொழுகுதலும் இல்லாதார்க்கு ஆக்கம் தலைமையெடுக்கும் நீர்மை யுடைத்து, (எ - று).

பிறர்மனை விரும்புதல் செருக்கினால் வருதலின், செருக்கு என்றார். 2

433. இவறலு மாண்பிறந்த மானமு மாணு
432 வுவகையு மேத மிறைக்கு.

(இ - ள்.) *உலோபமும், நன்மையைக் கடந்த மானமும், நன்மையைத் தாரா மகிழ்ச்சியுமாகிய விம்மூன்றும் அரசர்களுக் குற்றமாம், (எ - று).*

*இது பொதுப்படக் கூறுது இறைக்கு என்றமையால், பெரும்பான்மையும் அரசர்க்கே வேண்டுமென்பது கூறிற்று.* 3

434. செயற்பால செய்யா திவறியான் செல்வ
437 முயற்பால தன்றிக் கெடும்.

(இ - ள்.) *பொருளால் தனக்குச் செய்துகொள்ளப்படுமவற்றைச் செய்து கொள்ளாது அதன்கண் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம், பின் உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும், (எ - று).* 4

435. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
438 மெண்ணப் படுவதொன் றன்று.

(இ - ள்.) *கூடின பொருளை விடாமையாகிய உலோபம் யாதொன்றினுள்ளும் எண்ணப்படுவதொன்றன்று, (எ - று).*

*இஃது உலோபம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாமையால ஒருபொருளாக மதிக்கப்படாதென்றது.* 5

436. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
434 நன்றி பயவா வினை.

(இ - ள்.) *எல்லா காலுந் தன்னைப் பெரியனாக நினைத்து வியவாதொழிக; வியந்தா னாயினும், அவ்வியப்பினானே நன்மை பயவாத வினையைச் செய்யாதொழிக, (எ - று)*

*செய்யிற் கெடு மென்றவாறாயிற்று.* 6

437. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
445 னேதில வேதிலார் நூல்.

(இ - ள்.) *காதலிக்கப்பட்ட யாவற்றின்மேலுஞ் செல்லுங் காதலைப் பிறர் அறியாமற் செலுத்துவனாயின், பகைவர் இவனைக் கொல்லுமாறு சிந்திக்கும் சிந்தனை இவன் மாட்டுச் செல்லாது அயலாம், (எ - று)*

*நூலென்பது அவர்கற்ற கல்வி* 7

438. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
4-35 வைத்தூறு போலக் கெடும்.

* இது பரிமேலழகருரை.



(இ - ள்.) துன்பம் வருவதன்முன், அதற்குத் தக்கது அறிந்து காவல் செய்யானது செல்வம், எரிமுன்னாக்கிடந்த வைத்திரள்போலக் கெடும், (எ - று).
இது முந்துற்றுக் காவல் செய்வன செய்யாமையும் குற்றமென்றது. 8

439. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
436 னென்குற்ற மாகு மிறைக்கு.

(இ - ள்.) தனக்குள்ள குற்றத்தை நீக்கிப் பிறர்மாட்டுள்ள குற்றத்தை ஆராயவல்லனாயின், அரசனுக்கு என்ன குற்ற முளதாம் ? (எ - று).
இது தன்மாட்டுள்ள குற்றத்தை நீக்குதலே யன்றிப் பிறர்மாட்டுள்ள குற்றத்தையும் கடிய வேண்டுமென்றது 9

440. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
4-- கொள்வர் பழிநாணு வார்.

(இ - ள்) தினையளவு குற்றம் வந்ததாயினும், அதனை அவ்வளவிற்றென்று இகழாது பனையளவாகக் கொள்வர் பழிக்கு நாணுவார், (எ - று). 10

---

## 7 - ம் அதிகாரம்.

## பெரியாரைத் துணைக்கோடல்.

பெரியாரைத் துணைக்கோடலாவது தம்மின் முதிர்ந்த அறிவுடையாரைத் தமக்குத் துணையாகக் கொள்ளுதல். அரசன் குற்ற மற்றானாயினும், தன்னின் முதிர்ந்த அறிவுடையாரைத் துணையாகக் கொண்டு வினைசெய்ய வேண்டுதலின், இஃது அதன்பின் கூறப்பட்டது.

441. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்

443 பேணித் தமராக் கொளல்.

(இ - ள்) செய்தற்கரியன வெல்லாவற்றினும் அரிதே, தம்மின் முதிர்ந்த அறிவுடையாரை விரும்பித் தமக்குச் சுற்றமாகக் கொள்ளுதல், (எ - று).

பெரியாரைக் கொளலென்பது மந்திரி புரோகிதரைக் கூட்டிக்கொள்கை. 1

442. உற்றநோய் நீக்கி யுறுஅமை முற்காக்கும்
442 பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(இ ள்.) அரசர் தமக்குற்ற நோயை விடுவித்துப் பின்பு துன்பமுறாமல் முன்னே காக்கவல்ல தன்மையுடையாரை விரும்பிக்கொள்க,(எ - று).

பெற்றியாரென்று பொதுப்படக்கூறினமையால், இது மந்திரிகளைக் கூட்டுமாறு கூறிற்று. 2



443. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
441 திறனறிந்து தேர்ந்து கொளல்.

(இ - ள்.) அறத்தின் பகுதியறிந்து முதிர்ந்த அறிவுடையாரது கேண்மையை அவரவர் செய்தியாகிய திறங்களை யறிந்து ஆராய்ந்து கொள்க,( எ - று).

இது புரோகிதரைக் கூட்டுமாறு கூறிற்று. 3

444. சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
445 சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(இ - ள்.) அரசன் தன்னைச் சூழ்ச்சியாற்கொல்ல நினைப்பாரைத் தானுஞ் சூழ்ச்சியாற் கொல்லவல்லவனாதல்; காரியமெண்ண வல்லார் தனக்குக் கண்ணாக வொழுகவான், (எ - று). 4

445. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
444 வன்மையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) தம்மின் மிகக அறிவுடையார் தமக்குத் தமராக ஒழுகுதல்; வலியானவை யெல்லாவற்றினும் தலையானவலி, (எ - று). 5

446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
446 செற்றார் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) தகுதியுடையா ரினத்தானாய்த் தானும் அவரோடொக்க ஒழுக வல்லவனைப் பகைவர் செய்யக் கிடந்ததொருநெறி யில்லை, (எ - று).

இஃது இவனைப் பகைவரால் வெல்ல லொண்ணா தென்றது. 6

447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(இ - ள்.) குற்றங் கண்டால் கழறுந் தன்மை யுடையாரைத் தமக்குத் தம ராகக்கொள்ள வல்லாரைக் கெடுக்குந் தகைமையுடையார் உலகத்து யாவர், (எ-று) இது கேடில்லை யென்றது. 7

448. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடின்.

(இ - ள்.) பலரோடு பகைகொண்டால் எவ்வளவு துன்பமுறும் அதனினும் பத்துமடங்கு துன்பமுறும்; பெரியாரைத் துணையாகக் கொள்ளாதொழியின், (எ - று) 8

449. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.



(இ - ள்) முதலில்லாதார்க்கு இலாபமில்லையானாற் போல, தாங்குதலாகிய சார்பு இல்லாதார்க்கு அரசுநிலைநிற்றல் இல்லை, (எ - று). 9

450. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(இ - ள்.) கழறுவாரை யில்லாத காவலில்லாத அரசன் தன்னைப் பகைவராய் வந்து கெடுப்பார் இல்லையாயினும், தான் வேண்டியவாறொழுகிக் கெடும். இஃது உயிர்க்குக் கேடு வருமென்றது. 10

---

## 8 - ம் அதிகாரம்.

## சிற்றினஞ் சேராமை.

சிற்றினஞ் சேராமையாவது காமுகரையும் சூதாடிகளையும் பெண்டிர் முதலாயினோரையும் சேர்ந்தொழுகினால் வருங்குற்றமும் சேராமையால் வரும் நன்மையும் கூறுதல். பெரியார் துணையாயினும் சிறியாரினத்தாரோடு ஒழுகின், அது தீமை பயக்கு மென்று அதன்பின் இது கூறப்பட்டது.

451. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(இ - ள்) சிற்றினத்தை யஞ்சுவா பெரியர்; சிறியவர் அதனைச் சுற்றமாகக் கொண்டு விடுவர், (எ - று).

இது பெருமை வேண்டுவோர் சிற்றினஞ் சேராரென்றது. 1

452. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
460 னல்லற் படுப்பதூஉ மில்.

(இ - ள்.) நல்லினத்தின் மிக்க துணையாயிருப்பதூஉம் இல்லை; தீயினத்தின் மிக்க அல்லற்படுப்பதூஉம் இல்லை, (எ - று).

இது சேராமைக்குக் காரணங் கூறிற்று. 2

453. மனத்தானு மாந்தர்க் குணர்ச்சி யினத்தானு
453 மின்னா னெனப்படுஞ் சொல்.

(இ - ள்.) மாந்தர்க்கு அறிவு மனத்தினானே யுண்டாம்; ஆயினும், தான் சேர்ந்த இனத்தினால் இனியனல்லன் என்று பிறரால் பழிக்கப்படுஞ் சொல் உண்டாம், (எ - று)

இது பிறரால் பழிக்கப்படுமென்றது. 3





454. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
452 கினத்தியல்ப தாகு மறிவு.

(இ - ள்.) நிலத்தின் தன்மையால் நீர் தன்தன்மை வேறுபட்டு அந் நிலத்தின் தன்மைத்தாவதுபோல, மக்கட்கு அறிவு இனத்தின் தன்மையதாய் வேறுபடும், (எ - று). 4

455. மனத்து ளதுபோலக் காட்டி யொருவற்
454 கினத்துள தாகு மறிவு.

(இ - ள்.) ஒருவனுக்கு உண்டாகும் அறிவு முற்பட மனத்துள்ளது போலத் தோற்றிப், பின்பு தான் சேர்ந்த இனத்தினுண்டான அறிவாகும், (எ - று). 5

456. மனந்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
455 மினந்தூய்மை தூவா வரும்.

(இ - ள்.) மனம் நன்றாதலும் செய்வினை நன்றாதலுமாகிய விரண்டும், இனம் நன்றாதலைப் பற்றி வரும், (எ - று).

இனிச் சேராமையான் வரும் நன்மை கூறுவார் இவையிரண்டும் நன்றும்

என்று கூறினர். 6

457. மனந்தூயார்க் கெச்சந் தூயார்க் கெச்சந் ருகு மினந்தூயார்க்
456 கில்லைநன் ருகா வினை.

(இ - ள்.) மனநல்லார்க்குப் பின்பு நிற்கும் காண முதலான பொருள்கள் நல்லவாம்; இன நல்லார்க்கு நன்றாகாத தொரு வினையும் இல்லை, (எ - று).

இது மேலதற்குப் பயன் கூறிற்று. 7

458. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
459 மினநலத்தி னேமாப் புடைத்து.

(இ - ள்.) மன நலத்தினாலே மறுமைப் பயன் நன்றாகும்; அம்மனத்தின் நன்மையும் இனநன்மையாலே தீத்தொழிலிற் செல்லாமற் காவலாதலையுடைத்து.

இது மறுமைக்குத் துணையாமென்றது. 8

459. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
458 கினநல மேமாப் புடைத்து.

(இ - ள்.) மன நன்மை மிக வுடையராயினும், இன நன்மையுடைமை சான்றோர்க்குக் காவலாதலையுடைத்து, (எ - று).

இஃது இனநலம் அல்லாராயின் பிறரா லிகழப்படுவாராதலான், இனநலம் இகழ்ச்சி வாராமற் காக்குமென்றது. 9

அரசியல் - 9 - வது தெரிந்து செயல்வகை. 91

460. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
457 மெல்லாப் புகழுந் தரும்.

(இ - ள்) மனநன்மை நிலைபெற்ற உயிர்க்கு ஆக்கமாவதுபோல, இன நன்மை எல்லாவற்றானும் வரும் புகழினைத் தரும், (எ - று)

இஃது எல்லாப் புகழுந் தருமென்றது 10

---

## 9 - ம் அதிகாரம்
## தெரிந்து செயல்வகை.

தெரிந்து செயல் வகையாவது வினை செய்யுங்கால் அதனை எண்ணிச் செய்யவேண்டுமென்று கூறுதல் அறிவுடையவனாக, குற்றம் கடிந்து, மந்திரி புரோகிதரைத் துணையாகக் கொண்டு, சிற்றினஞ் சேராதொழுகும் அரசனும்

வினை செய்யுங்காலத்து முன்பே எண்ணிச் செய்யவேண்டுதலின், அவையிற்றின் பின் இது கூறப்பட்டது

461. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
462 கரும்பொருள் யாதொன்று மில்.

(இ - ள்.) *அமாத்தியர் பலருள் ஆராய்ந்து கூட்டிக்கொள்ளப்பட்ட மந்திரிகளாகிய இனத்தோடே கூடச் செய்யும் வினையை ஆராய்ந்து, அதனைச் செய்யுமாறு எண்ணிச் செய்யவல்ல அரசர்க்குப் பெறுதற்கு அரிதாயிருப்பதொரு பொருள் யாதொன்றும் இல்லை, (எ - று)* 1

462. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னு
464 மேதப்பா டஞ்சு பவர்.

(இ - ள்) *ஆராய்ந்தறிதலில்லாத வினையைச் செய்யத்தொடங்கார், இகழ்ச்சியாகிய குற்றப்பாட்டிற்கு அஞ்சுபவர், (எ - று)* 2

463. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
467 னெண்ணுவ மென்ப திழுக்கு.

(இ - ள்.) *ஒருவினை செய்யத் துணிவதன்முன்னே அதனால்வரும் பயனை எண்ணிப் பின்பு செய்யத் துணிக, துணிந்தபின் எண்ணுவோமென்றல் தப்பாமாதலான், (எ - று).* 3

464. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
461 மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(இ - ள்.) *வினை செய்து முடித்தற்கு அழியும் பொருளும், அது செய்து முடித்தால் உளதாகும் பொருளும், ஆய்வின்று அப்பொருளினாற் பின்புண்டாய் வரும் பயனும் எண்ணிப் பின்பு வினைசெய்ய வேண்டும், (எ - று).* 4



465. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
463 யூக்கா ரறிவுடை யார்.

(இ - ள்.) *தமக்கு ஆக்கம் உண்டாகவேண்டி, முன்புண்டான முதலும் இழக்க வரும் வினையைச் செய்ய நினையார் அறிவுடையார், (எ - று.)*

*இது பிற்பயவாதவினை செய்யலாகாதென்றது.* 5

466. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
470 கொள்ளாத கொள்ளா துலகு.

(இ - ள்.) முடியுமாயினும், பிறராலிகழப்படாதவற்றை எண்ணிச் செய்தல் வேண்டும்; தமக்குத் தகாத செய்திமை யுலகத்தார் கொள்ளாராதலான், (எ-று)

இது பிறராலிகழப்படாதன செய்யவேண்டு மென்றது. 6

467. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
469 பண்பறிந் தாற்றாக் கடை.

(இ - ள்.) நன்மையைச் செய்யுமிடத்திலும் குற்றமுண்டாம்; அவரவர் குணமறிந்து செய்யாத விடத்து, (எ - று).

இதுவுமோரெண்ணம். 7

468. செய்தக்க வல்ல செயக்கெடுஞ் செய்தக்க
466 செய்யாமை யானுங் கெடும்.

(இ - ள்.) செய்யத்தகாதனவற்றைச் செய்தலாலும் கெடும்; செய்யத் தகுவனவற்றைச் செய்யாமையாலும் கெடும், (எ - று).

இது மேற்கூறியதனவெல்லாம் தொகுத்துக் கூறிற்று. 8

469. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
468 போற்றினும் பொத்துப் படும்.

(இ - ள்.) மேற்கூறிய நெறியினாலே முயலாத பொருள், பலர் நின்று காப்பினும் புரைபடும், (எ - று).

இஃது எண்ணிச் செய்யாதது தப்பு மென்றது. 9

470. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
465 பாத்திப் படுப்பதோ ராறு.

(இ - ள்.) மேற்சொன்னவகையில போக்கறச் சூழாதே போர்கருதி யெழுதல், பகைஞராகிய விதையை நிலத்தின்கண்ணே இடுவதொரு நெறி, (எ - று).

இது பகைவர்க்கு ஆக்க முண்டாமென்றது. 10

---

அரசியல் - **10** - வது வலியறிதல். 93

## **10** - ம் அதிகாரம்.

## வலியறிதல்.

*வலியறிதலாவது தனக்கு உள்ள வலியும் பிறர்க்குஉள்ள வலியும் அறிதல்.*

செய்யத்தக்க வினையை யெண்ணினாலும் அதனைச்செய்து முடிக்குங்கால் வலி யறிந்து செய்யவேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
471 துணைவலியுந் தூக்கிச் செயல்.

(இ - ள்.) செய்யும் வினையினது வலியும், தனக்கு உண்டான வலியும், பகைவனது வலியும், தனக்கும் பகைவர்க்கும் துணையாயினார் வலியும் எண்ணிப் பின்பு வினைசெய்க, (எ - று). 1

இது வலியறியும் இடம் கூறிற்று.

472. உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
473 யிடைக்கண் முரிந்தார் பலர்.

(இ - ள்.) தம்முடைய வலியறியாது மனமிகுதியாலே வினை செய்யத் தொடங்கி, அது முடிவதன்முன்னே கெட்டார் பலர், (எ - று).

இது வலியறியாதார் கெடுவரென்றது. 2

473. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
472 செல்வார்க்குச் செல்லாத தில்.

(இ - ள்.) தமக்கியலும் வினைக்கு அறிய வேண்டுவதாய திறம் இதுவென அறிந்து, அதன் பின்பு அவ்வழியிலே நின்று, ஒழுகுவாராயின், அவர்க்கு இயலாதது இல்லை, (எ - று).

இது வலியறிந்தாலும் அமைந்தொழுக வேண்டு மென்றது. 3

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
474 வியந்தான் விரைந்து கெடும்.

(இ - ள்.) அமைவுடையனாயொழுகுதலும் இன்றித், தன்வலியளவும் அறியாதே, தன்னை மதித்தவன் விரைந்து கெடுவன், (எ - று).

இது மேற்கூறியவாறு செய்தார் கெடுவரென்றது. 4

475. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
476 னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(இ - ள்.) ஒருமரத்தின் நுனிக்கொம்பேறினவர் தம்பள வறிந்து வைத்துப் பின்னும் மேலேறுவாராயின், அஃது அவர்தம்முயிர்க்கு இறுதியாகிவிடும், (எ - று)



இஃது அரசன் தன்னாற் செல்லலாமெல்லையளவு சென்றால், பின்பு மீள வேண்டுமென்றது. இதுவும் ஒரு வலியறிதல். 5

476. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
475 சால மிகுத்துப் பெயின்.

(இ - ள்.) பீலி யேற்றிய சகடமும் அச்சுமுறியும்; அப்பீலியை மிகவும் அளவின்றியேற்றின், (எ - று).

இஃது அரண் மிகுதல் நன்றென்றிருப்பார்க்குப் பகைமிகின் அரண் நில்லாதென்று கூறிற்று. 6

477. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
477 போற்றி வழங்கு நெறி.

(இ-ள்.) பொருளை அளவறிந்து கொடுக்கும் வழியாலே கொடுக்க; பொருளையுண்டாக்கி வழங்கும் நெறி அது வாதலால், (எ - று).

இது பொருளினது வலியறிந்து அதற்குத்தக்க செலவுசெய்ய வேண்டுமென்று கூறிற்று. 7

478. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
479 வில்லாகித் தோன்றாக் கெடும்.

(இ - ள்.) தன்வருவாய் அளவறிந்து வாழாதான் வாழ்க்கைகள் உளபோலத்தோன்றி, அதன்பின் இல்லையாகித் தோன்றாது கெடும், (எ - று).

பின்பு ஆக்கம்தோன்றாதென்றவாறு. இது மேற்கூறியவாறு செய்யாதார் கெடுமென்றது. 8

479. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
478 போகா றகலாக் கடை.

(இ - ள்.) பொருள் வருவழியளவு சிறிதாயினும் கேடில்லையாம்; அது போம்வழி போகாதாயின், (எ - று).

இது முதலுக்குத் தக்க செலவு செய்ய வேண்டுமென்றது. 9

480. உளவரை தூக்காத வொப்புர வாளன்
480 வளவரை வல்லைக் கெடும்.

(இ - ள்.) தனக்கு உள்ளவளவை நினையாதே ஒப்புரவு செய்வானது செலவத்தினளவு விரைவிற் கெடுமெ, (எ - று).

மேல், முதலுக்குச் செலவு குறையவேண்டுமென்றார் அவ்வாறு செய்யின் ஒப்புரவு செய்யுமாறு என்னை யென்றார்க்கு, இது கூறினார். 10

---

## **11** - ம் அதிகாரம்.

## *காலமறிதல்.*

*காலமறிதலாவது வினைசெய்தற்கு ஆங்காலமறிதல். வலியறிந்தாலும் வினை செய்யுங்காலமும் அறிந்து செய்யவேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

481. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்வெல்லும்
481 வேந்தர்க்கு வேண்டும் பொழுது.

(இ - ள்.) *இராப்பொழுது வெல்லுங் கூகையைக் காக்கை பகற்பொழுது வெல்லும்; ஆதலான், மாறுபாட்டை வெல்லும் அரசர்க்குக் காலம்வேண்டும்.* () *இது காலமறிதல் வேண்டு மென்றது.* 1

482. காலங் கருதி யிருப்பர் கலங்காது
485 ஞாலங் கருது பவர்.

(இ - ள்.) *செய்யுங்காலம் வருமளவு நினைந்து அசைவின்றியிருப்பார்; ஞாலத்தைக் கொள்ளக் கருதுபவர்,* (எ - று). 2

483. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
486 தாக்கற்குப் பேருந் தகைத்து.

(இ - ள்.) *மன மிகுதி யுடையவன் காலவரவு பார்த்து ஒடுங்குதல், போரைக் கருதின தகர் வலிபெறத் தாக்குதற் பொருட்டுப் பெயர்ந்தாற்போலும். இது காலம் வருவளவுங் குறைத்தால் வலி மிகுமென்றது.* 3

484. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
487 துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(இ - ள்.) *கதுமென அவ்விடத்தே யுடம்புவேரார்; தமக்குச் செய்யலாங் காலம் வரவு பார்த்து மனவெயர்ப்பர் ஒள்ளியர்,* (எ - று).

*ஒப்புப் பொருமையால் வருவதொன்று. இது பகைவர் பொருதவற்றைச் செய்தாலும் காலம் பார்க்கவேண்டுமென்றது.* 4

485. செறுநரைக் காணிற் சுமக்க விறுவரை
488 காணிற் கிழக்காந் தலை.

(இ - ள்.) *பகைவரைக் கண்டானாயின், தலையினாற் சுமக்க; இறுமளவாயின், தலை கீழாய் விடலாம்,* (எ - று). 5

486. கோக்கோக்க கூம்பும் பருவத்து மற்றதன்
490 குத்தொக்க சீர்த்த விடத்து.



(இ - ள்.) *காலம் பார்த்திருக்குமிடத்துக் கொக்குப் போல ஒடுங்கி இகழ் வின்றி யிருக்க, வினை செய்தற்கு வாய்த்தகாலம் வந்தவிடத்து அக்கொக்குக் குத்துமாறுபோலத் தப்பாமல் விரைந்து செல்க,* (எ - று).

*இது காலம் வருமளவும் இகழ்ச்சியின்றிக் கொக்குப் போல இருத்தல் வேண்டுமென்பதூஉம், காலம் வந்தால் தப்பாமை விரைந்து செய்யவேண்டுமென் பதூஉம் கூறிற்று.* 6

487. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
489 செய்தற் கரிய செயல்.

(இ - ள்.) *பெறுதற்கு அரிய காலம் வந்தால், அப்பொழுதே தன்னாற் செய் தற்கு அரியவாகியவினைகளைச் செய்துமுடிக்க,* (எ - று).

*இது காலம் வந்தால் அரிதென்று காணாமற் செய்யவேண்டுமென்றது.* 7

488. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
482 தீராமை யார்க்குங் கயிறு.

(இ - ள்.) *காலத்தோடு பொருந்த ஒழுகுதல், செல்வத்தை நீங்காமல் கட்டுவதொரு கயிறாம்,* (எ - று).

*இனிக் காலமறிந்ததனால் வரும் பயன் கூறுவார் முற்படச் செல்வம் கெடா தென்றார்.* 8

489. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
483 கால மறிந்து செயின்.

(இ - ள்.) *அரிய வினையென்று சொல்லப்படுவன உளவோ? முடிக்கலாங் கருவியோடே கூடக் காலத்தை யறிந்து செய்ய வல்லாராயின்,* (எ - று). 9

490. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
484 கருதி யிடத்தாற் செயின்.

(இ - ள்). *உலகமெல்லாம் பெறுதற்கு நினைத்தானாயினும் பெறலாம்; காலத் தைக் குறித்து இடனறிந்து செய்வனாயின்,* (எ - று).

*இஃது எல்லாப் பொருளையு மெய்துமென்றது.* 10

## 12 - ம் அதிகாரம்.

# இ ட ன றி த ல் .

*இடனறிதலாவது வினைசெய்யும் இடமறிதல். காலமறிந்தாலும் இடனறிந்து வினைசெய்ய வேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

491. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
491 மிடங்கண்ட பின்னல் லது.



(இ - ள்.) *முடியுமிடங் கண்டாலல்லது, யாதொரு வினையுந் தொடங்கா தொழிக; எளிதென் றிகழாதொழிக,* (எ - று).

*இஃது இடமறிதல் வேண்டுமென்பது கூறிற்று.* 1

492. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
498 னூக்க மழிந்து விடும்.

(இ - ள்.) *சிறுபடையை யுடையவனுக்கு இயலுமிடத்தே பெரும் படையை யுடையவன் பொருந்துவனாயின், மன மிகுதி கெடும்,* (எ - று).

*இஃது இகழ்ந்து செல்லின், வெற்றியில்லையாமென்றது.* 2

493. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
500 வேலாழ் முகத்த களிறு.

(இ-ள்.) *கண்ணஞ்சாத வேலழுத்தப்பட்ட முகத்தினையுடைய களிற்றைக் கால் விழப்பட்ட களரின்கண் நரி கொல்லவற்றும்,* (எ - று).

*இது மேலதற்குக் காரணங் கூறிற்று.* 3

494. சிறைநலனுஞ் சீரு மிலரேனினு மாந்த
499 ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(இ-ள்.) *அரசன் பதியும் பெருமையும் இலராயினும், மாந்தர் உறைநிலத்தின் கண் பொருந்துத லரிது,* (எ - று).

*இது மாந்தர் உறைவிடத்தின்கண் செல்லுங்கால், அறிந்து செல்லவேண்டு மென்றது.* 4

495. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலு
495 னீங்கி னதனைப் பிற.

(இ-ள்.) *நெடிய நீரின்கண் பலவற்றையும் முதலை வெல்லும்; அஃது அந் நீரினின்று நீங்குமாயின், அதனைப் பிறவெல்லாம் வெல்லும்,* (எ-று).

*இது மேலதற்குக் காரணங் கூறிற்று இவை யைந்தும் இடமறியவேண்டு மென்பது கூறின.* 5

496. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
497 யெண்ணி யிடத்தாற் செயின்.

(இ-ள்.) *தப்பாமலெண்ணி இடததோடு பொருந்த வினை செய்ய வல்லராயின், அஞ்சாமையே வேண்டுவ தல்லாமல், வேறு துணையாவாரைத் தேட வேண்டுவதில்லை,* (எ-று).

*இஃது இடனறிந்தால். துணையின்றியும் வெல்வரென்றது.* 6





497. ஆற்றரு மாற்றி யடுப விடனறிந்து
493 போற்றார்கட் போற்றிச் செயின்.

(இ-ள்.) *வலியில்லாதாரும் வலியுடையராய் வெல்வர்; பகைவர்மாட்டு வினைசெய்யும் இடமறிந்து தம்மைக் காத்து வினை செய்வாராயின்,* (எ-று) 7

498. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
492 மாக்கம் பலவுந் தரும்.

(இ-ள்.) *பகை கொள்ளும் வலியுடையவர்க்கும் அரணைச் சேர்ந்தாகின்ற ஆக்கம், பலபயனையுந் தரும்,* (எ-று).

*இது பகைவரிடம் அறிதலே யன்றித் தமக்கு அமைந்த இடமும் அறிய வேண்டுமென்றது.* 8

499. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
496 நாவாயு மோடா நிலத்து.

(இ-ள்.) *கால் வலிய நெடுந்தேர் கடலின்கண் ஓடாது; கடலின்கண் ஓடும் நாவாயும் நிலத்தின்கண் ஓடாது,* (எ-று).

*இஃது இடத்திற்காக் கருவி பண்ணவேண்டுமென்றது.* 9

500. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து

494 துன்னியார் துன்னிச் செயின்.

(இ - ள்.) *தம்மைக் கெடுத்தற்கெண்ணினவர் தங்களெண்ணம் இழப்பர்; வினைசெய்யும் இடமறிந்து நட்டோராகவவர் மனம் பொருந்திச் செய்வாராயின். இஃது இடமறிந்து செய்வோர் அமைதியும் வேண்டுமென்றது* 10

---

## 13 - ம் அதிகாரம்.

## தெரிந்து தெளிதல்.

*தெரிந்து தெளிதலாவது ஆராய்ந்து தெளிதல். காரியந் தப்பாமலெண்ணி, அதற்காங்காலமும் இடமும் அறிந்தாலும், அது செய்து முடிக்கும் அமாத்தியரையும் எண்ணிக் கொள்ள வேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

501. அரியகற் றுசற்றார் கண்ணுந் தெரியுங்கா
503 லின்மை யரிதே வெளிறு.

(இ - ள்.) *கற்றற்கரிய நூல்களைக் கற்றுக் குற்றமற்றார்மாட்டும், ஆராயுங்கால் குற்றமின்மை இல்லை,* (எ - று). 1



502. அற்றாரைத் தேறுத லோம்புக மற்றவர்
506 பற்றிலர் நாணார் பழி.

(இ - ள்.) *ஒழுக்கமற்றாரைத் தேறுதலைத் தவிர்க; அவர் ஓரிடத்துப் பற்றுடையாரும் அல்லர்; பழிக்கும் நாணாராதலான்,* (எ - று). 2

503. காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
507 பேதைமை யெல்லாந் தரும்.

(இ - ள்.) *அன்புடைமையே பற்றாக, அறிவுடையாரல்லாதாரைத் தேறுதல், எல்லா அறியாமையும் தரும்,* (எ - று).

*அரசர் அன்புடையாரைத் தேறலாமென்பது பராசரர் மதம். இஃது இவ்வளவினால் தேறலாகாதென்றது.* 3

504. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
508 தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) பிறனை ஆராயாதே வழிமுறையென்று தெளிந்தவனுக்கு அத் தெளிவு, தீர்தலில்லாத துன்பமுண்டாகும், (எ - று)

இது தன் குலத்தினுள்ளாருள் ஆராய்ந்தாராயினுமவழியில் உள்ளாரைத் தேறலாமென்றது. 4

505. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
505 கருமமே கட்டளைக் கல்.

(இ - ள்.) ஒருவனைப் பெரியனாக்குதற்கும் மற்றைச் சிறியனாக்குதற்கும் வேறு தேறவேண்டா ; அவரவர் செய்யவல்ல கருமந்தானே அதற்குத்தக ஆக்கும் படிக்கல்லாம், (எ - று).

இஃது ஒருவனை ஒருகார்யத்திலே முற்படவிட்டு, அவன் செய்யவல்ல அளவுங் கண்டு பின்னைப்பெரியனாக அமையுமென்றது. இது குற்றங்கூறுமை பலவற்றிற் முன்ன வேறுபாடென்று கொள்ளப்படும். 5

506. குடிப்பிறந்து குற்றத்து ணிங்கி வடுப்பரியு
502 506 நாணுடையான் கட்டே தெளிவு.

(இ - ள்.) உயர்குடியிற் பிறந்து, காமம் வெகுளி முதலான குற்றத்தி னின்று நீங்கி, தனக்குவரும்பழியை அஞ்சவல்ல நாணமுடையவன்கண்ணதே அரசனது தெளிவு, (எ - று).

இதுவும் உடன்பாடென்று கொள்ளப்படுமென்றவாறு. 6



507. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
504 மிகைநாடி மிக்க கோளல்.

(இ - ள்) ஒருவனுக்குள்ள குணத்தையும் ஆராய்ந்து குற்றத்தையும் ஆராய்ந்து அவற்றுள் மிக்கதனை யறிந்து, அவற்றுள்ளும் தலைமையாயினும் பன்மையாயினும் மிக்கதனைக் கொள்க, (எ - று) 7

508. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்

501 றிறந்தேரிந்து தேறப் படும்.

(இ - ள்.) அறமும் பொருளும் இன்பமும் உயிரச்சமுமென்னும நான்கின் கூறுபாட்டினையும் ஆராய்ந்து, ஆராய்ந்தபின்பு ஒருவன் அரசனால் தெளியப் படுவான், (எ - று).

முன்பு நான்கு பொருளையும் ஆராயவேண்டுமென்றார் பின்பு தேறப்படு மென்றார். 8

509. தேறற்க யாவரையுந் தேராது தேர்ந்தபிற்

504 றேறுக தேறும் பொருள்.

(இ - ள்.) யாவரையும் ஆராயாது தெளியாதொழிக; ஆராய்ந்தபின்பு அவ ராற் றேறப்படும் பொருளைத் தேறுக, (எ - று)

இஃது ஒருபொருளிற் றேற்றமுடையாரை எல்லாப் பொருளினுந் தெளிக வென்றது. 9

510. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்

510 தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) ஒருவனை ஆராயாது தெளிதலும் தெளிந்து கொள்ளப்பட்டவன் மாட்டுத் தான் ஐயப்படுதலுமாகிய இவ்விரண்டும் நீங்காத துன்பத்தைத் தரும். 10

---

## 14 - ம் அதிகாரம்.

## தெரிந்து வினையாடல்.

தெரிந்து வினையாடலாவது வினை செய்வாரால் செய்யப்படும் வினையும் பலவாதலின், அவரால் செய்யப்படும் வினைகளை யறிந்து அவரை விட்டுச் செய்வித்தல்.

511. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்

515 சிறந்தானென் றேவற்பாற் றன்று.



*(இ - ள்.) செய்யும் உபாயங்களை யறிந்து, செயலானும் இடையூறுகளானும் வருந் துன்பங்களைப் பொறுத்து, முடிவு செய்யவல்லானையல்லது வினைதான் இவன் நம்மாட்டன்புடையனென்று பிறனொருவனை யேவும் இயல்புடைத்தன்று.

512. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
516 டெய்த வுணர்ந்து செயல்.

(இ - ள்.) வினை செய்வானையும் ஆராய்ந்து, அவ்வினையினது இயல்பையும் ஆராய்ந்து, அது முடியுங் காலத்தோடே பொருந்த அறிந்து, பின்பு அவ்வினை அவன் செய்வானாக அமைக்கவேண்டும், (எ - று). 2

513. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
511 தன்மையா னாளப் படும்.

(இ - ள்.) நன்மையானவற்றையும் தீமையானவற்றையும் ஆராய்ந்து, தீமையைப் பொருந்தாது நன்மையின்கண்ணே பொருந்தின தன்மையுடையவன் வினை செய்வனாகச் செய்யப்படும், (எ - று) 3

514. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
513 நன்குடையான் கட்டே தெளிவு.

(இ - ள்.) அன்புடைமையும், அறிவுடைமையும், ஒருபொருளை ஆராய்ந்து தெளிவுடைமையும், அவாவின்மையுமென்னும் இந் நான்கு குணங்களையும் நிலைபெற வுடையான்மேலதே வினையை விட்டிருக்குந் தெளிவு, (எ - று). 4

515. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
512 யாராய்வான் செய்க வினை.

(இ-ள்.)பொருள் வருதற்கு இடமானவற்றை முன்பு நின்றநிலையிற் பெருக்கி, அவ்விடங்களி லுண்டாகும் பயனை முன்பு நின்ற நிலையிலுண்டாக்கி, அவ்விடத் துற்ற மிகுதி குறைவுகளை ஆராயவல்லவன் வினை செய்வானாக, (எ - று).

பொருள் வருதற்கிடமாவது நில முதலான விடம்; அதனைப் பெருக்குதல்-பொருளும் இன்பமும் உண்டாகச் செய்தல். 5

516. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
518 யதற்குரிய னாகச் செயல்.

(இ - ள்.) இவ்வினைக்கு இவன் உரியவனென்று ஆராய்ந்த பின்பு, அவனை அவ்வினை செய்தற்கு உரியவனாகப் பண்ணுக, (எ - று).

இஃது ஒழிந்த காரியங்களின் வினை செய்வாரை ஆக்குமது கூறிற்று. 6

இது பரிமேலழகருரை.

517. இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றுய்ந்
517 ததனை யவன்கண் விடல்.

(இ - ள்.) இக்கருமத்தினை இககருவியாலே இவன் செய்து முடிக்க வல்லவ னென்று ஆராய்ந்து, பின்பு அக்கருமத்தினை அவன்கண்ணே விடுக, (எ - று)

இது பெரும்பான்மையுஞ் சேனாபதியை நோக்கிக் கூறிற்று. 7

518. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
519 நினைப்பானை நீங்குந் திரு.

(இ - ள்.) வினையிடத்து வினை செய்ய வல்லவனது நட்பை வேறுபாடாக நினைக்குமவனைத் திருமகள் நீங்குவள், (எ - று). 8

519. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையான்
514 வேறாகு மாந்தர் பலர்.

(இ - ள்.) எல்லா வகையினாலும் ஆராய்ந்து தெளிந்தவிடத்தினும், அவர் செய்யும் வினையின் வகையினாலே மனம் வேறுபடும் மாந்தர் உலகத்துப் பலர், ( )

இது தெளிந்தே மென்று இகழலாகாதென்றது 9

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
520 கோடாமை கோடா துலகு

(இ - ள்.) வினை செய்வான் கோடாதொழிய உலகம் கோடாது செவ்வை யிலே நிற்கும்; ஆதலான், அவன் செயலை மன்னவன் நாடோறும் ஆராயவேண்டும், (எ - று).

இது வினை செய்வார் செயலை நாடோறும் ஆராயவேண்டுமென்றது. 10

---

## 15 - ம் அதிகாரம்.

## சுற்றந் தழால்.

சுற்றந்தழாலாவது அரசன் தன்கிளைஞரைத் தன்னின் நீங்காமல் அணைத்தல். மேல் அமாத்தியர்மாட்டு அரசன் ஒழுகுந் திறங் கூறினாராதலின், அதன் பின் இது கூறப்பட்டது.

521. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்

525 பெற்றத்தாற் பெற்ற பயன்.
524
(இ - ள்.) சுற்றத்தாராலே சூழப்பட ஒழுகுவது, செல்வத்தைப் பெற்றவதனல் உண்டான பயன, (எ - று).

இது சுற்றஞ் சூழ்ந்து வருவதாக ஒழுகவேண்டுமென்றது. 1



522. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
525 சுற்றத்தாற் சுற்றப் படும்.

(இ - ள்.) வேண்டுமளவு கொடுத்தலும் இன்சொற் கூறுதலும் செய்வனுயின், தனக்கு முன்னுகியும் பின்னுகியும் வருகின்ற சுற்றத்தாராலே சூழப்படுவன், (எ - று).

இஃது ஒழுகுந் திறங் கூறிற்று. 2

523. பெருங்கொடையான் பேணுன் வெகுளி யவனின்
526 மருங்குடையார் மாநிலத் தில்.

(இ - ள்) மிகக் கொடுக்க வல்லவனுய்ச் சினத்தையும் விரும்பானுயின், அவனின் துணையுடையார் பெரிய உலகின்கண் இல்லை,(எ - று).

இது மேற்கூறிய அளவின்றி யிவ்வாறு செய்யின், துணையுடையானுமென்றது 3

524. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
521 சுற்றத்தார் கண்ணே யுள.

(இ - ள்) பொருளற்ற கண்ணும் பழைமையைக் கொண்டாடி விடாதொழுகுதல், சுற்றத்தார்மாட்டே யுளவாம், (எ - று)

இஃது இல்லாக் காலத்தினும் விடாரென்றது. 4

525. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
523 கோடின்றி நீர்நிறைந் தற்று.

(இ - ள்.) கலக்கப் படுவாரோடு கலப்பின்றி யொழுகுவானது வாழ்க்கை, குளப்பரப்புக் கரையின்றி நீர் நிறைந்தாற் போலும், (எ - று).

இது சுற்றந் தழுவாக்கால் செல்வங் காக்கப்படாதென்றது. இத்துணையும்

சுற்றத்தாரெல்லாரோடும் ஒழுகுந் திறங் கூறிற்று. 5

526. விருப்பறுச் சுற்ற மியையி னருப்பறு
522 வாக்கம் பலவுந் தரும்.

(இ - ள் ) அன்பறாத சுற்றம் ஒரிடத்தே பொருந்தி யொழுகுமாயின், அது கிளைத்தலறாத ஆக்கமாகிய பலவற்றையுந் தரும், (எ - று). 6

527. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
528 னதுநோக்கி வாழ்வார் பலர்.



(இ - ள்.) அரசன் எல்லாரையும் பொதுவாகப் பாராதே ஒருவனைத் தலைமையாலே பார்ப்பானாயின், அப்பாரவை நோக்கி, அவனை விடாது வாழுஞ் சுற்றத்தார் பலர், (எ - று).

இஃது ஒருவனை இளவரசாகக வேண்டுமென்றது. 7

528. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
527 மன்னநீ ரார்க்கே யுள.

(இ - ள்.) காக்கை ஓரிரை பெற்றால் அதனை மறையாது தன் சுற்ற மெல்லாவற்றையும் அழைத்துஉண்ணும்; அதுபோல, செல்வம்பெற்றால் அதனைத் தன் சுற்றத்தா ரெல்லாரோடும் நுகர்வார்க்கே ஆக்கம் உளதாவது, (எ - று).

இவை மூன்றும் அன்பமைந்த மக்கட்குச் செய்யுந் திறங் கூறின. 8

529. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்
529 காரண மின்றி வரும்.

(இ - ள் ) முன்பு தனக்குத் தமராகி வைத்துத் தன்னை விட்டுப் போனவர் பின்பு வந்து சுற்றமாதல், அவர்மாட்டு அமராமைக்குக்காரணம் இன்றி யொழுக வரும், (எ - று).

இது தன்னை விட்டுப்போன இராஜபுத்திரரைக் கூட்டிக்கொள்ளுமாறு கூறிற்று. 9

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
530 னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(இ - ள் ) தன்னிடத்தினின்று நீங்கி ஒரு காரணத்தால் வந்தவனை அரசன் அக்காரணத்தைச் செய்துவைத்து, பின்பு காரியமானபடி யெண்ணி,

---

## 16 - ம் அதிகாரம்.
## பொச்சாவாமை.

பொச்சாவாமையாவது மறவியின்றி யொழுகுதல். அது தனது சோர்வு பார்த்துப் பிறர் வஞ்சகஞ் செய்யுமிடங்களினும், அறம்பொருளின்பங்கள் செய்ய வேண்டுமிடங்களினும் மறத்தலின்மை. பொச்சாப்பு எனினும் மறவி எனினும் இகழ்ச்சி எனினும் ஒக்கும்.

531. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவலகத்
533 தெப்பானு லோர்க்குந் துணிவு.



(இ - ள்.) பொச்சாப்பு உடையார்க்கு புகழுடைமையில்லையாம்; அஃது உலகத்து வழங்குகின்ற எவ்வகைப்பட்ட நூலோர்க்குந் துணிவு, (எ - று).

இது பொச்சாப்பார்க்குப் புகழாகாதென்றது. 1

532. இகழ்ச்சியிற் கெட்டாரை யெண்ணுக தாந்த
539 மகிழ்ச்சியின் மைக்துறும் போழ்து.

(இ - ள்.) அரசர் குறித்துணரும் உணர்ச்சியின்மையாலே முன்பு கெட்ட அரசரை நினைக்க; தாமும் தம்முடைய மகிழ்ச்சியாலே வலியாயிருக்கும் பொழுது, (எ - று).

இஃது உண்பவை, உடுப்பவை, பூசுபவை சோதித்துக் கொள்க என்றது. 2

533. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
534 பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(இ - ள்.) அச்சமுடையார்க்கு ஆவதொரு அரணில்லை; அதுபோல, பொச்சாப்புடையார்க்கு வருவதொரு நன்மை இல்லை, (எ - று).

இது பொச்சாப்புடையார்க்குக் காவலில்லை என்றது. 3

534. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
538 திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(இ - ள்) உயர்ந்தாரால் புகழப்பட்டவையிற்றைக் கடைப்பிடித்துச் செய்

தல்வேண்டும்; இவையிற்றைச் செய்யாது இகழ்ந்தவர்க்கு எழுபிறப்பினும் நன்மையில்லையாமாதலான், (எ - று).

இஃது அறத்தின்கண் இகழாமற் செயவது கூறிற்று. 4

535. உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
540 னுள்ளிய துள்ளப் பெறின்.

(இ - ள்.) தான் நினைந்த பொருளைப் பெறுதல் எளிது; பின்பும், அதனை மறவாதே நினைக்கக் கூடுமாயின், (எ - று).

இனிப் பொருளின்கண் மறவாமை கூறுவார் முற்பட நினைத்ததனை மறவாமை வேண்டுமென்றார். 5

536. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
537 கருவியாற் போற்றிச் செயின்.

(இ - ள்) செயற்கு அரியனவென்று செய்யலாகாதன வில்லை; மறவாமையாகிய கருவியாலே பாதுகாத்துச் செய்வனாயின், (எ - று).

இது வினைசெய்யுங்கால் மறவாமை வேண்டுமென்றது. 6





537. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
532 நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(இ - ள்.) மறவியாகின்றது புகழைக்கொல்லும்; நாடோறும் இரவால் வருந்தி வயிற்றை நிறைக்கும் ஊண் அறிவைக் கொல்லுமாறுபோல, (எ - று).

இவை மூன்றினும் பொருளின்கண் கடைப்பிடித்தல் கூறினர். 7

538. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
536 வாயி னஃதொப்ப தில்.

(இ - ள்.) யாவர்மாட்டும் எல்லாநாளும் தப்புச்செய்யாமை தப்பாமல் வாய்க்குமாயின், அதனையொக்க நன்மை பயப்பது பிறிதொன்று இல்லை, (எ-று).

இது முறைமை செய்யுங்கால் கடைப்பிடித்துச் செய்யவேண்டு மென்றது.

539. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
53 பின்னூ றிரங்கி விடும்.

*(இ - ள்.) தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை அவை வருதற்கு முன்னே அறிந்து காவாது மறந்திருந்தான், பின் வந்துற்றகாலத்துக் காக்கலாகாமையின், அப் பிழைப்பினை நினைந்திரங்கிவிடும், (எ - று). 9

540. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
531 வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(இ - ள்.) மிகுத்த வெகுளியினும் தனக்குத் தீமையைச் செய்யும் ; மிக்க உவகைக்களிப்பினால் வரும் மறப்பு, (எ - று).

தனக்குச் சிறந்த உவகை தன்மகிழ்ச்சியாற் சோருஞ் சோர்வு என்றும், உய்க்க வேண்டுமவரிடத்து உய்க்கும் உவகை என்றுமாம். 10

---

## 17 - ம் அதிகாரம்.
## செ ங் கோ ன் மை .

செங்கோன்மையாவது செவ்விதாகிய முறைசெய்த லுடைமை. குற்றமும் குணமும் தூக்கி ஆராய்தலாற் கோல் என்றார் ; அது கோடாமையால் செங்கோல் ஆயிற்று. மேல் அமாத்தியர்மாட்டுஞ் சுற்றத்தார்மாட்டுந் தன்மாட்டுஞ் செய்யுந் திறங் கூறினார் உலகத்தார்மாட்டுஞ் செய்யுந்திறங் கூறுகின்றாராதலான், அதன்பின் இது கூறப்பட்டது

* இது பரிமேலழகருரை.



541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
541 தேர்ந்துசெய் வஃதே முறை.

(இ - ள்.) ஒருவன் செய்த குற்றத்தை ஆராய்ந்து, நட்டோரென்று கண்ணோடாது, நிலைமையைப் பொருந்தி, யாவர்மாட்டும் குற்றத்திற்குத் தக்க தண்டத்தை நூல்முகத்தாலாராய்ந்து, அதன்வழியே செய்வது முறையென்று சொல்லப்படும், (எ - று).

யார்மாட்டும் என்றது தன்சுற்றமாயினு மென்றது. 1

542. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
549 வடுவன்று வேந்தன் றொழில்.

(இ - ள்.) குடிகளை கலியாமற் காத்து, ஒப்புதற்காக, குற்றஞ் செய்தாரை ஒறுத்தல் குற்றமன்று; அரசன் தொழில், (எ - று). 2

543. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
550 களைகட் டதனொடு நேர்.

(இ-ள்.) கொடுமை செய்வாரைக் கொலையினும்ன அரசன் ஒறுத்தல் குற்றமன்று; உழவன் பைங்கூழ் வளர்தற்குக் களை களைந்ததனோடு ஒக்கும், (எ-று).
கொடியாராவார் கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார். 3

544. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
542 கோனோக்கி வாழுங் குடி.

(இ - ள்.) உலகத்தாரெல்லாம் மழையை நோக்கி யின்புறுகிற்பர்; அது போல, குடிகளும் அரசனது செங்கோன்மையை நோக்கி யின்புறுகிற்பர், (எ று).

545. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
544 னடிதழீஇ நிற்கு முலகு.

(இ - ள்.) குடியைப் பொருந்தி முறைமை செலுத்துகின்ற பெரிய நில மன்னன் அடியைப் பொருந்தி நிற்கும் உலகு, (எ - று).
இது முறைமை செய்யும் அரசன்கண்ணதாம் உலகு என்றது. 5

546. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
545 பெயலும் விளையுளுந் தொக்கு.

(இ - ள்.) மழைபெய்தலும் விளைதலுங்கூடி, நூல் சொன்ன இயல்பினானே முறையை நடத்தவல்ல அரசனது நாட்டகத்தினவாம், (எ - று).
இது மேற்கூறிய முறைமைசெய்ய மழையும் விளைவும் உண்டாமென்றது.



547. அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
543 நின்றது மன்னவன் கோல்.

(இ - ள்.) அந்தணர்க்கு உரித்தாகிய வேதத்திற்கும் அதனால் கூறப்பட்ட அறத்திற்கும் முதலாக நின்றது அரசன் செய்யும் முறைமை, (எ - று). 7

548. வேலன்று வென்றி தருவது மன்னவன்
546 கோலதூஉங் கோடா தெனின்.

(இ - ள்.) அரசனுக்கு வெற்றி தருவது அவன் கையிலுள்ள வேலன்று, முறை செய்தல்; அவன் அதனைக் கோடச்செய்யானாயின், (எ - று).

இது செங்கோன்மை செய்ய வெற்றியுண்டாமென்றது. 8

549. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
547 முறைகாக்கு முட்டாச் செயின்.

(இ - ள்.) வையகமெல்லாவற்றையும் அரசன் காக்கும், அவ்வரசனை அவன் றான்செய்யும் முறை காக்கும்; அதனைத் தப்பாமற் செய்யின், (எ - று).

இது தனக்குக் காவலாம் என்றது. 9

550. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
548 றண்பதத்தாற் றானே கெடும்.

(இ - ள்) எளிய காலத்தோடே நாலாராய்ந்து முறைமை செய்யாத அரசன், தனது தண்பதத்திலேனே கெடுப்பாரின்றித் தானே கெடும், (எ - று).

எண்பதமாவது வந்தவர் தங்கள் குறையைச் சொல்லுதற்கு எய்துங்காலம்; தண்பதமாவது குறையைச் சொல்லுதற்குத் தாழ்க்குங் காலம். 10

---

## 18 - ம் அதிகாரம்.

## கொடுங்கோன்மை.

கொடுங்கோன்மையாவது கொடுங்கோன்மையால் வருங் குற்றங் கூறுதல். அது முறைமை செய்யாமையும், அருள் செய்யாமையும், பிறர் கலியாமற்காவாமையும், முறைகெடச் செய்தலும், குடிகளுக்குத் தண்டனை ஆராயாது செய்தலும், அல்லவை செய்தலும், குடிகளை இரத்தலுமெனப் பலவகைப்படும். இது கூறிய செங்கோன்மையின் மாறுபட்டுவருதலின், அதன்பின்கூறப்பட்டது.

551. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேன்
556 மன்னுவா மன்னர்க் கொளி.

(இ - ள்.) அரசர்க்கு ஒளி நிலைபெறுதல் செங்கோன்மை; அஃதில்லையாயின், அரசர்க்கு ஒளி நிலையாதாம், (எ - று).

*முறை செய்யாமையால் அவன் நிலைபெறுதல் அருமையெனக் குற்றங் கூறுவார் முற்படப் புகழில்லையாம் என்றார்.* 1

552. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
553 னாடொறு நாடு கெடும்.

(இ - ள்.) *குற்றமும் குணமும் நாடோறும் ஆராய்ந்து, அதற்குத்தக முறை செய்யாத அரசன் நாடு நாடோறும் கெடும்,* (எ - று).

*இது நாடுகெடுமென்றது.* 2

553. இன்மையி னின்ன துடைமை முறைசெய்யா
557 மன்னவன் கோற்கீழ்ப் படின்.

(இ - ள்.) *நல்குரவினும் செல்வம் துன்பமாகும்; முறைசெய்யாத அரசனது கொடுங்கோலின்கீழே குடியிருக்கின்,* (எ - று).

*இது பொருளுடையாரும் துன்பமுறுவரென்றது. இவை மூன்றும் முறை செய்யாமையாலே வருங் குற்றங் கூறின.* 3

554. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
557 னளியின்மை வாழு முயிர்க்கு.

(இ - ள்.) *உலகத்திற் பல்லுயிர்க்கும் மழையில்லையானால் வருந்துன்பம் எத்தன்மைத்தாகின்றது அத்தன்மைத்து; அரசன் அருளிலனாதல் அவன் கீழ் வாழும் மக்கட்கு,* (எ - று).

*இஃது அருள் செய்யாமையால் வருங் குற்றங் கூறிற்று.* 4

555. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
560 காவலன் காவா னெனின்.

(இ - ள்.) *பசுக்கள் பால் குறையும்; அந்தணர் வேதம் ஓதார்; அரசன் காவானாயின்,* (எ - று).

*இது காவாமையால் வருங் குற்றங் கூறிற்று.* 5

556. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
559 யொல்லாது வானம் பெயல்.

(இ - ள்.) *முறைமைகோட மன்னவன் செய்வனாயின், மழை துளிவிடுதலைத் தவிர்ந்து பெய்யாதொழியும்,* (எ - று). 6

557. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
554 சூழாது செய்யு மரசு.

(இ - ள்.) பொருளையும் பொருள்தரும் குடிமையையும் கூட இழப்பன், முறைகோடி ஆராயாது செய்யும் அரசன், (எ - று).

இஃது ஆராயாது செய்வதனாலவரும் குற்றங் கூறிற்று. 7



558. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்கொண்
551 டல்லவை செய்தொழுகும் வேந்து.

(இ - ள்.) கொலைத்தொழிலை மேற்கொண்டவரினும கொடியன், அலைத்தற்றொழிலை மேற்கொண்டு நீதியல்லாதன செய்து ஒழுகுகின்ற அரசன், (எ-று).

559. அல்லற்பட் டாற்ரு தழுதகண் ணீரன்றே
555 செல்வத்தைத் தேய்க்கும் படை.

(இ - ள்.) நீதியல்லன செய்தலானே அல்லற்பட்டு, அதற்கு ஆற்ருது, அழுத கண்ணீரன்ரே? செல்வத்தைத் தேய்க்கும் ஆயுதம், (எ - று).

இஃது அவ்வரசன் கெடுமென்றது. 9

560. வேலொடு நின்ரு னிடுவேன் றதுபோலுங்
552 கோலொடு நின்ரு னிரவு.

(இ - ள்.) தனியிடத்தே வேலொடு நின்றவன் கையிலுள்ளன தா வென்றல்போலும்; முறைசெய்தலை மேற்கொண்டுநின்றவன் குடிகள்மாட்டு இரத்தல், (எ - று).

கோலொடு நிற்றல்-செவ்வைசெய்வாரைப் போன்று நிற்றல். நிச்சயித்த கடமைக்குமேல் வேண்டுகோளாகக் கொள்ளினும், அது வழியிற் பறிப்பதனோடு ஒக்குமென்றவாறு. 10

---

## 19 - ம் அதிகாரம்.
## வெருவந்த செய்யாமை.

வெருவந்த செய்யாமையாவது பிறர்க்கு ஐயம வருவன செய்யாமையும், தனக்கு அச்சம் வருவன செய்யாமையும கூறுதல். தான் முறைசெய்வாரைப் போன்றிருந்து அதனை உலகத்தார் வெருவுமாறு செய்வனாயின், அதுவுங் கொடுங்

கோலோடு ஒக்குமென்று அதன்பின் இது கூறப்பட்டது.

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
561 லொத்தாங் கொறுப்பது வேந்து.

(இ - ள்.) குற்றத்திற்குத் தக ஆராய்ந்து, ஒருவர்மேற் செல்லாமைக் காரணமாக உலகத்துப் பொருந்துமாறு ஒறுப்பவன் அரசன், (எ - று). 1

562. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க
562 நீங்காமை வேண்டு பவர்.

(இ - ள்.) கடிதாகச் செய்வாரைப்போன்று மெல்லிதாகச் செய்க, நெடிதாக வருகின்ற ஆக்கம் நீங்காமையை வேண்டுவோர், (எ - று).

## அரசியல் - 19 - வது வெருவந்த செய்யாமை. 111

இது குற்றத்திற்குத் தக்க தண்டத்தைக் குறையச் செய்யவேண்டுமென்றது. 2

563. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
570 தில்லை நிலக்குப் பொறை.

(இ - ள்.) கடுங்கோலனாகிய அரசன் அறிவில்லாதாரை அமாத்தியராகக் கூட்டிக்கொள்ளும், அவ்வரசன் அல்லது நிலத்துக்குப் பாரம் வேறொன்றும் இல்லை, (எ - று). 3

564. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் வேந்த
564 னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(இ - ள்.) தன்னிழலில் வாழ்வாரால் அரசன் கடியனென்று கூறப்பட்ட இன்னாத சொல்லையுடைய வேந்தனானவன், தானுறையும் இடம் வெகுளப்பட்டு விரைந்து கெடும், (எ - று).

இது நாடும் தான்உறையும் இடமும் பொறுப்பினும் தெய்வத்தினாற் கெடுவனென்றது. 4

565. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
568 சீறிற் சிறுகும் திரு.

(இ - ள்.) பிறர் செய்த குற்றத்தைத் தனக்கு இனமானாரோடே அமைந்து ஆராயாத அரசன் கடியசொல்லனுமாய்க் கண்ணோட்டமும் இலனாயின், அவனது செல்வம் நாடோறும் சுருங்கும், (எ - று).

ஆராயாத அரசன் சின்னெறியிற் றீரானாயின், அவன்செல்வம் குறையு மென்றவாறு. இனம்-மந்திரி புரோகிதர். 5

566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
5̄66 நீடின்றி யாங்கே கெடும்.

(இ - ள்.) அரசன் கடியசொல்லை யுடையவனுமாய்க், கண்ணோட்டமும் இலனாயின், அவனது தொன்றுதொட்டு வருகின்ற செல்வம் பின்பு நிற்றலின்றி அக்காலத்தே கெடும், (எ - று). 6

இஃது குறைதலேயன்றி முழுதுங் கெடுமென்றது.

567. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
567 னடுமுரண் டேய்க்கு மரம்.

(இ - ள்.) கடுஞ்சொற் கூறுதலும் குற்றத்தின் மிக்க தண்டஞ் செய்தலும் அரசனுடைய பகைவரை வெல்லும் வலியைத் தேய்க்கும் அரமாம், (எ - று).

இது வலியைக் கெடுக்கும் என்றது. 7



568. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்வம்
565 பேய்கண் டன்ன துடைத்து.

(இ - ள்.) காண்டற்கரிய செவ்வியையும் இன்னா முகத்தையும் உடையவனது பெரியசெல்வம் பேயைக்கண்டாற்போல அச்சந்தருதலுடைத்து, (எ-று).

இது செல்வத்தை வாங்குவார் இன்மையின் படை சேராதென்றது. 8

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
569 வெருவந்து வெய்து கெடும்.

(இ - ள்.) தனக்குக் காவலானவற்றை முன்னேயமைத்துச் செய்யாத வேந்தன் செருவந்த காலத்து அச்சமுற்றுக் கடிதுகெடும், (எ - று).

இது தனக்கும் அச்சம் வருவன செய்யலாகாதென்றது. 9

570. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
563 ஒருவந்த மொல்லைக் கெடும்.

(இ - ள்.) *அரசன் அஞ்சத்தகுவனவற்றைச் செய்தொழுகும் வெங்கோலை யுடையனாயின், அவன் ஒருதலையாகக் கடிதிற்கெடும், (எ - று).* 10

---

## **20** - ம் அதிகாரம்.
## கண்ணோட்டம்.

*கண்ணோட்டமாவது கண்ணுற் காணப்பட்டாரை யருள் செய்தல். குற்றஞ்செய்தாரை ஒறுக்குங்கால் உலகத்தாரிசைய ஒறுக்கவேண்டுமென்றாராயினும் அவ்வாறு செய்தவரைத் தமது கண்முன்னாகக் கண்டால் அதனைப்பொறுத்தலும் வேண்டுமென்று அதன்பின் இது கூறப்பட்டது. இது பெரும்பான்மையும் முன்புகண்டு பழகினார் மேற்று.*

571. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
571 யுண்மையா னுண்டிவ் வுலகு.

(இ - ள்.) *கண்ணோட்டமாகிய பெரிய அழகு அரசன்மாட்டு உண்டானபடியினாலே, இவ்வுலகம் நடை யாகின்றது, (எ - று).*

*இஃது அஃதில்லையாயின், உலகங்கெடும்: ஆதலால், கண்ணோடவேண்டுமென்றது.* 1

572. ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப்
579 பொறுத்தாற்றும் பண்பே தலை.

(இ - ள்.) *தம்மை யொறுத்துச் செய்யும் இயல்புடையார்மாட்டும் கண்ணோடிப் பொறுத்துச்செய்யும் குணமே தலையான குணம், (எ - று).* 2



573. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
580 நாகரிகம் வேண்டு பவர்.

(இ - ள்.) *நஞ்சு பெயக்கண்டும் அதனை மாற்றாது உண்டு அமைவர்,*

எல்லாராலும் விரும்பத்தக்க நாகரிகத்தை விரும்புவார், (எ - று).

நாகரிகம்-அறம் பொருள் இன்பத்தின்கண் நற்குணங்கள் பலவும் உடைமை.

574. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
578 குரிமை யுடைத்திவ் வுலகு.

(இ - ள்.) தங்கருமத்திற்கு அழிவு வாராமற் கண்ணோடவல்லவர்க்கு, இவ்வுலகம் உரிமையாதலை உடையது, (எ - று).

இது நற்குணமாவது கண்ணோட்டமாயினும், அரசர்க்குப் பொருட்கேடு வாராமல் கண்ணோடவேண்டுமென்று கூறிற்று. 4

575. கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
572 ருண்மை நிலக்குப் பொறை.

(இ - ள்.) உலகநடை கண்ணோட்டத்தின்கண்ணது; ஆதலால், அஃதில்லாதார் உளராயிருத்தல் நிலத்துக்குப் பாரமாம், (எ - று).

இது கண்ணோட்டமில்லாதாரை நிலம் பொறாதென்றது. 5

576. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண்ணுடையார்
577 கண்ணோட்ட மின்மையு மில்.

(இ-ள்.) கண்ணோட்டமில்லாதவர் கண்ணிலரே; கண்ணுடையார் கண்ணோட்டமிலராதலும் இல்லை, (எ - று). 6

577. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்ணென்னாங்
573 கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) பண் என்ன பயனுடைத்தாம்; பாடலோடு பொருந்தாதாயின்; அதுபோல, கண் என்ன பயனுடைத்தாம்; கண்ணோட்டமில்லாத காலத்து, (எ-று).

இது பிறக்கும் இன்பம் பயவாதென்றது. 7

578. உளபோன் முகத்தெவன் செய்யு மளவினாற்
574 கண்ணோட்ட மில்லாத கண்.

(இ - ள்.) அவரவர் வாழ்வு காரணமாகக் கண்ணோடுதலைச்செய்யாத கண்கள், முகத்தின்கண் உள்ளனபோன்று இருப்பதன்றி வேறென்ன பயனைச் செய்யும்? (எ - று).

அளவென்றது தகுதியை. இது தனக்கும் பயன்படாதென்றது. 8

579. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேல்
575 புண்ணென் றுணரப் படும்.

(இ - ள்.) *கண்ணிற்கு அழகு செய்யும் அணிகலமாவது கண்ணோட்ட முடைமை; அஃதில்லையாயின், அவை புண்ணென்றறியப்படும்,* (எ - று).

*இது கண்ணோட்டமில்லாத கண்ணிற்குப் பெயர் கூறிற்று.* 9

580. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
576 டியைந்துகண் ணோடா தவர்.

(இ - ள்.) *சுதைமண்ணோடுகூடச்செய்த மரப்பாவையோடு ஒப்பார்; ஒருவன் கண்ணோடு தங்கண்கலந்தபின்பு கண்ணோட்டத்தைச் செய்யாதவர்.* ()

*இது கண்ணோடாமை மரப்பாவைக்கு ஒக்கும் என்றது.* 10

---

## 21 - ம் அதிகாரம்.

## *ஒற்றாடல்.*

*ஒற்றாடலாவது ஒற்றரையாளவேண்டு மென்பதும், அவ்வொற்றர் திறனும் கூறுதல். பெரியாரைத் துணைக்கோடல் முதலாகக் கண்ணோட்டம் ஈறாகத் தன் வாசலிலிருந்து செய்யவேண்டுவன கூறினார். அது செய்யுங்கால் அவ்வவர் செய்தியை ஒற்றான் ஒற்றியறியவேண்டுதலானும், இனிப் பிறநாடு கொள்ளுங்கால் செய்யவேண்டுவன கூறுகின்றாராதலின் அங்காட்டியல்பறிந்து வினை செய்யவேண்டுதலானும், இவ்வதிகாரம் வேண்டப்பட்டது.*

581. ஒற்று முறைசான்ற நூலு மிவையிரண்டுந்
581 தெற்றென்க மன்னவன் கண்.

(இ - ள்.) *ஒற்றினையும் முறையமைந்த நூலினையும் தெளியவறிந்த மன்னவனுக்கு இவையிரண்டையும் கண்களாகத் தெளிக,* (எ - று).

*அரசர்க்குக் கல்வி இன்றியமையாததுபோல ஒற்றும் இன்றியமையாதென்றவாறு. இஃது ஒற்றுவேண்டுமென்றது.* 1

582. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
585 முகாஅமை வல்லதே யொற்று.

(இ - ள்.) வினவப்படாத வடிவோடேகூடி, கண்ணஞ்சுதலும் இன்றி, அறிந்தபொருளை எவ்விடத்தினும் சோர்வின்றியே அடக்கவல்லவன் ஒற்றனவன், (எ - று). 2

583. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்க்
586 தென்செயினுஞ் சோர்வில தொற்று.



(இ - ள்.) தவஞ்செய்வார் வேடத்தராகி, நாட்டெல்லையைக் கடந்துபோய், அங்குள்ளசெய்தியை ஆராய்ந்து, அவ்விடத்து அகப்பட்டால் அவ்விடத்திலுள்ளார் துன்பமாயினும் இன்பமாயினும் செய்து கேட்டாலும், தன்னுள்ளக் கருத்தைச் சோரவிடாதவன் ஒற்றனவன், (எ - று). 3

584. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
587 யையப்பா டில்லதே யொற்று.

(இ - ள்.) பிறரால் மறைக்கப்பட்டவற்றைக் கேட்டறியவல்லனாகி, அறிந்தவற்றைத் தீர அறியவல்லவனே ஒற்றனவான், (எ - று)

இவை மூன்றும் ஒற்றிலக்கணங்கூறின. 4

585. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
582 வல்லறிதல் வேந்தன் றொழில்.

(இ - ள்.) பகைவராகியும் நட்டாராகியும் மத்திமராகியும் உதாசினராகியும் இருக்கின்ற அரசர்க்கும், அவர்சுற்றத்திற்கும், தஞ்சுற்றத்திற்கும், அறம் பொருள் இன்பங்களைப்பற்றி நிகழ்பவையெல்லாவற்றையும் நாடோறும் பிறர் அறிவதன் முன்னர்த் தான் ஒற்றால் விரைந்தறிதல் வேந்தனது தொழில், (எ - று). 5

586. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
584 கனைவரையு மாராய்வ தொற்று.

(இ - ள்.) தமக்குக் காரியமானவற்றைப் பார்த்துச்செய்வாரும், தமக்குச் சுற்றமாயிருப்பாரும், தம்மைவேண்டாதிருப்பாருமாகிய அனைவரையும் ஆராய்ந்தறிவான் ஒற்றனவன், (எ - று).

இவையிரண்டும் ஒற்றவேண்டுமிடங் கூறின. 6

587 ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
588 ரொற்றினா லொற்றிக் கொளல்.

(இ - ள்.) ஒற்றர் யாற்றாசர்மாட்டும் பொருள் பெற்று மாறுபடச்சொல்லு தல் கூடுமாதலால், ஓரொற்று அறிந்து சொன்ன பொருளைப் பின்னையும் ஓரொற்றினாலே ஒற்றியறிந்து பின்பு அதனுண்மை கொள்க, (எ - று). 7

588 ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
589 சொற்றொக்க தேறப் படும்.

(இ - ள்.) ஒற்றரை விடுங்கால், ஒருவரையொருவர் அறியாமல்விடுக; மூவர் சொல் உடன்கூடின், அது தெளியப்படுமாதலால், (எ - று).

இவை இரண்டும் ஒற்றரை யாளுந்திறங் கூறின. 8

589. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
590 புறப்படுத்தா னாகு மறை.



(இ - ள்.) ஒற்றர்க்குச் சிறப்புச் செய்யுங்கால், பிறரறியாமற் செய்க ; பிற ரறியச் செய்வனாயின், அவர் ஒற்றிவந்த பொருளைப் புறத்துவிட்டானாம், (எ-று).

இஃது ஒற்றர்க்குச் சிறப்புச் செய்யுங்கால் பிறரறியாமற் செய்யவேண்டு மென்றது. 9

590. ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்
583 கொற்றங் கொளக்கிடந்த தில்.

(இ - ள்.) ஒற்றராலே ஒற்றிப் பொருள் விசாரியாத மன்னவன் கொள்ளக் கிடந்ததொருவெற்றி இல்லை, (எ - று).

இஃது ஒற்றின்மையால் வருங் குற்றங்கூறிற்று. 10

---

## 22 - ம் அதிகாரம்.

### ஊக்கமுடைமை.

ஊக்கமுடைமையாவது அதனைச் செய்யுமிடத்துக் காலத்து அருமையை ஓராது இவ்வாறு செய்யக்கடவேனென்று கருதுங் கருத்துடைமை. பிறர்காடு கொள்ளுங்காலத்து அவ்விடத்துள்ள செய்தியை ஒற்றரால் அறிந்த பின்பு அதனையேஅறிந்து கொள்ளக்கடவேனென்று நினைக்குங்கருத்து வேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

591. உடைமை யெனப்படுவ தூக்கமஃ தில்லா
591 ருடைய துடையரோ மற்று.

(இ - ள்.) ஒற்றரையுடைமை யென்று சொல்லப்படுவது ஊக்கமுடைமை; அஃதிலாதார் மற்றுடையதாகிய பொருளெல்லாம் உடையராகார், (எ - று). 1

592. ஊக்க முடைமை யுடைமை பொருளுடைமை
592 நில்லாது நீங்கி விடும்.

(இ - ள்.) உடைமையாவது ஊக்கமுடைமை; பொருளுடைமை நிலை நில்லாது நீங்கும், (எ - று).

பொருள் உடையார்க்கு எல்லா முண்டா மென்பார்க்கு இது கூறப் பட்டது. 2

593. வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர்தம்
595 முள்ளத் தனைய துயர்வு.

(இ - ள்.) புகுந்த நீரின் அளவினது பூக்களது வளர்ச்சி; அதுபோல, மாந்தரது உள்ளத்தின் அளவினது ஊக்கம், (எ - று).

இஃது ஊக்கம் இதனானே உண்டா மென்றது. 3



594. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
594 வூக்க முடையா னுழை.

(இ - ள்.) அசைவில்லாத ஊக்கமுடையான்மாட்டு ஆக்கம், தானே வழி கேட்டுச் செல்லும், (எ-று).

நினைத்ததனாலே ஊக்கமுண்டாமோ என்றார்க்கு இது கூறப்பட்டது. 4

595. உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
596 தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(இ - ள்.) நினைப்பனவெல்லாம் உயர்வையே நினைக்க; அந்நினைவு முடியாமல் தப்பினும், முயன்று பெற்றதனோடு ஒக்கும், (எ - று).

இது தப்பினும் பழிக்கப்படா தென்றது. 5

596. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
600 மரமக்க ளாதலே வேறு.

(இ - ள்.) ஒருவனுக்கு அறிவாவது உள்ளமிகுதியுடைமை; அஃதில்லா

தார் மரமென்று சொல்லப்படுவார்; மக்கள்வடிவாதலே மரத்தின் வேறாகத் தோன்றுகின்றது, (எ - று).

இஃது அறிவும் இதுதானே யென்றது. 6

597. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
596 பட்டுப்பா டூன்றுங் களிறு.

(இ - ள்.) தளர்ச்சிவந்தவிடத்துத் தளரார் உள்ள மிகுதியுடையார்; மெய் புதைந்த அம்பினுட்பட்டுப் பாடூன்றும் களிறுபோல, (எ - று).

இஃது உயிர்க்கேடு வரினுந் தளரார் என்றது. 7

598. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ருக்க
59. மொருவந்தங் கைத்துடை யார்.

(இ - ள்.) செல்வத்தை இழந்தோமென்று அலமரார்; உள்ளமிகுதியை ஒருதலையாகத் தம்பாலுடையார், (எ - று).

இது பொருட்கேடுவரினுந் தளராரென்றது 8

599. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
598 வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(இ - ள்) உள்ளமிகுதியில்லாதார் உலகின்கண் வண்மையுடைமை யென்னுங் களிப்பினைப் பெறார், (எ - று).

இஃது உள்ளமிகுதி யில்லாதார்க்குப் பொருள்வரவு இல்லையாம்; ஆதலான், அவர் பிறர்க்கு ஈயமாட்டாரென்றது. 9



600. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
599 வெரூஉம் புலிதாக் குறின்.

(இ - ள்.) யானை பெரிய உடம்பினதாய், கூரியகோட்டையும் உடைத்தாயினும், புலி பொருமாயின் அஞ்சும், (எ - று).

இஃது உள்ளமுடைமை யில்லாதார் பெரியராயினும் கெடுவா ரென்றது 10

## 23 - ம் அதிகாரம்.

## மடியின்மை.

மடியின்மையாவது சோம்பலில்லாது செய்யுங்காரியம். உயாவு நினைத்தாலும் அதனைச்செயது முடிக்குங்கால், சோம்பாமை வேண்டுமென்று அதன்பின் இது கூறப்பட்டது.

601. மடியை மடியா வொழுகல் குடியைக்
602 குடியாக வேண்டு பவர்.

(இ - ள்.) மடிசெய்தலை மடித்து ஒழுகுக; தங்குடியை உயர்குடியாக வேண்டுபவா, (எ - று).

இது சோம்பாமை வேண்டுமென்றது 1

602. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
603 குடிமடியுந் தன்னினு முந்து.

(இ - ள்.) நெஞ்சத்து மடியினாலே வினையின்கண் மடித்தலைச்செய்து, ஒழுகாநின்ற அறிவிலி பிறந்தகுடி தனக்கு முன்பே கெடும், (எ - று).

சோம்புடையார்க்கு உளதாகுங் குற்றம் என்னையென்றார்க்கு இது கூறப்பட்டது. 2

603. குடியென்னுங் குன்ற விளக்க மடியென்னு
601 மாசூர மாய்ந்து கெடும்.

(இ - ள்.) குடியென்று சொல்லப்படுகின்ற குறைவில்லாத ஒளி, மடியென்று சொல்லப்படுகின்ற மாசு மறைக்கத் தோன்றாது கெடும், (எ - று).

முன்பே தோற்றமுடைத்தாகிய குடியுங் கெடுமென்றவாறு. 3

604. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
604 மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(இ-ள்.) குடியுங் கெட்டுக் குற்றமும் மிகும்; சோம்பின்கண்ணே பொருந்தி மாட்சிமைப்பட்ட முயற்சி யில்லாதார்க்கு, (எ - று).

இது பிறசால் இகழப்படுவ சென்றது. 4

## அரசியல் - **23** - வது மடியின்மை. 119

605. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
608 கடிமை புகுத்தி விடும்.

(இ - ள்.) குடிப்பிறந்தார்மாட்டே மடிமை தங்குமாயின், அது தன்பகை வர்க்கு அடிமையாக்கிவிடும், (எ - று).

இது கீழ்ப்படுத்தலேயன்றி அடிமையும் ஆக்குமென்றது. 5

606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்
606 மாண்பய னெய்த லரிது.

(இ - ள்.) பூமியையுடைய வேந்தர் பலபொருளினாலும் அமைந்த விடத்தும் மடியுடையாராயின், மாட்சிமைப்பட்ட பொருளைப் பெறுதல் இல்லை, (எ-று).

இது செல்வமுண்டாயினும் கெடுமென்றது. 6

607. நெடுநீர் மறவி மடிதுயி னான்கும்
605 கெடுநீரார் காமக் கலன்.

(இ - ள்.) விரைந்து செய்யும் வினையை நீட்டித்தலும், செய்ய வினைந்ததனை மறத்தலும், அதனைச் செய்தற்குச் சோம்புதலும், அதனைச் செய்யாது உறங்குதலுமாகிய இவைநான்கும் கெடுந்தன்மையுடையார் காதலித்தேறும் மரக்கலம், (எ - று).

காமக்கல னென்றது தன்னைக்காதலித்தேறினாரை கடுக்கடலுள் தள்ளும் மரக்கலம் போலவென்றது. இத்துணையும் மடிமையினால் வருங் குற்றங் கூறினார்.

608. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
609 மடியாண்மை மாற்றக் கெடும்.

(இ - ள்.) குடியை யாளுதலுடைமையின்கண் வந்த குற்றமானது ஒருவன் சோம்புடைமையைக் கெடுக்கக் கெடும், (எ - று).

குற்றம் - குடிக்குவேண்டுவன செய்யாமையால் வருங் குற்றம். 8

609. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
610 றாஅய தெல்லா மொருங்கு.

(இ - ள்.) மடியில்லாத மன்னவன் எய்துவன், அடியினால் அளந்தானால் கடக்கப்பட்ட வுலகமெல்லாம் ஒருங்கே, (எ - று).

இது மடியின்மையால் வரும் பயன் கூறிற்று. 9

610. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
607 மாண்ட வுஞற்றி லவர்.

(இ - ள்.) கழறுதலைச்செய்து பிறர் இகழ்ந்து சொல்லுஞ் சொல்லைக் கேட்பர், மடியைச்செய்து மாட்சிமைப்பட்ட முயற்சி யில்லாதார், (எ - று). 10

---



## 24 - ம் அதிகாரம்.

## ஆள்வினையுடைமை.

*ஆள்வினை யுடைமையாவது முயற்சியுடைமை. செய்யுங் காரியம் உபாயவினைத்துச் சோம்புதல் இல்லாதிருந்தாலும் அது முடியுமாறு முயலவேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது*

611. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கேளிர்
துன்பந் துடைத்தூன்றுந் தூண்.

(இ - ள்.) *தன்னுடம்பிற்கு இன்பத்தை விரும்பாது வினை செய்தலை விரும்புமவன், தன்கேளிர்க்கு உற்றதுன்பத்தை நீக்கி அவரைத் தளராமல் தாங்குவதொரு தூணும்,* (எ - று)

*ஆதலால், வருத்தம் பாராது முயலவேண்டு மென்பது* 1

612. அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(இ-ள்.) *ஒரு வினையைச்செய்தல் அருமையுடைத்தென்று முயலாமையைத் தவிர்தல் வேண்டும்; முயற்சி தனக்குப் பெருமையைத் தருமாதலால்,* (எ - று).

*இது வினைசெய்து முடித்தல் அரிதென்று தவிர்தலாகாதென்றது.* 2

613. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(இ - ள்.) *வினைசெய்யுங் காலத்து வினைகெடுதலைத் தவிர்க; வினைக்குறையை முடித்தாரினின்றும் உலகம் விடப்பட்டதன்று,* (எ - று).

*இது தொடங்கின வினையைக் குறைபட விடலாகாதென்றது.* 3

614. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(இ - ள்.) வினை செய்யுங்கால் அதனைச் செய்யாது சோம்பியிருப்பானது சோம்பலின்கண்ணே மூதேவி உறைவள்; அதனைச் சோம்பலின்றி முயலுபவன் முயற்சியின்கண்ணே திருமகள் உறைவளென்று சொல்லுவர், (எ - று).

இது வினையை மடியின்றிச் செய்யவேண்டுமென்பது கூறிற்று. 4

615. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
613 வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) முயற்சியாகிய நன்மையின்கண்ணே கிடந்தது; பிறர்க்கு உபகரித்தலாகிய பெருமிதம், (எ - று).

இஃது அறஞ் செய்தலும் இதனாலே யாகுமென்றது. .. 5



616. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை
614 வாளாண்மை போலக் கெடும்.

(இ - ள்.) முயற்சியில்லாதான் பிறர்க்கு உபகரித்தல், படைகண்டா லஞ்சுமவன் கைவாள் பிடித்தாற்போலக் கெடும், (எ - று).

இஃது அறம் செய்யமாட்டானென்றது. 6

617. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
616 யின்மை புகுத்தி விடும்.

(இ - ள்.) முயற்சி செல்வத்தை உண்டாக்கும்; முயலாமை வறுமையை உண்டாக்கும், (எ - று).

இது செல்வமும் நல்குரவும் இவற்றாலே வருமென்றது. 7

618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
618 தாள்வினை யின்மை பழி.

(இ - ள்.) யார்க்கும் புண்ணியமின்மை குற்றமாகாது; அறியத் தகுவன அறிந்து முயற்சியில்லாமையே குற்றமாவது, (எ - று).

அறிவு - காரிய அறிவு. புண்ணியமில்லாதார் முயன்றால் வருவதுண்டோ வென்றார்க்கு, இது கூறப்பட்டது. 8

619. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்

6.9' மெய்வருத்தக் கூலி தரும்.

(இ - ள்.) புண்ணியம் இன்மைபால் ஆக்கம் இல்லையாயினும், ஒருவினையின் கண்ணே முயல்வனாயின், முயற்சி தன்னுடம்பினால் வருந்திய வருத்தத்தின் அளவு பயன் கொடுக்கும், (எ - று).

இது புண்ணியமில்லையாயினும், பயன் கொடுக்கும் என்றது. 9

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
620 தாழா துஞற்று பவர்.

(இ-ள்.) ஒரு வினையை மனத்திற் றளர்வு இன்றி நீட்டியாமல் முயலுமவர், பயன் படாமல் விலக்குகின்ற தீய வினையையும் முதுகு புறங்காண்பர், (எ - று).

இஃது ஊழ்தன்னையும் வெல்வ ரென்றது. 10

---

16



## 25 - ம் அதிகாரம்.

## இடுக்கணழியாமை.

இடுக்கணழியாமையாவது யாதானும் ஒரு துன்பம் வந்துற்ற காலத்து அதற்கு அழியாமை. வினை செய்யுங் காலத்தினை முடிவுசெய்தவன் முன்னர்ச் சில இடையூறு வந்தால் அவற்றைப் பொறுத்துச் செய்கின்ற வினையை முற்ற முயல வேண்டுமென்று அதன்பின் இது கூறப்பட்டது.

621. இடுக்கண் வருங்கா னகுக வதனை
621 யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(இ - ள்.) தனக்குத் துன்பம் வந்த காலத்தும் நகுக; அத்துன்பத்தை மேன் மேலும் அடர்க்க வல்லது அந்நகுதல் போல்வது பிறிதில்லை, (எ - று).

இஃது இடுக்கணுக்கு அழியாமை வேண்டுமென்றது. 1

622. இன்பம் விழையா திடும்பை யியல்பென்பான்
628 றுன்ப முறுத லிலன்.

(இ - ள்.) இன்ப முறுதலை விரும்பாது இடும்பை யுறுதலை இயல்பாகக் கொள்ளுமவன், துன்ப முறுதல் இல்லை, (எ - று).

இஃது இடுக்கணை யியல்பாகக் கொள்ளல்வேண்டு மென்றது. 2

623. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
623 கிடும்பை படாஅ தவர்.

(இ - ள்.) துன்பத்திற்குத் துன்பத்தைச் செய்வார், அத் துன்பத்திற்குத் துன்ப முறாதவர், (எ - று).

இது பொறுக்க வேண்டுமென்றது. இவை மூன்றும் பொதுவாகக் கூறப் பட்டன. 3

624. மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
624 விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(இ - ள்.) இடுக்கண் வந்து உற்றவிடத்தெல்லாம் பகடுபோலத் தளர்வின் றிச் செலுத்த வல்லவனை உற்ற துன்பம் இடர்ப்படுதலை யுடைத்து, (எ - று).

இது தளர்வில்லாதவன் உற்ற துன்பம் கெடு மென்றது. 4

625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
625 விடுக்க ணிடுக்கட் படும்.

(இ - ள்.) மேன்மேலே துன்பம் வந்தனவாயினும், மனனழிவில்லாதவன் உற்ற இடுக்கண், தான் இடுக்கண் படும், (எ - று).

இது மனனழிவில்லாதவன் உற்றதுன்பம் மேன்மேல் வரினுங் கெடு மென்றது. 5



626. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
622 னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(இ - ள்) வெள்ளம்போன்ற துன்பம், அறிவுடையவன் நெஞ்சினாலே வினைப்பயனென்று நினைக்கக் கெடும், (எ - று).

இது பலவா யொருங்கு வரினும், அறிவுடையா னுற்ற இடுக்கண் கெடு மென்றது. 6

627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்

கையாறாக் கொள்ளாதா மேல்.

(இ - ள்.) உடம்பு இடும்பைக்கு இலக்காம் என்று கருதி, தமக்கு உற்ற துன்பத்தைத் துன்பமாகக் கொள்ளார் மேலாயினோர், (எ - று).

இது மேல் நன்மையாற் றவஞ் செய்யுங்கால் வருந் துன்பத்திற்கு அழியாதாரைக் கூறிற்று. 7

628. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
ரோம்புத றேற்றா தவர்.

(இ - ள்.) பொருளற்றேமென்று இரங்கித் துன்ப முறார்; அதனைப் பெற்றேமென்று போற்றி வைத்தலை நன்றென்று தெளியாதவர், (எ - று).

இது பொருட்கேட்டினால் வருந் துன்பத்திற்கு அழியாதாரைக் கூறிற்று. 8

629. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(இ - ள்) இன்பம் நுகரு மிடத்து அதனை விரும்பாதவன், அதனால் வருந் துன்பம் நுகரு மிடத்து வருத்த முறுத லிலன், (எ - று).

இன்பம் நுகரு மிடத்து அதனை விரும்பாமையாவது அவ்விடத்துத் தான் அழுந்தி நில்லாமை. இது காமத்தால் வருந் துன்பத்திற்கு அழியாதாரைக் கூறிற்று. 9

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
னொன்னார் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) இன்னாமையை இன்பம்போலக் கொள்வனாயின், அது தன் பகைவரும் விரும்புவதொரு சிறப்பாம், (எ - று).

மேற்கூறியவாற்றால் செய்தலே யன்றித் துன்பத்தையும் இன்பமாகக் கொள்வனாயின், அவனைப் பகைவரும் மதிப்பரென்றவாறு. 10

அரசியல் முற்றிற்று.



## 2. அமைச்சியல். (10)

### 1 - ம் அதிகாரம்.

### *அமைச்சு.*

அமைச்சாவது அமைச்சர் செய்யுந் திறங்கூறுதல் அஃதாவது அது கூறிய அதிகாரம் பதினும் முற்பட அமைச்சர்க்கு இன்றியமையாக் குணங்களெல்லாம் ஓரதிகாரத்தானும், வாத மண்டலத்திலிருந்து செய்யவேண்டுவன நான்கதிகாரத்தானும், மறுமண்டலத்திற்குப் போம தூதர் இலக்கணம் ஓரதிகாரத்தானும், அவர் செய்யுந் திறன் நான்கதிகாரத்தானுங் கூறினுமொன்று சொல்லப்படும். மேல் அரசர் செய்யுந் திறன் கான்கினுள் ஒரு வினை செய்து முடிக்குங்கால் அமைச்சு வேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

631. வன்கண் குடிகாத்தல் கற்றறித லாள்வினையோ
632 டைந்துடன் மாண்ட தமைச்சு.

(இ - ள்) அஞ்சாமையும், குடிகாத்தலும், இந்திரியங்களைக் காத்தலும், நூல்முகத்தானறிதலும், முயற்சியும் என்னும் ஐந்தனோடு கூட மாட்சிமைப்பட்டவன் அமைச்சனாவான், (எ - று)

இவை அமைச்சனாவதன்முன்னே வேண்டுமாதலின், இது முற்கூறப்பட்டது. 1

632. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
636 யாவுள முன்னிற் பவை.

(இ - ள்.) மேற்கூறிய நூற்கல்வியோடு கூட நுண்ணிதாகிய மதியினையும் உடையார்க்கு அதனினும் நுண்ணியவாய் மாற்றாராலெண்ணப்பட்டு எதிர் நிற்கும் வினைகள் யாவுள? (எ - று)

இது மேற்கூறியவற்றோடு மதியும் வேண்டு மென்றது. 2

633. அறனறிந் தான்றமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
635 திறனறிந்தான் றேர்ச்சித் துணை.

(இ - ள்.) அறத்தினையும் அறிந்து, நிரப்பியமைந்த சொல்லினையும் உடையனாய், எல்லாக்காலத்தினும் செய்யுந்திறன்களையும் அறியவல்லவன் அரசற்குச் சூழ்ச்சித்துணையாய அமைச்சனாவான், (எ - று). 3

634. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
634 சொல்லலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) *ஒருவினையை நன்றாக ஆராய்தலும், அதனைச்செய்ய வினைத்தால் முடியுமாறெண்ணிச் செய்தலும், ஐயமாகிய வினையைத் துணிந்து சொல்லுத லும் வல்லவன் அமைச்சனாவான்,* (எ - று). 4

635. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
631 மருவினையு மாண்ட தமைச்சு.

(இ - ள்.) *செய்தற்கு அரியவினையும், அதற்காங்கருவியும், அதற்காங்காலமும், அதனையிடையூறு படாமற் செய்து முடித்தலுமாகிய இந்நான்கும் மாட்சிமைப் பட்டவன் அமைச்சனாவான்,* (எ - று).

*செய்தற்கு அரியவினையாவது மறுமண்டலங்கோடல்; கருவியாவது யானை-குதிரை-முதலிய படை ; காலமாவது நீருந் நிழலுமுள்ள காலம்; செய்தலாவது மடியின்றிச் செய்தல்.* 5

636. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
633 பொருத்தலும் வல்ல தமைச்சு.

(இ - ள்.) *மாற்றரசரிடத்து உள்ளாரையும் நட்பாகிய அரசரையும் அவரிடத்தி னின்று பிரித்தலும், அவ்வாறு பிரிக்கப்பட்டாரை விரும்பித் தம்மிடத்துக் கொளலும், தம்மிடத்து நின்று பிரிந்தாரைக் கூட்டிக்கொளலும் வல்லவன் அமைச்சனாவான்,* (எ - று). 6

637. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
637 தியற்கை யறிந்து செயல்.

(இ - ள்.) *செயத்தகுவன அறிந்த விடத்தும், அது செய்யுங்கால் உலக நடை அறிந்து செய்க,* (எ - று).

*உலகநடை அறிதலாவது அரசர் சிலரும் பரிவாரத்திலுள்ளார் நிலைமையும் அறிதல். இவை யறியாது செய்யிற் குற்றமாமென்றவாறு.* 7

638. அழிகோன் றறியா னெனினு முறுதி
638 யுழையிருந்தான் கூறல் கடன்.

(இ - ள்.) *அரசன் அமைச்சன் கூறிய பொருளை யறிக; அவன் ஒன்றறியா னாயினும், அவனுக்கு உறுதியாயினவற்றை அருகிருந்த அமைச்சன் சொல்லுதல் கடன்,* (எ - று).

இஃது அரசன் கேளா னென்று சொல்லா தொழிதலாகாதென்று கூறிற்று.

639. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
640 திறப்பா டிலாஅ தவர்.

(இ - ள்.) அடைவுபட எண்ணியும், தம்மால் முடிவது இல்லாதவற்றையே செய்யாநிற்பர்; வினை செய்யுந் திறன் இல்லாதார், (எ - று).

இஃது எண்ணவல்லாராய் வினை செய்ய மாட்டாரென்று கூறிற்று. 9



640. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வ
639 ரேழுபது கோடி நலை.

(இ - ள்.) குற்றப்பட எண்ணும் அமைச்சரில் எழுபது கோடி மடங்கு நல்லர், உட்பகையாய்த் தன் னருகிலிருப்பவர், (எ - று).

இவை யிரண்டும் மந்திரிகளுள் விடப்படுவாரது இலக்கணங் கூறின. 10

## 2 - ம் அதிகாரம்.
## சொல்வன்மை.

சொல்வன்மையாவது வார்த்தைசொல்ல வல்லவ ராதல். அரசர்க்குக் கல்வி இன்றியமையாததுபோல அமைச்சர்க்கு இஃது இன்றியமையாதது ஆதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

641. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
645 வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(இ - ள்.) சொல்லைச் சொல்லுக; தான் சொல்ல நினைத்த அச் சொல்லைப் பிறிதொரு சொல்லாய் வெல்லுஞ் சொல் இல்லை யாதலை யறிந்து, (எ - று). 1

642. விரைந்து தொழில்கேட்கு ஞாலநிரந்தினிது
648 சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(இ - ள்.) இனிதாகச் சொல்ல வல்லாரைப் பெற்றாராயின், உலகத்தார் மேவி விரைந்து சென்று செய்யுந் தொழில் யாது என்று கேட்பர், (எ - று).

இது சொற்களைச் சொல்லின், இனிதாகச் சொல்லவேண்டு மென்றது. 2

643. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடன்
646 மாட்சியின் மாசற்ரு‍ர் கோள்.

(இ - ள்.) தாம் சொல்லுங்கால் பிறர் விரும்புமாறு சொல்லி, பிறர் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைத் தெரிந்துகொள்ளுதல், மாட்சிமையிற் குற்றமற்ருரது கோட்பாடு, (எ - று).

இது நயம்படக் கூறுதலே யன்றி, பிறர் சொல்லுஞ் சொல்லறிந்தும் சொல்லல் வேண்டு மென்றது. 3

644. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
643 வேட்ப மொழிவதாஞ் சொல்.

(இ - ள்.) வினவினரைப் பிணித்துக் கொள்ளுந் தகையவாய், வினவாதாரும் விரும்புமாறு சொல்லுதல் சொல்லாவது, (எ - று).

இது மேம்படக் கூறல்வேண்டு மென்றது. 4

அமைச்சியல் - **2** - வது சொல்வன்மை. 127

645. ஆக்கமுங் கேடு மதனுல் வருதலாற்
642 காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(இ - ள்.) ஆக்கமும் கேடும் சொல்லினுல் வருதலால், சொல்லின்கண் சோர்வைப் போற்றிக் காக்க வேண்டும், (எ - று).

இது சோர்வுபடாமற் சொல்லல வேண்டு மென்றது 5

646 பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற
649 சிலசொல்ல றேற்ரு தவர்.

(இ - ள்.) பல சொற்களைச் சொல்லக் காதலியா கிற்பர், குற்றமற்ற சில சொற்களைத் தெளியச் சொல்லலை அறியமாட்டாதாோ, (எ - று)

மன்ற-தெளிய இது சுருங்கச் சொல்லல் வேண்டு மென்றது. 6

647. இணரூழ்த்து நாரு மலரனையர் கற்ற
650 துணர விரித்துரையா தார்.

(இ - ள்.) இணராய மலர்ந்து நாற்ற மில்லாத பூவை யொப்பர், கற்றதனைப் பிறரறிய விரித்துச் சொல்ல மாட்டாதார், (எ - று).

இது சுருங்கச்சொல்லுதலே யன்றி, வேண்டுமிடத்து விரித்துஞ் சொல்லல் வேண்டு மென்றது. 7

648. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
இகல்வெல்லல் யார்க்கு மரிது.

(இ - ள்.) ஒருவன் சொல்ல வல்லவனுமாய் அதனைச் சோரவிடுதலும் இல்லானும் அஞ்சாது சொல்லுதலும் உடையவனுமாயின், அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கும் அரிது, (எ - று). 8

649. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

(இ - ள்.) சொல்லைச் சொல்லுந் திறனறிந்து சொல்லுக; அதனின் மேம்பட்ட அறனும் பொருளும் இல்லை, (எ - று).

தாமறியவே, புறங்கூறாமையும் பயனில சொல்லாமையும் பொய்கூறாமையும் உளவாம்; ஆதலான், அறனாயிற்று; அரசன்மாட்டும் ஏனையோர்மாட்டும் தகுதியறிந்து சொல்லுதலான், பொருளாயிற்று 9

650. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ளதூஉ மன்று.

(இ - ள்.) நாவினது நலமென்று சொல்லப்படுகின்ற நலம் ஒருவற்கு உடைமையாவது; அந்நலம் எல்லா நலத்துள்ளும் உள்ளதொரு நலமன்று; மிக்கது. ()

எல்லா நலத்துள்ளும் உள்ளதொருநலமன்று என்றமையால், இன்பம பயக்கு மென்பதாயிற்று. 10



## 3 - ம் அதிகாரம்.

## வினைத்தூய்மை.

வினைத்தூய்மையாவது செய்யும்வினையைக் குற்றம் பயவாமற்செய்தல். மேற்சொல்லுங்கால சொல்வதையும் பிறர் விரும்புமாறு சொல்லல் வேண்டு மென்றார். செய்வினையையும் அவ்வாறு செய்ய வேண்டுதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

651. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

(இ - ள்.) துணைநலம் ஆக்கத்தைக் கொடுக்கும்; வினைநலம் அவ்வளவே யன்றி, வேண்டிய வெல்லாவற்றையும் ஒருங்கு கொடுக்கும், (எ - று).

துணைநலம் ஆக்கங் கொடுத்தல் எல்லாராலும் அறியப்படுதலின், ஈண்டு ஏதுவாக வந்தது. 1

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
652 நன்றி பயவா வினை.

(இ-ள்.) எல்லாக் காலமும் தவிர்தல் வேண்டும்; புகழோடு நன்மை பயவாத வினையை, (எ - று).

என்று மென்றது செயலற்ற காலமுமென்றது 2

653. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
653 யாஅது மென்னு மவர்.

(இ - ள்.) தமக்குப் புகழ்கெடவரும் வினையைச் செய்தலையும் ஆக்கங் கருதுவார் தவிர்க, (எ - று)

இது முன்புள்ள புகழ் கெடவரும் வினையையும் தவிர்க என்றது. 3

654. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
655 மற்றன்ன செய்யாமை நன்று.

(இ - ள்) தனியப்பட்ட தென்று பின்னிரங்கப்படும் வினையைச் செய்யா தொழிக; வினைசெய்வானாயின், அவைபோல்வனவுஞ் செய்யாமையே நல்லது.

இது பின்னிரங்கப்படும் வினையைச் செய்யலாகாதென்றது 4

655. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
656 சான்றோர் பழிக்கும் வினை.

(இ - ள்.) தன்னைப் பயந்தாள் பசிகண்டானாயினும், சான்றோரால் பழிக்கப் படும் வினையைச் செய்யாதொழிக, (எ - று).

இது நல்லோர் பழிக்கும் வினையைத் தவிர்க என்றது. 5



656. இடுக்கண் வரினு மிளிவந்த செய்யார்
654 நடுக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) துன்பம் வரினும் இழிவாகிய வினைகளைச் செய்யார், துளக்க

மற்ற தெளிவுடையார். (எ - று).

இது பிறரால் இகழப்படுவன செய்யற்க வென்றது. இதனையும் கடிய வேண்டு மென்பது கூறப்பட்டது. 6

657. கடிந்த கடிந்தொரார் செய்வார்க் கவைதா

முடிந்தாலும் பீழை தரும்.

(இ - ள்.) நல்லோரால் கடியப்பட்டவற்றைக் கடிந்து நீக்காது செய்யு மவர்க்கு, அவ்வினைகள் தாம்கருதியவாற்றான் முடிந்த பின்பும் பீடையைத் தரும், (எ - று).

இது நன்மையல்லாத வினையைச் செயின், அது தீமை தருமென்றது. அவை பின்பு காட்டப்படும். 7

658. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்

பிற்பயக்கு நற்பா லவை.

(இ - ள்.) பிறர் அழக்கொண்ட பொருள்களெல்லாம் தாமும் அழப்போம்; அவ்வாறன்றி அறப்பகுதியால் கொண்ட பொருள்கள் இழந்தாராயினும், பின்பு பயன்படும், (எ - று).

இது தேடினபொருள் போமென்றது. 8

659. சலத்தாற் பொருள்செய்தே மாத்தல் பசுமட்

கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(இ - ள்.) வஞ்சத்தாலே பொருள்தேடி மகிழ்ந்திருத்தல், பசுமட்கலத் திலே நீரை முகந்துவைத்த தன்மைத்து, (எ - று).

இது தானும் பொருளுங் கூடிக் கெடு மென்றது. 9

660. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்

கழிநல் குரவே தலை.

(இ - ள்.) பழியைச் சுமந் தெய்திய ஆக்கத்தினும், சான்றோர்மாட்டு உள தாகிய மிக்க நல்குரவே தலைமையுடைத்து, (எ - று).

மேற் கூறியவாறு செய்யின் நல்குரவு உளதாகு மென்றார்க்கு, இது கூறப் பட்டது. 10

---

# 4 - ம் அதிகாரம்.

## வினைத்திட்பம்.

*வினைத்திட்பமாவது வினையின்கண் திண்ணியராதல். மேல் நல்வினையைச் செய்யவேண்டு மென்றார். அது செய்யுங்கால் திண்ணியராகிச் செயல்வேண்டு மாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

661. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
666 திண்ணிய ராகப் பெறின்.

(இ - ள்) *தாம் எண்ணிய பொருள்களை எண்ணினபடியே பெறுவர்; அவ்வாறு எண்ணினவர் அவ்வினையைச் செய்து முடிக்குந் திண்மையுடையா ராகப் பெறுவாராயின்,* (எ - று).

*இது வினையின்கண் திண்மை வேண்டு மென்றது.* 1

662. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
670 வேண்டாரை வேண்டா துலகு

(இ - ள்.) *கருவி முதலான வெல்லாவற்றானும் திண்மை பெற்ற விடத்தும், வினையினது திண்மையை விரும்பாதாரை உலகத்தார் விரும்பார்,* (எ - று).

*பலபொருளும் அமைதியும் உடையார்க்கு வினைத்திட்ப மின்றானால் வருங் குற்ற மென்னை யென்றார்க்கு, இது கூறப்பட்டது.* 2

663. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
661 மற்றவை யெல்லாம் பிற.

(இ - ள்.) *வினையினிடத்துத் திண்மை யென்று சொல்லப்படுவது ஒருவன் மனத்து உண்டான திண்மை; அதனை யொழிய, மற்றவையெல்லாம் திண்மையென்று சொல்லப்படா,* (எ - று).

*மற்றவையென்றது கருவியும் உபாயமும்.* 3

664. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
662 னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(இ - ள்.) *வினைசெய்யுங்கால் உறும் துன்பத்தை ஓரார் ஆதலும், அவ்விடத்துத் துன்பமுற்றால் தளரார் ஆதலுமாகிய இவ்விரண்டினது நெறியென்று*

சொல்லுவார், நீதி நெறியை ஆராய்ந்தவர், (எ - று). 4

665. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
664 சொல்லிய வண்ணஞ் செயல்.

(இ - ள்.) ஒரு வினையை இவ்வாறு செய்தும் என்று சொல்லுதல் யாவர்க்கும் எளியவாம்; அதனைச் சொல்லிய வாற்றால் செய்து முடித்தல் யாவர்க்கும் அரியவாம், (எ - று). 5



666. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது
668 தூக்கங் கடிந்து செயல்.

(இ - ள்.) கலக்கமின்றி ஆராய்ந்துகண்ட வினையிடத்துப் பின்னைத் துளக்கமின்றி, அதனை நீட்டியாது செய்க, (எ - று).

இது விரைந்து செய்யவேண்டு மென்றது. 6

667. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
669 யின்பம் பயக்கும் வினை.

(இ - ள்.) முற்பாடு துன்பம் உறவரினும், துணிந்து செய்க; பிற்பாடு இன்பம் பயக்கும் வினையை, (எ - று). 7

668. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்கொட்கி
66[illegible] னெற்றா விழுமந் தரும்.

(இ - ள்.) ஒரு வினையைத்தொடங்கினால், முடிவிலே சென்று மீளல் செய்வது ஆண்மையாவது; இடையிலே மீள்வனாயின், அது மிகுதியைக் கெடாத நோயைக் கொடுக்கும், (எ - று).

சென்றுமீளல் சுழல்தல் ஆயிற்று. இது தொடங்கின வினையை முடியச் செய்யவேண்டுமென்றது. 8

669. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க்
667 கச்சாணி யன்னா ருடைத்து.

(இ - ள்.) யாவரையும் வடிவுகண்டு இகழ்தலைத் தவிர்தல் வேண்டும்; உருளாநின்ற பெரியதேர்க்குக் காலாய் நடக்கின்ற உருளையைக் கழலாமல் தாங்

*கும் அச்சின் புறத்துச் செருகின சிற்றாணியைப் போலத் திண்ணியாரை இவ்வுலகம் உடைத்து ; ஆதலால், (எ - று).* 9

670. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தன்க
665 ணூறெய்தி யுள்ளப் படும்.

(இ - ள்.) *மிகுதியெய்தி மாட்சிமைப்பட்டாரது வினைத்திட்பமானது அரசன்மாட்டு உறுதலையெய்தி எல்லாராலும் நினைக்கப்படும்,* (எ - று).

*இது வினைத்திட்ப முடையாரை எல்லாரும் விரும்புவரென்றது.* 10

---



## 5 - ம் அதிகாரம்.
## வினைசெயல்வகை.

*வினைசெயல்வகையாவது வினைசெய்யுமாறு கூறுதல். மேல் வினை செய்யுங்கால் திண்ணியராக வேண்டுமென்று கூறினார் திண்ணியார் வினைசெய்யும் வண்ணம் கூறுகின்றாராதலின், அதன்பின் இது கூறப்பட்டது*

671. பொருள்கருவி காலம் வினையிடனோ டைந்து
675 மிருடீர வெண்ணிச் செயல்.

(இ - ள்) *பொருளும், கருவியும், காலமும், வினையும், வினைசெய்யும் இடமுமென்னும் ஐந்தினையும் மயக்கந்தீர எண்ணி, பின்பு வினைசெயத் தொடங்குக,* (எ - று).

*இவற்றுள், ஒவ்வொன்றும் இரண்டு இரண்டு வகைப்படும்:*— (1) *பொருளாவது கெடும்பொருளும் பெறும் பொருளும்;* (2) *கருவியாவது தனதுஉள்ளபடையும் மாற்றரசரது உள்ளபடையும்;* (2) *காலமாவது தனக்காங்காலமும் மாற்றரசர்க்காங்காலமும்;* (4) *வினையாவது தான்செய்யும் வினையும் பகைவர் செய்யும் வினையும்;* (5) *இடமாவது தனக்கா மிடமும் பகைவர்க்கா மிடமும் ஆம். இவை செய்யும் வினைக்கு முற்படவேண்டுதலின், முற்கூறப்பட்டன.* 1

672. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
676 படுபயனும் பார்த்துச் செயல்.

(இ - ள்.) வினை தொடங்குங்கால் அது முடியுமளவும், அதற்குவரும் இடையூறும், முடிந்தால் உண்டாகும் பெரும் பயனும் முன்பே கண்டு, பின்பு வினைசெய்க, (எ - று). 2

673. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
677 யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(இ - ள்.) செய்யத்தகும் வினையைச் செய்யுமவன் செய்யும் முறைமையாவது அவ்வினையினது உளப்பாடு அறிவானது உள்ளத்தைக் கூட்டிக்கோடல்.

674. வினையால் வினையாக்கிக் கோட னனைகவுள்
678 யானையால் யானையாத் தற்று.

(இ - ள்.) ஒரு வினையால் பிறிதொரு வினையைச் செய்து கொள்வது, ஒரு மதயானையால் பிறிதொரு மதயானையைப் பிணித்தாற்போலும், (எ-று).

இது தமக்கு ஒரு பகைவர் தோன்றினால் அவர்க்குப் பகையாயினாரை அவரோடு பகைக்குமாறு பண்ணுவாராயின் பகையாய் வருவாரில்லை யென்றது. 4

675. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
671 தாழ்ச்சியிற் றங்குத றீது.



(இ - ள்.) சூழ்ச்சிக்கு எல்லை துணிவு பெறுதல்; அவ்வாறு துணிந்த வினை நீட்டித்தலின்கண்ணே கிடக்குமாயின், அது தீதாம், (எ - று).

இது வினைசெயத் துணிந்த காலத்து நீட்டிக்குமாயின், அதனையறிந்து பகைவர் தம்மைக் காப்பார்; ஆதலால், நீட்டியாது விரைந்து வினை செய்யவேண்டுமென்றது. 5

676. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
672 தூங்காது செய்யும் வினை.

(இ - ள்.) தாழ்த்துச் செய்யவேண்டும் வினையைத் தாழ்த்துச் செய்க; தாழாமற் செய்யவேண்டும் வினையைத் தாழாமற் செய்க, (எ - று).. 6

677. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்காற்
674 றீயெச்சம் போலத் தெறும்.

(இ - ள்.) வினையும் பகைமையு மென்னும் இரண்டினது ஒழிபு, விசாரிக்குங்காலத்து, தீயின் ஒழிவுபோலக் கெடுக்கும், (எ - று).

எச்சம் - சேஷம். இது வினைசெய்யுங்கால் சிறி தொழியச் செய்தோமென்று விடலாகாதென்றது. 7

678. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற்
673 செல்லும்வாய் நோக்கிச் செயல்.

(இ-ள்.) இயலும் இடமெல்லாம் வினைசெய்தல் நன்று; இயலாத காலத்து அதனை வினைந்திருந்து. இயலும் இடம் பார்த்துச் செய்க, (எ - று).

இது வினைசெய்து முடிந்ததில்லை யென்று இகழாது பின்பு காலம் பார்த்துச் செய்கவென்றது. 8

679. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
680 கோள்வர் பெரியார்ப் பணிந்து.

(இ - ள்.) உறையும் இடம் சிறியார் தமது இடம் நடுங்குதற்கு அஞ்சித் தமது குறைதீரப் பெறின், தம்மின்பெரியாரைத்தாழ்ந்து, நட்பாகக் கொள்வர்.()

இது சிறையானல் இவ்வாறு செய்தல் வேண்டுமென்றது. 9

680. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
679 யொட்டாரை யொட்டிக் கோளல்.

(இ - ள்.) தஞ் சுற்றத்திற்கு நல்லவை செய்தலினும், பகைவரைப் பொருந்தி நட்பாகக் கொள்ளுதலே விரைந்து செய்யவேண்டும், (எ - று).

இஃது அரசர்க்கும் ஒக்கக் கொள்ளவேண்டு மாயினும், அமைச்சர்தம் தொழிலாக ஈண்டுக் கூறப்பட்டது. 10

---



## 6 - ம் அதிகாரம்.

### தூது.

தூதாவது மாற்றரசர்மாட்டுச் சந்து செய்யும் அமாத்திய ரிலக்கணங் கூறுதல். இனிப் பகைவர்மாட்டு அமாத்தியர் செய்யுந் திறங் கூறுகின்றாராதலின்,

அதன்பின் இது கூறப்பட்டது.

681. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(இ - ள்.) அரசன்மாட்டு அன்புடைமையும், அமைந்த குடியின்கண்பிறந்தலும், வேந்தனால் விரும்பப்படும் குணமுடைமையும், தூதாகிச் சென்று சொல்லுமவனது இயல்பாம், (எ - று).

வேந்தனால் விரும்பப்படும் குணமுடைமையாவது அவன் விரும்புவனவற்றைத் தான் விரும்பாமை. 1

682. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(இ - ள்.) தூய்மையுடைமையும், சுற்றமுடைமையும், ஒரு பொருளை யாராய்ந்து துணிதலுடைமையும், இம் மூன்றின்கண்ணும் மெய்யுடைமையும் தூதற்கு இயல்பாம், (எ - று).

தூய்மை - மெய்யும் மனமும் தூயனாதல். 2

683. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலார்முன்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(இ - ள்.) எல்லா நூல்களையும் கற்றார்முன்னர் அந்நூல்களைத் தானுஞ் சொல்ல வல்லவனாதல், வேலுடையார் முன்னின்று தன்னரசனுக்கு வெற்றியாகிய வினையைச் சொல்லுமவனது இயல்பாம், (எ - று). 3

684. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றின்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(இ-ள்.) அறிவும், வடிவும், தெரிந்த கல்வியுமாகிய இம் மூன்றினது அடக்கமுடையவன் வினைக்குச் செல்க, (எ - று).

அறிவு - இயற்கையறிவு. 4

685. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பாற்
கின்றி யமையாத மூன்று.

(இ - ள்.) அன்புடைமையும், அறிவுடைமையும், தெரிந்த சொல்வன்மையுடைமையும், தூதுரைப்பாற்கு இன்றியமையாத மூன்று குணங்களாம், (எ - று)
இத்துணையும் தூதரிலக்கணம் கூறியவாறு. 5

686. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
689 வாய்சோரா வன்க ணவன்.

(இ - ள்.) *தன்னரசன் சொல்லிவிட்ட மாற்றத்தைப் பகை யரசர்க்குச் சொல்லுமவன், தன்னரசனுக்கு வடுவாகுஞ் சொற்களை மறந்துஞ் சொல்லாத அஞ்சாமையையுடைய தூதனுவான்*, (எ - று). 6

687. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
685 நன்றி பயப்பதாந் தூது.

(இ - ள்.) *சுருக்கச்சொல்லி, விரும்பாத சொற்களை நீக்கி, மகிழுமாறு சொல்லி, தன்னரசனுக்கு நன்மையைத் தருமவன் தூதனுவான்*. (எ - று).
*இது சொல்லுமாறு கூறிற்று.* 7

688. கற்றுக்கண் ணஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
681 றக்க தறிவதாந் தூது.

(இ - ள்.) *தன்னரசன் சொன்ன மாற்றத்தைச் சொல்லுங்கால் பகையரசன் வெகுண்டானுயின் அது மாற்றுதற்காம் உபாயத்தைக் கற்று, எவ்விடத்திலும் அஞ்சுதலின்றி, மகிழ்ச்சி வருமாறு இசையச்சொல்லி, காலோடே கூடச்செய்யத் தகுவன் அறிந்து சொல்ல வல்லவன் தூதனுவான்*, (எ - று). 8

689. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
[illegible] தெண்ணி யுரைப்பான் றலை.

(இ - ள்.) *காரியம் நின்ற முறைமையை யறிந்து, காலத்தையும் நினைத்து, இடமும் அறிந்து, தானேயெண்ணிச் சொல்லவல்லவன் தலையான தூதனுவான்.*
*இது தலையான தூதரிலக்கணம் கூறிற்று.* 9

690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
690 குறுதி பயப்பதாந் தூது.

(இ - ள்.) *தனக்கு இறுதி வருமாயினும், ஒழியாது தன்னிறைவற்கு நன்மையைத் தருவது தூதாவது*, (எ - று). 10

## 7 - ம் அதிகாரம்.

## மன்னரைச்சேர்ந்தொழுகல்.

மன்னரைச் சேர்ந்தொழுகலாவது அரசர்மாட்டு அமாத்தியர் ஒழுகுந்திறங் கூறுதல். இது முதலாக அவையஞ்சாமை ஈறாகக் கூறுகின்றவை தம்மரசர் மாட்டு வேண்டுமெனினும், மாற்றரசர்மாட்டும் வேண்டுதல் இன்றியமையாத சிறப்புடைத்தாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.



691. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
696 வேண்டுப வேட்பச் சொலல்.

(இ - ள்.) அரசன் குறிப்பறிந்து, காலம் பார்த்து, வெறுப்பில்லாதன வாய், சொல்ல வேண்டுவனவற்றை விரும்புமாறு சொல்க, (எ - று).

இது சொல்லுந் திறம் கூறிற்று. 1

692. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
697 கேட்பினுஞ் சொல்லா விடல்.

(இ - ள்.) எப்போதும் வேந்தனால் விரும்பப்படுவனவற்றைச் சொல்லி, தமக்குப் பயன்படாதனவற்றைக் கேட்டாலும் சொல்லாது விடுக, (எ - று).

சொல்லாது விடலாவது தூதனை அரசர்க்குப்படை எவ்வளவு உண்டென்று பகையரசன் வினவினால், நீ அறியாததொன்றோ வென்று அளவு கூறாமை. 2

693. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
694 வான்ற பெரியா ரகத்து.

(இ - ள்.) அமைந்த பெரியாரிடத்து ஒருவன் செவியுட் சொல்லுதலும், ஒருவன் முகம்பார்த்துத் தம்மில் நகுதலும், தவிர்த்தொழுகல் வேண்டும், (எ-று).

இது கூற்றும் நகையும் ஆகாவென்றது. 3

694. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
695 விட்டக்கால் கேட்க மறை.

(இ - ள்.) யாதொரு பொருளையும் செவிகொடுத்து ஓராது, தொடர்ந்து கேளாது, அப்பொருளை மறைத்தல் தவிர்ந்தால் பின்பு கேட்க, (எ - று).

இது கேட்டல் விருப்பமும் குற்ற மென்றது. 4

695. மன்னர் விழைப விழையாமை மன்னரான்
692 மன்னிய வாக்கந் தரும்.

(இ - ள்.) எல்லார்க்கும் பொதுவாகக் கருதப்பட்டவையன்றி, மன்னரால்

விரும்பப்பட்டவையிற்றை விரும்பாதொழிக; அவ்விரும்பாமை, அம்மன்னராலே நிலையுள்ள செல்வத்தைத் தருமாதலான், (எ - று).

அவை நுகர்வனவும் ஒப்பனை முதலாயினவுமாம். இஃது அவற்றைத் தவிர்தல் வேண்டுமென்றது. 5

696. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
693 றேற்றுதல் யார்க்கு மரிது.



(இ - ள்.) காப்பின், காத்தற்கு அரியனவற்றைக் காப்பாற்றுக; ஐயப்பட்ட பின்பு தெளிவித்தல் யாவர்க்கும் அரிது, (எ - று).

இஃது அடுத்தொன்று சொல்லாமை வொழுகவேண்டுமென்றது. 6

697. அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
691 விகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(இ-ள்.) மாறுபாடுடைய வேந்தரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர், அவரை அகலுவதுஞ் செய்யாது அணுகுவதுஞ் செய்யாது தீக்காய்வார்போல இருக்க. ()

இது சேர்ந்தொழுகுந் திறங்கூறிற்று. 7

698. கோளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
699 துளக்கற்ற காட்சி யவர்.

(இ - ள்.) யாம் அரசனாலே கைக்கொள்ளப்பட்டோ மென்றுநினைந்து, அவன் நெஞ்சிற் கொள்ளாதன செய்யார், அசைவற்ற தெளிவுடையார், (எ - று).

இஃது அரசன் நெஞ்சிற்குப் பொருந்தினவை செய்ய வேண்டுமென்றது. 8

699. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
700 கெழுதகைமை கேடு தரும்.

(இ - ள்.) யாம் பழைமையுடையோ மென்றுகருதி, இயல்பல்லாதனவற்றைச் செய்யும் நட்பின்தகைமை, தமக்குக் கேட்டைத்தரும், (எ - று).

இது பின் பகையாவனவற்றைத் தவிரல் வேண்டுமென்றது. 9

700. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
698 வொளியோ டொழுகப் படும்.

(இ - ள்.) இவர் நமக்கு இளையரென்றும் இத் தன்மையாகிய முறையரென்றும் இகழாது, அவர் பெற்றுநின்ற தலைமையோடே பொருந்த ஒழுக

## 8 - ம் அதிகாரம்.

## குறிப்பறிதல்.

*குறிப்பறிதலாவது அரசர் உள்ளக் கருத்தை அமைச்சர் அறிதல். இஃது அமைச்சியலாதலின் அமைச்சர் குறிப்பறிதல் கூறிய தென்னையெனின், குறிப்பறிதல் அரசர்க்கும் வேண்டுமாதலின், இறந்தது காத்தலென்னுந் தந்திரயுத்தியாற் கூறப்பட்டதென்க. இது பெரும்பான்மையும் அரசர்க்கும் வேண்டுமாதலின், மன்னரைச் சேர்ந்தொழுகலின் பின் கூறப்பட்டது.*

18



701. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ வுவப்பினுங்
707 காயினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) *முகம்போல முதிர்ந்த அறிவுடையது பிறிதுண்டோ? ஒருவனை உவப்பினும் வெறுப்பினும் தான் முற்பட்டுக் காட்டும்,* (எ - று).

*குறிப்பறியுமாறு என்னை யென்றார்க்கு, இது முகம் அறிவிக்குமென்றது.* 1

702. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
706 கடுத்தது காட்டு முகம்.

(இ - ள்.) *தன்னையடுத்த வண்ணத்தைக் காட்டுகின்ற பளிங்கைப்போல, நெஞ்சத்து மிக்கதனை முகம் காட்டும்,* (எ - று).

*இது முகம் நெஞ்சத்து வெருட்சி யுண்டாயின் கருகியும், மகிழ்ச்சியுண்டாயின் மலர்ந்தும், காட்டுமென்றது.* 2

703. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்காற்
710 கண்ணல்ல தில்லை பிற.

(இ - ள்.) *யாம் நுண்ணிய அறிவையுடையே மென்றிருக்கும் அமைச்சர் பிறரை அளக்குங் கோலாவது ஆராயுமிடத்து, அவர் கண்ணல்லது பிற இல்லை.* ()

704. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
709 வகைமை யுணர்வார்ப் பெறின்.

(இ - ள்.) ஒருவனுடைய பகைமையையும் நட்பையும் கண்கள் சொல் லும்; கண்ணினது வேறுபாட்டை யறிவாரைப் பெறின், (எ - று).
இது கண் கண்டு குறிப்பறிதல் நண்ணியார்க்கல்லது பிறர்க்கரிதென்றது.

705. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
705 ளென்ன பயத்தவோ கண்.

(இ - ள்.) ஒருவன் முகக்குறிப்பினானே அவனவன் மனக்குறிப்பை யறிய மாட்டாவாயின், தன்னுறுப்புக்களுடன் கண்கள்மற்றென்னபயனைத் தருமோ? ()
இது குறிப்பறியாதார் குருடரோடு ஒப்பா ரென்றது. 5

706. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
704 யுறுப்போ ரனையரால் வேறு.

(இ - ள்.) நினைத்ததனைச் சொல்லாமைக் கொள்ளவல்லாரோடு மற்றை யார் உறுப்பால் ஒருதன்மையர் அல்லது அறிவினான் வேற்றுமை யுடையர். ()
இது குறிப்பறியாதார் அறிவில்லாதார் என்றது. 6

707. கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
701 மாறாநீர் வையக் கணி.



(இ - ள்.) அரசன் மனநிகழ்ச்சியை அவன் கூறுவதன்முன்னே நோக்கி அறியுமவன், எல்லாநாளும் மாறாநீர் சூழ்ந்த வையத்துக்கு அணிகலனாவன். ()
இது மக்களிற் சிறப்புடையனா மென்றது. 7

708. ஐயப் படாஅ தகத்த துணர்வாரைத்
702 தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(இ - ள்.) பிறர் நினைத்ததனை ஐயப்படுதலின்றித் துணிந்து அறியவல் லாரை, தேவரோடு ஒப்பக் கொள்க, (எ - று). 8

709. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
708 யுற்ற துணர்வார்ப் பெறின்.
(இ - ள்.) முகத்தை நோக்கி நிற்க, அமையும்; தன் மனத்தை நோக்கி அறி யலுற்றதனை அறியவல்லாரைப் பெறின், (எ - று).
இஃது அமாத்தியர் குறிப்பை அரசனும் அறியவேண்டுமென்றது. 9

710. குறிப்பிற் குறிப்புணர் வாரை யுறுப்பினுள்

703 யாதுங் கொடுத்துக் கொளல்.

(இ - ள்.) முகக் குறிப்பினாலே உள்ளக்கருத்தை அறியுமவர்களை, உறுப்பினுள் அவர் வேண்டுவது யாதொன்றாயினும் கொடுத்து, துணையாகக் கூட்டிக் கொள்க, (எ - று).

உறுப்பினுள்ளென்பதற்குத் தனக்கு அங்கமாயினவற்றுள் எனவும் அமையும்.

## 9- ம் அதிகாரம்.

## அவையறிதல்.

அவை யறிதலாவது இருந்த அவை யறிந்து அதற்குத் தக்க சொல்லுதல். அரசன் குறிப்பறிந்தாலும் அவையறிந்து சொல்லவேண்டு மாதலின், அதன் பின் இது கூறப்பட்டது.

711. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
711 றொகையறிந்த தூய்மை யவர்.

(இ-ள்.) இருந்த அவை யறிந்தாரை யறிந்து, அதற்குத்தக்க சொல்லின் திறத்தை ஆராய்ந்து, சொல்லுக; சொல்லின் தொகுதியை யறிந்த தூய்மையை யுடையவர், (எ - று).

தொகையறிதல் - திறனறிதல். இது அவையறிந்து சொல்லல்வேண்டு மென்றது. 1



712. ஒளியார்முன் ஞொள்ளிய ராதல் வெளியார்முன்
714 வான்சுதை வண்ணங் கொளல்.

(இ - ள்.) ஒள்ளிய அறிவுடையார் முன்பு தாமும் ஒள்ளிய அறிவுடையாராயிருத்தலும். வெள்ளிய அறிவுடையார் முன்பு வாலிய சுதை வண்ணம் போன்ற வெண்மையைக் கொண்டிருத்தலும், அவை யறிதலாவது, (எ - று). 2

713. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின்
712 நடைதெரிந்த நன்மை யவர்.

(இ -ள்.) சொன்னால் அதற்கு வருங்குற்றத்தை ஆராய்ந்து, நன்மையாவற்றை யறிந்து, சொல்லுக; சொல்லினது வழக்காராய்ந்த நன்மையுடையார்.()

இஃது ஆராய்ந்து சொல்லுமாறு கூறிற்று. 3

714. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
716 மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(இ-ள்) ஒரு நெறியின்கண் நின்றார் அந்நிலைமை குலைந்தாற்போல இகழப்படுமெ, அகன்றகல்வியைக் கேட்டறியவல்லார் முன்னர்த் தப்புதல், (எ-று).

இது தப்புதல் வாராமற் சொல்லவேண்டுமென்றது. 4

715. நன்றென் றவற்றுள்ளு நன்றே முதுவருண்
715 முந்து கிளவாச் செறிவு.

(இ-ள்.) நன்றென்று சொல்லப்பட்ட எல்லாவற்றுள்ளும் மிக நன்று, தம்மின் முதிர்ந்தார்முன் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம். ()

முதுவர் - தவத்தாலும் குலத்தாலும் கல்வியாலும் பிறவாற்றாலும் முதிர்ந்தார். இஃது இருந்த அவையின்கண் முந்துற்றுச் சொல்லல் ஆகாதென்றது. 5

716. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
717 சொற்றெரிய வல்லா ரகத்து.

(இ-ள்.) நூல்களைக்கற்று, அதன்பயனும் அறிந்துள்ளாரது கல்வி விளங்காநிற்கும்; குற்றமறச் சொற்களைச் சொல்லவல்லார்முன்னர்ச் சொல்லின், (எ-று).

இது கல்வியின் விழுப்பம் கற்றார்க்கல்லது பிறர்க்கு அறிதலரிதென்றது. 6

717. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
718 பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(இ-ள்.) யாதாயினும் ஒன்றைச் சொல்லுங்கால், அதனைத் தெரிந்தறியும் அறிவுடையார்முன்பு சொல்லுவது, வளர்வதொன்று நின்ற பாத்தியின்கண்ணே நீர் சொரிந்தாற்போலும், (எ-று). 7

718. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையு
719 ணன்கு செலச்சொல்லு வார்.

அமைச்சியல் - **10** - வது அவையஞ்சாமை. 141

(இ-ள்.) புல்லியவரிருந்த அவையின்கண் மறந்துஞ் சொல்லாதொழிக; நல்லவரிருந்த அவையின்கண் நல்லதனை இசையச் சொல்லவல்லார், (எ-று). 8

719. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
720 ரல்லார்முற் கோட்டி கொளல்.

(இ-ள்.) அங்கணத்தின்கண் உக்க அமுதம் போல இகழப்படுவர்; தம்

முடைய இனத்தாரல்லாதார் முன்னர் ஒன்றைச் சொல்லுவாராயின், (எ - று).

கல்வியுடையார் புல்லவையுள் சொன்னால் உண்டாகுங் குற்றமென்னை யென்றார்க்கு, இது இகழப்படுமென்று கூறிற்று. 9

720. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்லின்
7/3 வகையறியார் வல்லதூஉ மில்.

(இ - ள்.) அவையினது அளவை அறியாது ஒன்றைச் சொல்லுதலை மேற்கொள்பவர், சொல்லின் வகையும் அறியார்; அவ்வாறன்றி வேறு வல்லதூஉம் இலராவார், (எ - று). 10

## 10 - ம் அதிகாரம்.

## அவையஞ்சாமை.

அவையஞ்சாமையாவது அவையின்கண் அஞ்சாமற் சொல்லுதல் அஞ்சாது சொல்லுதல்வேண்டுமாதலின், அதன்பின் கூறப்பட்டது.

721. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய
723 ரவையகத் தஞ்சா தவர்.

(இ - ள்.) பகையின்கண் அஞ்சாது நின்று சாவார் பெறுதற்கு எளியர்; அவையின்கண் அஞ்சாது சொல்லவல்லவர் அறிதற்கு அரியர், (எ - று).

இஃது அவையஞ்சாமை அரிதென்றது. 1

722. கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
724 மிக்காருண் மிக்க கொளல்.

(இ - ள்.) தாம் கற்றதனைக் கற்றவர்முன்பு இசையச் சொல்லி, தாம் கற்றதினும் மிகக்கற்றார்மாட்டு அவர் மிகுதியாகக் கூறும்பொருளைக் கேட்டுக்கொள்ளுதல் அவையஞ்சாமையாவது, (எ - று). 2

723. கற்றருட் கற்ற ரெனப்படுவர் கற்றார்முற்
722 கற்ற செலச்சொல்லு வார்.

(இ - ள்.) கற்றசெல்வாரினும் கற்றாரென்று சொல்லப்படுவார்; தாம் கற்றதனைக் கற்றார்முன்பு அவர்க்கு ஏற்கச் சொல்லவல்லார், (எ - று),

இது கற்றாரென்பார் அவையஞ்சாதார் என்று கூறிற்று. 3

724. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
728 ணன்கு செலச்சொல்லா தார்.

(இ - ள்.) பலநூல்களைக் கற்றாலும் ஒருபயனில்லாதவரே; நல்லவையின் கண் நன்றாக அவர்க்கு ஏற்கச் சொல்லமாட்டாதார், (எ - று).

இஃது அவையஞ்சுவார் கற்றகல்வி பிறர்க்குப் பயன்படாதென்றது. 4

725. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
726 னுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(இ - ள்.) வன்கண்ணரல்லாதவர்க்கு வாளினாற் பயனென்னை? அதுபோல, நுண்ணிய அவையின்கண் அஞ்சுவார்க்கு நூலினாற்பயனென்னை? (எ - று).

இது பிறர்க்குப் பயன் படாமையேயன்றித் தமக்கும் பயன்படாரென்றது.

726. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
727 தஞ்சு மவன்கற்ற நூல்.

(இ - ள்.) பகையின்கண் அஞ்சுமவன் பிடித்த கூர்வாள் போலும்; அவையின்கண் அஞ்சுமவன் கற்றநூலும், (எ - று).

மேல் பயனில்லை யென்றார் இங்குப் பயனில்லாதவாறு காட்டினார். 6

727. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
729 நல்லா ரவையஞ்சு வார்.

(இ - ள்.) கல்லாதவரினும் கடையரென்று சொல்லப்படுவர்; உலகநூல் கற்றறிந்துவைத்துப், நல்லாரிருந்த அவையின்கண் சொல்லுதலஞ்சுவார். ()

இது கல்லாதவரினும் இகழப்படுவரென்றது. 7

728. உளரேனினு மில்லாரோ டொப்பர் களனஞ்சிக்
730 கற்ற செலச்சொல்லா தார்.

(இ - ள்.) உளராயினும் செத்தாரோடு ஒப்பார்; அவைக்களத்தை யஞ்சித் தாம் கற்றதனை அதற்கு இசையச் சொல்லமாட்டாதார், (எ - று).

இது செத்தாரோடு ஒப்பரென்றது. இவை ஐந்தும் அவையஞ்சுதலான் வருங்குற்றம் கூறின. 8

729, ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
725 மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(இ - ள்.) அவையஞ்சாது மறுமாற்றம் சொல்லுதற்காக, நெறிமையானே நூல்களை அளவறிந்து கற்க வேண்டும், (எ - று).

நூல் கற்றலாவது (1) மெய்யாராய்ச்சியாகிய நூலைக்கற்றலும், (2) வேதமும் ஆகமமும் கற்றலும், (3) உழவும் வாணிகமும் கற்றலும், (4) படைவழங்கல் மறுநீதி முதலியன கற்றலுமென நான்கு வகைப்படும். 9



730. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
721 றொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) தப்பினால் வருங் குற்றவகையை யறிந்து, கற்றுவல்ல அவையின்கண் அஞ்சுதலால் சோர்வுபடச் சொல்லார், சொற்களின் தொகுதியை யறிந்த தூய்மையுடையவர், (எ - று).

இது மேற்கூறிய வாற்றால் கற்றவர் தப்பச் சொல்லாரென்று அக்கல்வியால் வரும் பயன் கூறிற்று. 10

அமைச்சியல் முற்றிற்று.

---

## 3. பொருளியல். (5)

### 1 - ம் அதிகாரம்.

### நாடு.

பொருளின்பகுதி: அது கூறிய அதிகாரம் ஐந்தினும் முற்படப் பொருளாக்குதற்கு இடமாகிய நாட்டியல்பு ஓரதிகாரத்தானும், அந்நாட்டிற்கு ஏமமாகிய அரணியல்பு ஓரதிகாரத்தானும், அவ்விடத்தி லாக்கும் பொருள் ஓரதிகாரத்தானும், அப்பொருளினா லாக்கும் படையின் நன்மை ஓரதிகாரத்தானும், அப்படையின் நன்மையா லாக்கும் படைச்செருக்கு ஓரதிகாரத்தானும் கூறப்படும். இஃது அமைச்சராற் செய்யப்படுதலின், அதன்பின் கூறப்பட்டது.

அவற்றுள், நாடாவது நாட்டிலக்கணங் கூறுதல்.

731. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
737 வல்லரணு நாட்டிற் குறுப்பு.

(இ - ள்.) மேல்நீர் கீழ்நீர் சிறந்தலாமிடத்தினைக் கிணறுகல்லி நீருண்டாக்குமிடத்தினையும், பயன்படு மலையினையும், ஆறொழுகுமிடத்தினையும், வலிய அரணாகும் இடத்தினையும் கண்டு, அவ்விடத்தை நாடாக்குக; அவை நாட்டிற்கு உறுப்பாதலால், (எ - று).

இஃது இவை ஐந்துங் குறையாமல் வேண்டுமென்றது. 1

732. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம
738 மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

(இ - ள்.) நோயின்மையும், செல்வமுடைமையும், விளைவுடைமையும், இன்பமுடைமையும், காவலுடைமையு மென்று சொல்லப்பட்ட இவையைந்தும் நாட்டிற்கு அழகென்று சொல்லுவர், (எ - று). 2



733. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
739 நாட வளந்தரு நாடு.

(இ - ள்.) தேடவேண்டாத வளத்தினை யுடைய நாட்டை நாடென்று சொல்லுவர்; தேடினால் வளந்தருகின்ற நாட்டை நாடல்ல வென்று சொல்லுவர்.

734. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலாச்
731 செல்வருஞ் சேர்வது நாடு.

(இ - ள்.) தப்பாமல் விளையும் நிலங்களும், தகுதி யுடையாரும், தாழ்விலாத செல்வரும் சேர்வது நாடு, (எ - று).

தள்ளா விளையுள் - மழையில்லாத காலத்தினும் சாவிபோகாத நிலம். 4

735. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
734 சேரா தியல்வது நாடு.

(இ - ள்.) மிகுந்த பசியும், இடையறாத பிணியும், ஒறுக்கும் பகையும், சேராது இயல்வது நாடு, (எ - று).

இது சேர்த லாகாதன கூறிற்று. 5

736. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்குங்
735 கொல்குறும்பு மில்லது நாடு.

(இ - ள்.) பலவாய்த் திரளுந் திரட்சியும், பாழ்செய்யும் உட்பகையும்,

*வேந்தனை யலைக்கின்ற கொலைத் தொழிலினையுடைய குறும்பரும், இல்லாதது நாடு, (எ - று)* 6

737. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

(இ - ள்.) *பெரும்பொருளாலே விரும்பத்தக்கதாகி, கேடறியாததோடே மிகவும் விளைவது நாடு, (எ - று).*

*பெரும்பொருள் - செல்வம். கேடாவது விட்டில், கிளி, நால்வாய், பெரும புயலென் றிவற்றான் வரும் கட்டம்.* 7

738. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

(இ - ள்) *கெடுதலை யறியாதாய், கெட்டதாயினும் பயன்குன்றாத நாட்டினை எல்லா நாடுகளினும் தலையான நாடென்று சொல்லுவர், (எ - று).*

*இது மேற்கூறிய விட்டில் முதலாயினவற்றால் நாடு கெட்டதாயினும், பின்பும் ஒருவழியால் பயன்படுதல் கூறிற்று.* 8



739. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறைவற்
கிறையொருங்கு நேர்வது நாடு.

(இ - ள்.) *குடிமை செய்தால், ஒரு காலத்திலே பல குற்றம் தன்னிடத்து வரினும் அதனைப் பொறுத்து, நிச்சயித்த கடமையை அரசனுக்கு ஒருங்கு கொடுக்கவல்லது நாடு, (எ - று).*

*குடிமையாவது கடமையொழிய வருவது.* 9

740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(இ - ள்.) *மேற்கூறியவாற்றால் எல்லாம் அமைந்ததாயினும், பயனில்லையாம்; வேந்தனது அமைதியை உடைத்தல்லாத நாடு, (எ - று).*

*இது நாட்டுக்கு அரசனும் பண்புடையனாகல் வேண்டுமென்றது.* 10

---

**2** - ம் அதிகாரம்.

## *அரண்.*

அரணாவது அரணிலக்கணங் கூறுதல். மேல் நாட்டிலக்கணங்கூறினார் நகர் இலக்கணங் கூறுகின்றாராதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
741 போற்று பவர்க்கும் பொருள்.

(இ - ள்.) வலியுடையார்க்கும் அரணுடைமை பொருளாவது; பகைவர்க்கு அஞ்சித் தன்னைக் காப்பார்க்கும் அரணுடைமை பொருளாவதாம்; ஆதலால், அதனைச் செய்யவேண்டும், (எ - று). 1

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
742 காடு முடைய தரண்.

(இ - ள்.) தெளிந்த நீராயினும், நிழலும் நீருமிலாத வெறு நிலமாயினும், மலையாயினும், அழகிய நிழலினையுடைய காடாயினும் உடையது அரணாம்,(எ-று).

தெளிந்தநீர் - பெருநீர்; இது கலங்காதாதலின். அணி நிழற்காடு என்றதனாலே, செறிவுடைய காடென்று கொள்ளப்படும். 2

743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
74? னமைவர ணென்றுரைக்கு நூல்.





(இ-ள்.) உயர்ச்சியும், அகலமும், திண்மையும், கிட்டுதற்கு அருமையுமென்னும் இந்நான்கினது அமைதியுடையது மதிலாமென்று சொல்லுவர் நூலோர். ()

திண்மையென்பது கல்லும் இட்டிகையும் இட்டுச் செய்தல. 3

744. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
749 வீறெய்தி மாண்ட தரண்.

(இ - ள்.) முகதுற்ற முகத்தினையுடைய பகைவர் கெடும்படியாக, வினை செய்யும் இடத்து வெற்றியெய்தி மாட்சிமைப்பட்டது அரணாவது, (எ - று).

அஃதாவது அட்டாலகமும் மதிற்பொறியும் முதலாயின மதிற்றலையில் அமைத்தல். 4

745. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
744 யூக்க மழிப்ப தரண்.

(இ - ள்.) காக்கவேண்டும் இடம் சிறிதாய், மதிலகலம் பெரியஇடத்தை

யுடைத்தாய், மதிலேயுற்ற பகைவராது மிகுதியைக கெடுப்பது அரணவது,(எ-று).

சிறகாவலாவது ஒருபக்கம் மலையாயினும நீராயினும் உடைத்தாதல். 5

746. கோளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
745 நிலைக்கெளிதா நீர தரண்.

(இ - ள்.) பகைவரால் கொள்ளுதற்கு அரிதாய், தன்னகத்தே அமைக்கப்பட்ட உணவையும் உடைத்தாய், அகத்துறைவார்க்கு நிற்றற்கு எளிதாகும் நீரை யுடைத்தாயிருப்பது அரணவது. (எ - று).

எனவே, புறத்தார்க்கு நிற்றற்கரிதாகும் நீரையுடைத்தாதலும் வேண்டு மென்றவாறாயிற்று; தூரத்தில் நீரைப் பிறரறியாமல் உள்ளே புகுதவிடுதலும் வேண்டும் என்பதாம். 6

747. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவும்
746 நல்லா ளுடைய தரண்.

(இ - ள்.) எல்லாப்பொருள்களையும் உடைத்தாய், உற்றவிடத்து உதவவல்ல வீரரையுடையது அரண், (எ - று).

எல்லாப்பொருளுமாவன - நுகரவேண்டுவனவும் படைக்கலங்களும். 7

748. முற்றியு முற்று தெறிந்து மறைப்படுத்தும்
747 பற்றற் கரிய தரண்.

(இ - ள்.) சூழவிட்டும், சூழவிடாதே ஒருபக்கமாகப் போர்செய்தும், அரணிலுள்ளாரைக் கீழறுத்தும் இம்மூன்றினாலும் கொள்ளுதற்கு அரியது அரணவது, (எ - று). 8

பொருளியல் - 3 - வது பொருள் செயல்வகை. 147

749. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
750 யில்லார்க ணில்லை யரண்.

(இ - ள்.) சொல்லப்பட்ட எல்லா மாட்சிமையும் உடைத்தாயினும், வினையின்கண் மாட்சிமை இல்லாதார்மாட்டு அரணாற் பயனில்லை, (எ - று).

இது வினைவல்லாரும் வேண்டு மென்றது. 9

750. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
748 பற்றியார் வெல்வ தரண்.

(இ - ள்.) சூழவல்லாரைச் சூழ்ந்து, நலிந்தவரையும் தன்னகத்து நின்று காக்கவல்லவராய்க் காப்பவர் வெல்வது அரணவது, (எ - று)

பற்றுற்றுதல் - தாம் பற்றின இடம் விடாது வெல்லுதல். 10

---

## 3 - ம் அதிகாரம்.

## பொருள் செயல்வகை.

*பொருள் செயல் வகையாவது பொருள்தேடுமாறும் அதனாற்பயன்கொள்ளு மாறும் கூறுதல். இது மேற்கூறிய நாடும் நகரமுமுடையார்க்கு உளதாவதொன்றாதலின், அதன்பின் கூறப்பட்டது.*

751. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
759 மெஃகதனிற் கூரிய தில்.

(இ - ள்.) *பொருளையுண்டாக்குக; பகைவரது பெருமிதத்தை யறுக்கலாங் கருவி, அப்பொருள்போலக் கூரியது பிறிது இல்லை, (எ - று).* 1
*இது பொருளீட்டல் வேண்டுமென்றது.*

752. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
755 புல்லார் புரள விடல்.

(இ - ள்.) *அருளுடைமையோடும் அன்புடைமையோடும் வாராத பொருளால் வரும் ஆக்கத்தை பொருந்தாது போக விடுக. (எ - று).*
*இது பொருள் தேடுங்கால் பிறர் வருத்தத்திற்கு உபகரியாதும், பயின்றார்மாட்டுக் காதலில்லாமலும், பொருள் தேடுதலைத் தவிர்கவென்றது.* 2

753. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
754 தீதின்றி வந்த பொருள்.



(இ - ள்.) *அறத்தையும் தரும்; இன்பத்தையும் தரும்; பொருள் வருந் திறமறிந்து, பிறர்க்குத் தீமை பயத்தலின்றி வந்த பொருள், (எ - று).*
*இது பொருளால் கொள்ளும் பயன் அறஞ்செய்தலும் இன்பம் நுகர்தலும் அன்றே; அவ்விரண்டினையும் பயப்பது நியாயமாகத் தேடிய பொருளாமாதலின் என்றது.* 3

754. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்
756 தெறுபொருளும் வேந்தன் பொருள்.

(இ - ள்.) *தானே வந்துற்ற பொருளும், ஆயத்தால் வரும்பொருளும், தன் பகைவரை யடர்த்துக்கொண்ட பொருளும், அரசனுக்குப் பொருளாம், (எ - று).*

*உறுபொருள் - காவற் பொருள்.* 4

755. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தொன்
758 றுண்டாகச் செய்வான் வினை.

(இ - ள்.) *குன்றின்மேல் ஏறியிருந்து, யானையோடு யானை போர் செய்தலைக் கண்டாற் போலும்; தன் கையகத்து எய்திப்பொரு ளுண்டாக ஒரு வினையை யெடுத்துக்கொண்டு தொடங்கினவன் செய்யும் வினை, (எ - று).*

*இது பொருளுடையார் தாம் வருந்தாமல் பிறரை வினைசெய்வாராக வவ்வினைக்கண் விட்டிருக்கலாமென்றது.* 5

756. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கேண்பொரு
760 ளேனை யிரண்டு மொருங்கு.

(இ - ள்.) *ஒள்ளிய பொருளை முற்ற உண்டாக்கினோர்க்கு ஒழிந்த அறமும் காமமுமாகிய பொருளிரண்டும் ஒருங்கே எளியபொருளாக வெய்தலாம், (எ-று).*

757. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
757 செல்வச் செவிலியா லுண்டு.

(இ - ள்.) *அறம் செய்தற்குக் காரணமாகிய அன்பினின்றும் தோன்றிய அருளாகிய குழவி, பொருளென்று சொல்லப்படும் செல்வத்தையுடைய செவிலித்தாய் வளர்த்தவாலே உண்டாம், (எ - று).*

*இது பொருளுடையார்க்கே அறஞ்செய்தலாவதென்பது கூறிற்று.* 7

758. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
751 பொருளல்ல தில்லை பொருள்.



(இ - ள்.) *ஒரு பொருளாக மதிக்கப்படாதாரையும் பொருளாக மதிக்கப் பண்ணுவதாகிய பொருளையல்லது வேறு பொருள் என்று சொல்லப்படுவதில்லை.*

*இது வடிவில்லாதாரைப் பெண்டிரிகழ்வார்; பொருளுடையாரை யாவரும் நன்றாக மதிப்பரென்றது.* 8

759. பொருளென்னும் பொய்யா விளக்க மிருளறுக்கு

மெண்ணிய தேயத்துச் சென்று.

(இ - ள்.) பொருளென்னும் மெய்யாகிய ஒளி, எண்ணப்பட்ட தேசமெல்லாவற்றினுஞ் சென்று பகையென்னும்இருளை அறுக்கும், (எ - று).

இது பொருள் ஒளியில்லாதார்க்கும் ஒளியுண்டாக்கும்; அரசன் பொருளுடையனுனல், தான் கருதிய தேசமெல்லாம் தன்னுணை நடத்துவானென்றது.

760. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) பொருளில்லாதாரை எல்லாரும் இகழுவர்; பொருளுடையாரை எல்லாருஞ் சிறப்புச் செய்வர், (எ - று).

இது சிறப்பெய்தலும் பொருளுடைமையாலே வருமென்றது. 10

---

## 4 - ம் அதிகாரம்.

## படைமாட்சி.

படைமாட்சியாவது படையினது நன்மை கூறுதல். படை மேற்கூறிய பொருளினுல்உண்டாமாதலானும், அதனை ஈட்டுதற்கும் நுகர்தற்கும் படை வேண்டுமாதலானும், அதன்பின் இது கூறப்பட்டது.

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(இ - ள்.) யானை - குதிரை - தேர் - கருவி - காலாளாகிய உறுப்புக்களால் அமைந்து,இடுக்கண்உற்றால் அதற்கு அச்சமின்றி,வெற்றியுடைய படை,அரசன் தேடியபொரு ளெல்லாவற்றினும் தலையான பொருள்; ஆதலால்,படைவேண்டும்.

762. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(இ - ள்.) கெடுதலின்றி, கீழறுக்கப்படாததாகி, குலத்தின் வழிவந்த அஞ்சாமையையுடையதே படையாவது, (எ - று).

வழிவருதல் - வீரன்மகன் வீரனாகுதல். இது படையினது நன்மை கூறிற்று.

763. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
766 மெனநான்கே யேமம் படைக்கு.

(இ - ள்.) மறமும், மானமும், நல்லவழிச்சேறலும், தெளிவுடைமையு மென இந்நான்குமே படைக்கு அரணும், (எ - று).

நல்லவழிச்சேறலாவது மறஞ்செய்யுங் காலத்துக் கலக்கமின்மை. 3

764. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
767 போர்தாங்குந் தன்மை யறிந்து.

(இ - ள்.) உற்றவிடத்து உற்றபோரினைத் தடுக்கும் இயல்பறிந்து, தாரைப் பொறுத்து, மேற்செல்லவல்லது படையாவது, (எ - று).

இது மூர்க்கிச்செய்யவேண்டுமென்பதூஉம், செல்லுங்கால்இடமறிந்து செல்ல வேண்டுமென்பதூஉம், கூறிற்று. 4

765. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
765 மாற்ற லதுவே படை.

(இ - ள்.) கூற்றமானது வெகுண்டு தன்மேல்வரினும், சிதறுதலின்றியே எதிர்நிற்கவல்ல வலியுடையதே படையாவது, (எ - று).

இது மாற்றான் மேல்வந்தால் பொறுக்கவேண்டு மென்றது. 5

766. உலைவிடத் தூறஞ்சா வன்கண் டொலைவிடத்துத்
762 தொல்படைக் கல்லா லரிது.

(இ - ள்.) அரசர் கெடுமிடத்து, வழிவந்த படைக்கு அல்லது பிறபடைக்கு போர்க்களத்து அழிவு வந்தவிடத்து, உயிர்க்கு வரும் ஊறு அஞ்சாத வன்கண்மை இல்லை, (எ - று).

வழிவந்த படை-வீரன் மகன் வீரன். 6

767. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
768 படைத்தகையாற் பாடு பெறும்.

(இ - ள்.) பகைவரைக்கொல்லுந் தகுதியும், அவர் மேல்வந்தால் பொறுக்கும் ஆற்றலும் இல்லையாயினும், சேனையானது படையழகினால் பெருமைபெறும்.

படையழகென்றது தேர் யானை குதிரைகளின் அலங்காரமும், கொடியும், குடையும், முரசும், காகளமும் முதலாயினவற்றால் அழகு பெறுதல். இஃது அரசன் படையழகு அமைக்கவேண்டு மென்றது. 7

768. ஒலித்தக்கா லென்ன முவரி யெலிப்பகை
763 நாக முயிர்ப்பக் கெடும்.



(இ - ள்.) *கடல்போல ஒலித்தாலும் எலியினது மாறுபாட்டினால் வருந் தீமை யென்னுளதாம்; எலி நாகம் உயிர்த்த வளவிலே கெடும், (எ - று).*

*இது படைமிகுத்தது வெல்லுமென்று கருதாது வீரரைத் தெளிந்தாளல் வேண்டு மென்றது.* 8

769. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
770 தலைமக்க ளில்வழி யில்.

(இ - ள்.) *படையானது நிலையுடைய வீரரைப் பெரிது உடைத்தாயினும், தனக்குத் தலைவரை இல்லாத விடத்துத் தனக்கு வெற்றியில்லையாம், (எ - று).*

*இது படையமைத்தாலும் படைத்தலைவரையும் அமைக்கவேண்டு மென்றது.* 9

770. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
769 மில்லாயின் வெல்லும் படை.

* (இ - ள்.) *தான் தேய்ந்து சிறிதாகலும், மனத்தினின்று நீங்காத வெறுப்பும், நல்குரவும் தனக்கில்லை யாயின், படை பகையை வெல்லும், (எ - று).* 10

---

## **5** - ம் அதிகாரம்.

## *படைச்செருக்கு.*

*படைச்செருக்காவது படையினது வீரியங் கூறுதல். இது படைக்கு இன்றியமையாமையின், அதன்பின் கூறப்பட்டது.*

771. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
778 செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(இ - ள்.) *ஒன்றுஉற்ற காலத்து உயிர்ப்பொருட்டு அஞ்சாத மறவர் தமமரசனால் செறக்கப்பட்டாராயினும், தமது தன்மை குன்றுதல் இலர், (எ - று).*

*இஃது அஞ்சாமையுடையார் வீரியஞ் செய்யுமிடத்துக் குறைய நில்லாமை வேண்டுமென்றது.* 1

772. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
773 லூராண்மை மற்றத னெஃகு.

(இ - ள்.) ஒன்றுஉற்றக்கால் அஞ்சாமையை ஒருவனுக்குப் பெரிய ஆண்மை யென்று சொல்லுவர்; உலகியலறிந்து செய்தலை அவ்வாண்மைக்குப் படைக் கலமென்று சொல்லுவர், (எ - று).

உலகியலறிவது - தான் உலகியலை வெளியார் செய்யாமை யறிதல். 2

---

* இது பரிமேலழக ருரை.



773. கான முயலெய்த வம்பினின் யானை
772 பிழைத்தவே லேந்த லினிது.

(இ - ள்.) வீரர்க்குக் காட்டகத்து முயலைப் பட எய்த அம்பினும், யானை யைப் பிழைக்க எறிந்த வேலை யேந்துதல் இனிது, (எ - று).

இது மேலதற்குக் காரணமாகக் கூறப்பட்டது. 3

774. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
771 முன்னின்று கன்னின் றவர்.

(இ - ள்.) என்னுடைய ஐயனை முனனர்ப் பகைவீரரே! நிலைதொழிமின்; முன்னுள் இவன் முன்னே நின்று, கல்லிலே யெழுத்தப்பட்டுநிற்கின்றார் பலராத லால், (எ - று).

இஃது எளியாரைப் போகச்சொல்லி, எதிரப்பாரோடு பொரவேண்டு மென்றது. 4

775. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
774 மெய்வேல் பறியா நகும்.

(இ - ள்.) தன் கையிலுள்ள வேலை ஒரு களிற்றின் உயிரோடே போக்கி, அதன்பின் கருவி தேடிச் செல்பவன், தன் மெய்யின் மேற்பட்ட வேலைப் பறித் துக் கருவி பெற்றேமென்று மகிழும், (எ - று).

இது வீரர் செயல் இத்தன்மையதாதலால், புண்பட்டால் அதற்காற்றிப்

*பின்னும் அமரின்கண்சாதல் அல்லது வெல்லல் வேண்டும் என்றது.* 5

776. விழித்தகண் வேல்கொண் டெறிய வழித்திமைப்பி
775 னோட்டன்றோ வன்க ணவர்க்கு.

(இ - ள்.) *மாற்றாரோடு எதிர்த்துச் சிவந்து நோக்கின கண்ணிலே ஒரு வேலினாலே எறிய, அதற்கு மீண்டும் இமைப்பாராயின், அஃது அஞ்சாதார்க்குக் கெட்டதனோடு ஒக்கும்,* (எ - று).

*விழித்தகண் என்பதற்கு மாற்றாரை நோக்கி யிமையாத கண் எனினும் அமையும்.* 6

777. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
776 வைக்குந்தன் னாளை யெடுத்து.

(இ - ள்.) *தனது வாழ்நாளாகியநாளை யெண்ணி, அவற்றுள் விழுமிய புண் படாத நாளெல்லாவற்றையும் தப்பின நாளுள்ளேயெண்ணி வைக்கும் வீரன்.* ()

*இது போரின்கண் முகத்தினும் மார்பினும் புண்படலும், முதுகு புறங் கொடாமையும வேண்டு மென்றது.* 7

நட்பியல் - 1 - வது நட்பு. 153

778. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
777 கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(இ - ள்.) *பரவும் புகழை விரும்பி உயிரை விரும்பாதார், கழல் கட்டுதல் அழகுடைத்து,* (எ - று).

*இது புகழ் விரும்பும் படை வேண்டு மென்றது.* 8

779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
779 பிழைத்த தொறுக்கிற் பவர்.

(இ - ள்.) *முற்கூறிய வஞ்சினம் தப்பாமல் சாவாரை அவர் தப்பியதுசொல் லிப் பழிக்கவல்லவா யாவர்,* (எ - று).

*இது வஞ்சினம் தப்பின் படவேண்டுமென்றது.* 9

780. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
780 டிரந்துகோட் டக்க துடைத்து.

(இ - ள்.) *தம்மை ஆண்டவரது கண் நீர்மல்குமாறு சாகவல்லாராயின், அச்சாக்காடு எல்லாராலும் வேண்டிக் கொள்ளும் தகுதி யுடைத்து,* (எ - று).

இஃது ஆண்டவனுக்குக் கேடுவரின், படவேண்டுமென்றது. 10

பொருளியல் முற்றிற்று.

---

## 4. நட்பியல். (5)

### 1 - ம் அதிகாரம்.

### நட்பு.

*நட்பாவது நட்பாமாறு கூறுதல். அமைச்சு, நாடு, அரண், பொருள், படை ஐந்துங்கூறினார் இனி நட்பாமாறு கூறுகின்றார். மன்னருள் படையும் பொருளும் உள்ளிட்டன நிலைநின்று வளர்வதும் இனலன் அழிவு பெறாத நட்பையுடையவனுக்கு அல்லது கூடாதாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

781. செயற்கரிய யாவுள நட்பி னதுபோல்
78/ வினைக்கரிய யாவுள காப்பு.

(இ - ள்.) *நட்புப்போல உண்டாக்குதற்கு அரியவான பொருள்கள் யாவையுள? அவ்வாறு உண்டாக்கப்பட்ட நட்புப்போல, பிறர் நல்வினை செய்தற்கு அரியவாகக் காக்கும் காவல்கள் யாவையுள? (எ - று).*

*இது நட்புத் தேடவரிது என்றது.* 1

782. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
786 தகநக நட்பதே நட்பு.





(இ - ள்.) *முகத்தோடு முகமகிழக் கொள்ளும் நட்பு நட்பன்று; மனத்தோடு மனமகிழக் கொள்ளும் நட்பே நட்பாவது, (எ - று).* 2

783. நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்
784 மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(இ - ள்.) *ஒருவனோடு ஒருவன் நட்புப்பண்ணுதல் நகுதற்பொருட்டன்று; மிகையாயின செய்யுமிடத்து முற்பட்டுக் கழறுதற் பொருட்டு, (எ - று).*

*இது மனமகிழ நட்புக்கொடலன்றித் தீக்கருமங்கண்டால் கழறவும் வேண்டுமென்றது.* 3

784. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
788 யிடுக்கண் களைவதா நட்பு.

(இ - ள்.) உடைசோரநின்றானுக்குக் கைசென்று உடைசோராமற் காத்தாற்போல, இடுக்கண்வந்தால் அப்பொழுதே அவ்விடுக்கணை நீக்குவது நட்பாவது, (எ - று). 4

785. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
789 யொல்லும்வா யூன்று நிலை.

(இ-ள்.) நட்புக்கு மேம்பட இருக்கும் இடம் யாதெனின், மனத்தின்கண் ஐயுற வின்றிச் செல்லுமாற்றால் தளராமைத் தாங்கி நிற்கும் நிலை, (எ - று).

வீற்றிருத்தல்-தலைப்பட இருத்தல். 5

786. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று
790 புனையினும் புல்லென்னு நட்பு.

(இ - ள்.) இவர் நமக்கு இத்தன்மையர், யாமும் இவர்க்கு இத்தன்மையோமென்றுபேணிச் சொல்லினும். நட்புவாடும்; ஆதலால், நட்பினைத் தன்னைத்தான் நினைக்குமாறுபோல நினைகக, (எ - று). 6

787. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
783 பண்புடை யாளர் தொடர்பு.

(இ - ள்.) படிக்குந்தோறும் நூல்நயம்போல அறிவுதரும், பழகுந்தோறும் பண்புடையாளரது நட்பு, (எ - று).

இது குணவாேனாடு நட்புக்கொள்ளின், அறிவுண்டா மென்றது. 7

788. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
785 னட்பாங் கிழமை தரும்.

(இ - ள்.) நட்பாராய்தற்குப் பலநாள்பழகுதல் வேண்டா ; ஒருநாள் கண்டாராயினும் உணர்வுடையார்க்கு அவ்வுணர்வுடைமைதானே, நட்பாகும் உரிமையைத் தரும், (எ - று).



அவ்வுணர்வுடைமைதானே நட்பாகு மென்றவாறு. 8

789. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
782 பின்னீர பேதையார் நட்பு.

(இ - ள்.) பிறை நிறையும் நீர்மைபோல, ஒருநாளைக் கொருநாள் வளரும்

அறிவுடையார் கொண்ட நட்பு; மதியின் பின்னீர்மைபோல ஒருகாலைக் கொருகால் தேயும் பேதையார் கொண்ட நட்பு, (எ - று).

இஃது அறிவுடையார் நட்பு வளருமென்றும் அறிவில்லாதார் நட்புத் தேயுமென்றுங் கூறிற்று. 9

790. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
787 ணல்ல லுழப்பதா நட்பு.

(இ - ள்.) நட்டார்க்கு அழிவு வந்தவிடத்து, அவர் துன்பத்தை நீக்கி, நல்ல நெறியின்கண் செலுத்தித் தாங்கி, தன்னால் செயலற்ற விடத்து அவரோடு ஒக்கத் தானும் துன்பம் உழப்பது நட்பு, (எ - று). 10

---

## 2 - ம் அதிகாரம்.

## நட்பாராய்தல்.

நட்பாராய்தலாவது நட்பிற்கு ஆவாரை ஆராய்ந்து கொள்ளுமாறு கூறுதல். நட்குங்கால் ஆராய்ந்து நட்கவேண்டுமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது

791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்
791 வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(இ - ள்.) நட்பை விரும்பியாள்பவர்க்கு ஒருவனை ஆராயாது நட்புச் செய்வதுபோலக் கேடுதருவதில்லை; நட்டபின், அவனை விடுதலில்லை யாயின், (எ-று).

இது நட்பாராய்தல் வேண்டு மென்றது. 1

792. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
793 வினனு மறிந்தியாக்க நட்பு.

(இ - ள்.) ஒருவனுடைய குணமும்-குடிப்பிறப்பும் - குற்றமும்-குறைவில்லாத சுற்றமும் முன்பே ஆராய்ந்து, பின்பு அவனை நட்பாகக்கொள்க, (எ - று).

இவையெல்லாம் ஒத்தனவாயின், உறவு நீளச்செல்லுமென்றவாறும். 2

793. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
794 கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(இ - ள்.) மேற்கூறியவற்றுள் உயர்குடிப்பிறந்து, தன்மாட்டுப் பிறர் சொல்லும் பழிக்கு அஞ்சுமவனை, அவன் வேண்டிய தொன்று கொடுத்தும் நட்பாகக் கொள்ளல்வேண்டும், (எ - று). 3

794. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
795 வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(இ - ள்.) குற்றம் கண்டால் அழுமாறு சொல்லி, நெறியல்லாதனவற்றிற்குக் கழறி, உலகவழக்கறிய வல்லாரது நட்பை ஆராய்ந்துகொள்க, (எ - று).

இது மந்திரிகளுள் நட்பாக்கற் பாலாரைக் கூறிற்று. 4

795. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
800 மொருவுக வொப்பிலார் நட்பு.

(இ - ள்.) குற்றமற்றாரது நட்பைக் கொள்க; ஒருபொருளைக் கொடுத்தாயினும், தனக்கு நிகரில்லாதார் நட்பினின்று நீங்குக, (எ - று). 5

796. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
797 கேண்மை யொரீஇ விடல்.

(இ - ள்.) ஒருவனுக்கு இலாபமென்று சொல்லப்படுவது அறிவில்லாதாரோடு நட்பாடுதலை நீங்கி விடுதல், (எ - று).

இது பேதையார் நட்பைத் தவிர்கவென்றது. 6

797. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
798 வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(இ - ள்.) தான் சிறுகுவனவற்றை உள்ளத்தால் நினையாதொழிக; அதுபோல, அல்லல் வந்தவிடத்து வலியாகாதாரது நட்பினைக் கொள்ளாதொழிக ()

இது தீக்குணத்தார் நட்பைத் தவிர்க வென்றது. 7

798. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
799 யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(இ - ள்.) கெடும்பொழுது கைவிடுவாரது நட்பைத் தன்னைப் பிறர் கொல்லுங் காலத்து நினைப்பினும் நினைத்த மனத்தினை அந்நட்புச் சுடும்; அவர் கொல்லுமதனினும், (எ - று).

இது கேட்டிற்கு உதவாதார் நட்பைத் தவிர்க வென்றது. 8

799. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
796 நீட்டி யளப்பதோர் கோல்.

(இ - ள்.) கேடுவந்தவிடத்தும் ஒருபயனுண்டாம்; அக்கேடு நட்டாரது தன்மையை நீட்டி யளந்தறிதற்கு ஒரு கோலாமாதலால், (எ - று). [illegible]

மேல் கெடுங்காலைக் கைவிடுவோரை விடவேண்டு மென்றார் அவரை அறியுமா றென்னை யென்றார்க்கு, கேட்டாலல்லது அறிதல் அரிதென்றார். 9

800. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
792 தான்சாந் துயரந் தரும்.



(இ - ள்.) குற்றமும் ஆய்ந்து குணமும் ஆய்ந்து கொள்ளாதான் கொண்ட நட்பு, பிற்காலத்துத் தான் சாதற்கு ஏதுவான துன்பத்தைத் தரும், (எ - று).

இஃது ஆராயாமையால் வருங்குற்றங் கூறிற்று. 10

---

## 3 - ம் அதிகாரம்.

## ப ழை மை.

பழைமையாவது நட்டோரது உரிமை கூறுதல். இஃது அவருரிமையால் செய்தனவற்றிற்குப் பொறுக்கவேண்டுமென்று அதன்பின் கூறப்பட்டது.

801. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
801 கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(இ - ள்.) பழைமையென்று சொல்லப்படுவது யாதெனின், அது யாதொன்றிலும் உரிமையை அறுத்தலில்லாத நட்பு, (எ - று).

இது பழையவன் செய்த உரிமையைச் சிறிதுஞ் சிதையாது உடன்படுதல் நட்பாவதென்றது. 1

802. நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்
802 குப்பாதல் சான்றோர் கடன்.

(இ - ள்.) நட்பிற்கு அங்கமாவது உரிமை; அவ்வுரிமையால் செய்யுமதற்கு உடன்படுதல் சான்றோர்க்கு இயல்பு, (எ - று).

இது பேய்ச்சுரைக்காய்க்குப் பல காயம் அமைத்தாலும் இனிமையுண்டாகாதுபோல, உடன்படாராயின் இனிமை உண்டாகாதாதலான் உடன்படல் வேண்டு மென்றது. 2

803. விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகையாற்
804 கேளாது நட்டார் செயின்.

(இ - ள்.) நட்டோர் தமது உரிமையாலே கேளாது இசைவில்லாதவற்றைச் செய்வாராயின், அதற்கு முனியாது அதனையுந் தாம் விரும்பும் தன்மையோடே கூட விரும்பத் தப்பாதிருப்பர் மிக்கார், (எ - று).

இஃது உடன்படுதலன்றி விரும்பவும் வேண்டு மென்றது. 3

804. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
803 செய்தாங் கமையாக் கடை.

(இ - ள்.) ஒருவன் தனது உரிமையாலே இசைவில்லாதவற்றைச் செய்தவிடத்து, தான் அமையானாயின், பின் அவனோடு பழகிய நட்பு யாதினைச் செய்யும்? இது மறுமையிற் பயன் படாதென்றது. 4



805. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
808 நாளிழுக்க நட்டார் செயின்.

(இ - ள்.) நட்டோரது தப்பைப் பிறர் சொல்லுங்கால் கேளாத உரிமையை யறியவல்லார்க்கு நட்டோர் தப்புச்செய்யின், அந்நாள் நல்ல நாளாம், (எ - று). இது கேளாது செய்தமேல் அன்றித் தப்புச் செய்யினும் அமையவேண்டு மென்றது 5

806. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
807 வழிவந்த கேண்மை யவர்.

(இ - ள்.) தமக்கு அழிவுவருவன கருமங்களைப் பழைய நட்டோர் செய்தாராயினும், அவரோடு உள்ள அன்புவிடார்; முற்காலத்து அன்பின் வழியாகவந்த நட்பையுடையவர், (எ - று).

இது கேடுவருவன செய்யினும் அமைய வேண்டு மென்றது. 6

807. பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க
805 நோதக்க நட்டார் செயின்.

(இ - ள்.) தாம் நோவத்தக்கனவற்றை நட்டோர் செய்வாராயின், அதற்கு முனியாது ஒன்றில் அறியாமையாலே செய்தாரென்று கொள்க; ஒன்றில் பெரிய உரிமையாலே செய்தாரென்று கொள்க, (எ - று). 7

808. எல்லைக்க ணின்றார் துறவார் தொலைவிடத்துந்
806 தொல்லைக்க ணின்றார் தொடர்பு.

(இ - ள்.) ஒழுக்கத்தின்கண்ணே நின்றார் பழைமையின்கண்ணே நின்றாரது நட்பை அவராலே தமக்கு அழிவு வந்தவிடத்தும் விடார், (எ - று).

*எல்லை - வரம்பு.* 8

809. கெடாஅர் வழிவந்த கேண்மையார் கேண்மை
609 விடாஅர் விழையு முலகு.

(இ - ள்.) *குற்றம் உண்டாயின் அவ்விடத்து நட்பினிற் கெடாராய்க் குலத்தின்வழி வந்த நட்புடையாரது நட்பை விடுதலின்றி உலகத்தார் விரும்புவர்.* 9

810. விழையார் விழையப் படுவர் பழையார்கட்
810 பண்பிற் றலைப்பிரியா தார்.

(இ - ள்.) *பழைய நட்டோராமாட்டுக் குணத்தினின்று நீங்காதார் விரும்பாதாராலும் விரும்பப் படுவர்,* (எ - று).

*இது பகைவரும் விரும்புவாரென்றது.* 10



## 4 - ம் அதிகாரம்.

## *தீ நட்பு.*

*தீநட்பாவது தீயகுணத்தாராகிய மாந்தரோடு நட்டதனால்வரும் குற்றங் கூறுதல்.*

811. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
814 தமரிற் றனிமை தலை.

(இ - ள்.) *தெருவின்கண் நெறிப்பட நடந்து அமரின்கண் நெறிப்படாமல் நடந்து ஏறினவன் வலிமையைக் கெடுக்கும் அறிவில்லாத குதிரையைப் போல்வார் தமராவதினும் ஒருவன் தனியனாதல் நன்று,* (எ - று).

*இது பகைவர் நட்புத் தீமைபயக்கு மென்றது.* 1

812. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
815 யெய்தலி னெய்தாமை நன்று.

(இ-ள்.) *நட்புச்செய்தாலும் தனக்குப் பாதுகாவலாதல் இல்லாத புல்லியாரது புல்லிய நட்பைப் பெறுவதினும், பெறாமை நன்று,* (எ - று).

*இது சிறியார் நட்புத் தீமைதருமென்றது. சிறியார் - சூதர், வேட்டைக்*

காரர், பெண்டிர் போல்வார். 2

813. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
816 ரேதின்மை கோடி யுறும்.

(இ - ள்.) அறிவில்லாதார் மிகவும் கெழுமிய நட்பாகுமதனினும், அறிவுடையார் பகைமை கோடியடங்கு மிக்க நன்மையை உண்டாக்கும், (எ - று).

இது பேதைமையார் நட்புத் தீமை பயக்கு மென்றது. 3

814. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
811 பெருகலிற் குன்ற லினிது.

(இ - ள்.) கண்ணினால் பருகுவாரைப் போலத் தமக்கு அன்புடையராயிருப்பினும், குணமில்லாதார் நட்புப் பெருகுமதனினும் குறைதல் நன்று, (எ - று).

இது குணமில்லாதார் நட்புத் தீதென்றது. 4

815. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
817 பத்தடுத்த கோடி யுறும்.

(இ - ள்.) நகையின் பகுதியார் செய்த நட்பினும், பகைவராலே பத்துக் கோடி மடங்கு நன்மை மிகும், (எ - று).

நகைவகையர்-காமுகர்-வேழம்பர்முதலாயினோர். இஃது இவர்கள் நட்புத் தீதென்றது. 5



816. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை
818 சொல்லாடார் சோர விடல்.

(இ - ள்.) தம்மாலியலும் கருமத்தை முடியாது வருத்துமவர் நட்பை, நட்பென்று சொல்லுவதும் செய்யாராய் வீழவிடுக, (எ - று).

இஃது அழுக்காறுடையார் நட்புத் தீதென்றது. 6

817. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ
820 மன்றிற் பழிப்பார் தொடர்பு.

(இ - ள்.) மனையின்கண் நட்டோராயிருந்து, மன்றின்கண் குற்றங் கூறுவாரது நட்பை, சிறிதுஞ் செறிதலைத் தவிர்க, (எ - று).

இது புறங்கூறுவார் நட்புத் தீதென்றது. 7

818. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு

819 சொல்வேறு பட்டார் தொடர்பு.

(இ - ள்.) செய்யுந்தொழில் வேருக, சொல்லுங்கூற்று வேருக, ஒழுகுவாரது நட்பு, பயன்படுங் கனவின்கண்ணேயன்றிக் கனவின்கண்ணும் இன்னுது, (எ - று).

இது பொய்கூறுவார் நட்புத் தீதென்றது. 8

819. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
812 பெறினு மிழப்பினு மென்.

(இ - ள்) செல்வம் மிக்க காலத்து நட்புக்கொண்டு, அஃது அற்ற காலத்து நீங்குகின்ற நிகரில்லாதார் நட்பைப் பெற்றதனுல் வருஉ் நன்மை யாது? இழந்ததனுல் வரும்தீமை யாது? (எ - று).

மக்களுள் இவரோடு ஒத்த இழிவுடையார் இன்மையான், ஒப்பிலார் என்ருர். இது காலபுருடர் நட்புத் தீதென்றது. 9

820. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
813 கொள்வாருங் கள்வரு நேர்.

(இ - ள்.) நட்டோர்க்கும் தமக்கும் வரும் நன்மை தீமைகளையொக்கப் பார்த்தத தமக்கு நன்மையாகுமதனைச் சீர்தூக்கும் நட்டோரும், பெற்றது கொள்ளும் கணிகையரும், கள்வருமென்று கூறப்பட்டவர் தம்முள் ஒப்பார்.

---



## 5 - ம் அதிகாரம்.

### கூடாநட்பு.

கூடா நட்பாவது சுற்றத்தாராயினும் பிறராயினும் மனத்தின் நள்ளாது நட்டாரைப் போல ஒழுகுவாரது இயல்பும் அவர்மாட்டு ஒழுகுந்திறமும் கூறுதல். தமக்கு இனமின்றிக் கருமங் காரணமாக நட்பாரும், பகைவராய் நட்பாருமென அவ்விருவகையாரையும் தீநட்புப்போலக் கழியவேண்டுமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

821. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
822 மனம்போல வேறு படும்.

(இ - ள்.) நட்டோர் போன்று மனத்தினான் நட்பில்லாதார் நட்பு, பெண் மனம்போல வேறுபடும்; ஆதலால், அவருள்ளக் கருத்தறிந்து கொள்க, (எ-று).

இது நட்பாயொழுகுவாரது உள்ளக்கருத்தறிய வேண்டுமென்றது. 1

822. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
824 வஞ்சரை யஞ்சப் படும்.

(இ - ள்.) முகத்தால் இனியவாக நக்கு மனத்தால் இன்னாதவாக நினைக்கும் வஞ்சகரை அஞ்சவேண்டும், (எ - று). 2

823. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
825 சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(இ - ள்.) மனத்தால் பொருத்தமில்லாதவரை யாதொன்றன்கண்ணும் அவர் சொல்லினால் தெளிதற்பாலதன்று, (எ - று).

இது சொல்லினால் அறிதலரிதென்றது. 3

824. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
823 ராகுதன் மாணார்க் கரிது.

(இ - ள்.) நல்லவாகிய பல நூல்களைக் கற்றவிடத்தும், மனநல்லாராகுதல் மாட்சிமையில்லார்க்கு அரிது, (எ - று).

இது கல்வியால் அறிதல் அரிதென்றது. 4

825. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ
826 லொல்லை யுணரப் படும்.

(இ - ள்.) உற்றாரைப்போல நல்லவானவை சொன்னாராயினும், பகைவர் சொல்லுஞ்சொல் விரைந்தறியப்படும், (எ - று). 5





826. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வணக்கந்
827 தீங்கு குறித்தமை யான்.

(இ - ள்.) வில்லினது வணக்கம் தீமையைக் குறித்தமை ஏதுவாக,

தாழச்சொல்லுஞ் சொல்லைப் பகைவர்மாட்டு நன்றுசொன்னரென்று கொள்ளாதொழிக, (எ - று).

இது தாழச்சொல்லினும் தேறப்படா ரென்றது. 6

827. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்ன
828 ரழுதகண் ணீரு மனைத்து.

(இ - ள்.) தொழுதகையுள்ளும் கொலைக்கருவி ஒடுங்கும்; பகைவர் அழுதகண்ணீரும் அத்தன்மையதாமென்று கொள்க, (எ - று).

மெல்லியராகத் தொழுதுவந்து ஒத்தார்போல ஒழுகுவாரது நட்பென்றவாறு. இது கூடாநட்பினுல்வருங் குற்றங் கூறிற்று. கூடாநட்பினர் வேறு காலத்தினும் அழுதகாலத்திலும் தேறப்படாரென்க. 7

828. தீர்விடங் காணி னெறிதற்குப் பட்டடை
821 நேரா நிரந்தவர் நட்பு.

(இ - ள்.) முடியுமிடங்காணின், மற்றொருவன் எறிதற்குப் பட்டடையாம்; மனத்தினுல் ஒவ்வாது புறத்து வேறுமிகச் செய்துவந்தாரது நட்பு, (எ-று).

இது கருமங்காரணமாக நட்டாரோடு கூடும் திறங் கூறிற்று. பட்டடையாவது தான் தாங்குவதுபோல நின்று வெட்டுவார்க்கு உதவி செய்வது. 8

829. மிகச்செய்து தம்மெள் ளுவாரை நகச்செய்து
829 நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

*(இ - ள்.) பகைமை தோன்றாமல் புறத்தின்கண் நட்பினை மிகச்செய்து, அகத்தின்கண் தம்மையிகழும் பகைவரை, தாமும் அந்நட்பின்கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும் வண்ணஞ்செய்து அகத்தின்கண் அது சாம் வண்ணம் பொருந்தற்பான்மை யுடைத்து அரசநீதி, (எ - று). 9

830. பகைநட்பாங் காலம் வருங்கான் முகநட்
830 டகநட் பொரீஇ விடல்.

(இ - ள்.) பகைவர் நட்பாங்காலம் வந்துவிடத்து, முகத்தால் நட்பினைச் செய்து அகநட்பு நீக்கவிடுக, (எ - று). 10

நட்பியல் முற்றிற்று.

---

* இது பரிமேலழக ருரை.

# 5. துன்பவியல். (12)

## 1 - ம் அதிகாரம்.

## பேதைமை.

*பேதைமையாவது கேட்டிற்குக் காரணமாகியவற்றை அறியாதாரியல்பு கூறுதல். இறைமாட்சி முதலாகக் கூடாநட்பு ஈறாகப் பொருட்பகுதியாகிய அமைச்சும், நாடும், அரணும், பொருளும், படையும், நட்பும் என்று சொல்லப் பட்ட ஆறுஉறுப்புங் கூறினார். இனி அவ்வரசர்க்கும் அவராலாக்கப்பட்ட பொருட்கும் கேடுவரும் நெறியையறிந்து காக்குமாறு வேண்டுமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

831. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்கொண்
831 டூதியம் போக விடல்.

(இ - ள்.) *அறியாமையென்று சொல்லப்படுவதொன்று யாதெனின், அது குற்றம் பயப்பனவற்றைக்கொண்டு நன்மைபயப்பனவற்றைப் போகவிடல்.*

*இது பேதைமையின் இலக்கணம் கூறிற்று.* 1

832. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
832 கையல்ல தன்கட் செயல்.

(இ - ள்.) *அறியாமை யெல்லாவற்றுள்ளும் அறியாமையாவது தனக்குக் கைவாராத பொருளின்கண் காதன்மை செய்தல்,* (எ - று).

*இது வருந்தினும் பெறாததற்குக் காதல் செய்தலும் பேதைமையென்றது.* 2

833. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
834 பேதையிற் பேதையா ரில்.

(இ - ள்.) *நூல்களைக்கற்றறிந்தும், அவற்றைப்பிறர்க்கு இசையச் சொல்லியும், தான் அடங்குதலைச் செய்யாத பேதையார்போலப் பேதையார் உலகத்தில் இல்லை,* (எ - று). 3

834. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்

833 பேணாமை பேதை தொழில்.

*(இ - ள்.) நாணமில்லாமையும், தேர்ந்துணராமையும், ஈரமின்மையும், யாதொரு பொருளையும் போற்றாமையும் பேதையார் தொழில், (எ - று).*

*இது பேதையார்செயல் கூறிற்று.* 4

835\. ஒருமைச் செயலாற்றும் பேதை யெழுமையுந்
835 தான்புக் கழுந்து மளறு.



*(இ - ள்.) பேதை ஒருபிறப்பின்கண் செய்யுஞ்செயலாலே செய்யவல் லன், எழுபிறப்பினும் தான் புக்கழுந்தும் நரகத்தை, (எ - று).*

*புக்கழுந்தல் - ஒருகால் நரகத்திலே பிறந்தால் அவ்வுடம்பு நீங்கினாலும் அதனுள்ளே பிறத்தல்.* 5

836\. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
836 பேதை வினைமேற் கொளின்.

*(இ - ள்.) ஒழுக்கமறியாததொருபேதையான் ஒருகருமத்தை மேற்கொண் டானாயின், அப்பொழுது பொய்யனென்னவும்பட்டு, பிறர்க்குப் புனைபூணும்.*
*புனைபூணல் - சிறைபடுதல்.* 6

837\. ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
837 பெருஞ்செல்வ முற்றக் கடை.

*(இ - ள்.) அயலார் உண்ண, உற்றார் பசியாநிற்பர்; பேதையானவன் பெரிய செல்வத்தை உற்றவிடத்து, (எ - று).*

*இது பேதை பொருள்பெற்றால் வழங்குந்திறங் கூறிற்று.* 7

838\. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
839 பீழை தருவதொன் றில்.

*(இ - ள்.) மகளிர்க்குப் பேதையாரதுநட்பு மிகவும் இனிது; பிரிந்தவிடத்து, தருவதொரு துன்பம் இல்லையாதலான், (எ - று).*

*இது பேதை காமந்துய்க்குமாறு கூறிற்று.* 8

839. சழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
840 சழாஅத்துப் பேதை புகல்.

*(இ - ள்.) கழுவாதகாலைப் பள்ளியின்கண் வைத்தாற்போலும்; சான்றோர் அவையின்கண் பேதைபுகுந்து கூடியிருத்தல், (எ - று).*

*இது பேதை யிருந்த அவை யிகழப்படுமென்றது.* 9

840. மைய லொருவன் களித்தற்றாற் பேதைதன்
838 கையொன் றுடைமை பெறின்.

*(இ - ள்.) முன்னே பித்தாய்மயங்கிய ஒருவன் பின்பு கள்ளினை நுகர்ந்து களித்தாற்போலாவதொன்று; பேதை தன்கையின்கண் ஒன்றுடையனானவிடத்து.*

---



## 2 - வது அதிகாரம்.

## புல்லறிவாண்மை.

*புல்லறிவாண்மையாவது சிற்றறிவின் இயல்பும் அதனால் வருங் குற்றமும் கூறுதல். இதுவும் பேதைமையோடொத்த இயல்பிற்றாதலான், அதன்பின் கூறப்பட்டது.*

841. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
844 யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

*(இ - ள்.) புல்லறி வென்று சொல்லப்படுவது யாதெனின், அது யாம் அறிவுடையோ மென்று தம்மைத் தாம் மதிக்குங்களிப்பு, (எ - று).* 1

842. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
845 வல்லதூஉ மையந் தரும்.

*(இ - ள்.) தாம் உய்யக் கல்லாதவற்றைக் கற்றாராக மேற்கொண்டொழுகல், குற்றந்தீரக் கற்றதனையும் ஐயமாக்கும், (எ - று).*

*இது கல்லாததனை மேற் கொள்ளுதல் புல்லறிவென்றது.* 2

843. உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்

850 தலைகையா வைக்கப் படும்.

(இ - ள்.) உலகத்தில் அறிவுடையார் பலர் உண்டென்பதாகிய ஒரு பொருளை இல்லையென்று சொல்லுமவன், இவ்வுலகத்தின்கண்ணே திரிவதாகிய பேயென்று எண்ணப்படுவன், (எ - று).

இஃது உயர்ந்தோர் உண்டென்பதனை இல்லையென்றல் புல்லறிவென்றது. 3

844. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
849 கண்டானாந் தான்கண்ட வாறு.

(இ - ள்.) அறியாதானை அறிவிக்கப் புகுதுமவன் தானறியான்; அவ்வறியாதவன் தான் அறிந்தபடியை அறிந்தானா யிருக்குமாதலான், (எ - று).

இது கொண்டது விடாமை புல்லறிவென்றது. 4

845. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
846 குற்ற மறையா வழி.

(இ - ள்.) தம்பாலுள்ள குற்றத்தைப் பிறரறியாமல் தாம் மறையாத காலத்து, பிறர் காணாமல் மறைக்க வேண்டும் உறுப்பை ஆடையால் மறைத்தலும் புல்லறிவு, (எ - று).



எனவே, அதுவும் மறையாதாயின், குற்றமாவொழிவில்லை யென்றவாறாயிற்று. இது குற்றமறையாமை புல்லறிவென்றது. . 5

846. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
848 போஒ மளவுமோர் நோய்.

(இ - ள்.) அறிவுடையார் சொல்லவுஞ் செய்யான்; தானுந் தெளியான்; அத்தன்மையனாகிய சீவன் போமளவும் உலகத்தார்க்கு ஒருநோய்போல்வன். ()

இஃது சுட்டின பொருளைக் கேட்டலும் தெளிதலும் செய்யாமை புல்லறிவென்றது. 6

847. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
842 மில்லை பெறுவான் றவம்.

(இ - ள்) அறிவில்லாதான் மனமகிழ்ந்து கொடுத்தற்குக் காரணம்

*வேறொன்றுமா இல்லை; அது பொருளைப் பெறுகின்றவனது நல்வினைப்பயன் ( )*

*இது கொடுத்தாருயிறும் வரிலயறியாது கொடுக்குமாதலின், அது புல்லறிவென்றது.* 7

848\. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
841 யின்மையா வையா துலகு.

(இ - ள்.) *நல்குரவினுள் நல்குரவாவது அறிவின்மை; பொருளின்மையை நல்குரவாக வெண்ணார் உலகத்தார்; அது புண்ணியஞ் செய்யாதார்மாட்டே சேருமாதலான், (எ - று).* 8

849\. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
847 பெருமிறை தானே தனக்கு.

(இ - ள்) *அறிவில்லாதான் அரிதாக எண்ணின மறைப்பொருளைச் சோரவிடுவன்; அதுவேயன்றி, தனக்குத்தானே பெரிய துன்பத்தினையும் செய்துகொள்ளுவன், (எ - று).*

*சோரவிடுதல் - பிறர்க்குச் சொல்லுதல். இது பொருட்கேடும் உயிர்க்கேடும் தானே செய்யுமென்றது.* 9

850\. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
843 செறுவார்க்குஞ் செய்த லரிது.

(இ - ள் ) *அறிவில்லாதார் தாமே தம்மை யிடர்ப்படுத்தும் இடர்ப்பாடு, பகைவர்க்கும் செய்தல் அரிது, (எ - று).*

*இது மேற்கூறியதனை வலியுறுத்திற்று.* 10

---

துன்பவியல் - **3** - வது இகல். 167

**3** - வது அதிகாரம்.

## இகல்.

*இகலாவது பிறரோடு மாறுகொண்டால்வரும் குற்றங் கூறுதல். இஃது அறியாதார்க்கு உளதாமாதலான், அதன்பின் கூறப்பட்டது*

851\. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகவென்னும்
851 பண்பின்மை பாரிக்கு நோய்.

(இ - ள்) எல்லா வுயிர்க்கும் வேறுபடுதலாகிய குணமின்மையைப் பரப்பும் துன்பத்தை, இகலென்று சொல்லுவர் அறிவோர், (எ - று).

இஃது இகலாவது இதுவென்று கூறிற்று. 1

852. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
854 மிகல்காணுங் கேடு தரற்கு.

(இ - ள்) மாறுபாட்டிற்குக் காரண முண்டாயினும், ஆக்கம் வருங்காலத்து மாறுபாடு காணான்; கேடு வருங்காலத்து, அதனை மிகுதலைக் காணும், (எ - று).

இது மாறுபாடு நல்வினை யுடையார்க்குத் தோன்றாதென்றவாறு. 2

853. இகலெதிர் சாய்ந் தொழுக வல்லாரை யாரே
855 மிகலூக்குந் தன்மை யவர்.

(இ - ள்) இகலின் எதிர் சாய்ந்தொழுக வல்லாரை வெல்ல நினைக்கும் தன்மையவர் யாதான், (எ - று)

சாய்ந்தொழுக வேண்டுமென்றார் அது மேற்கோடலி யாராமோ வென்றார்க்கு, அவரை வெல்வாரில்லை யென்றார். 3

854. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
857 மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(இ - ள்.) மாறுபாட்டிற்குச் சாய்ந்தொழுகுதல் ஆக்கமாம்; அதனை மிகுதலை நினைக்கின் கேடு மிகும், (எ - று).

இது மாறுபாட்டிற்குச் சாய்ந்தொழுகல் வேண்டுமென்றது. 4

855. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
856 தவலுங் கெடலு நணித்து.

(இ - ள்) பிறருடன் மாறுபாட்டின்கண் மிகுதல் இனிதென்று கருதுமவனும், அவன் வாழ்க்கையும், சாதலும் கெடுதலும் அணித்து, (எ - று).

நிரனிறை. இது சாயானாயின், உயிர்க்கேடும் பொருட்கேடு முண்டாமென்றது. 5



856. இகலான மின்னாத வெல்லா நகலானா
860 நன்னய மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) மாறுபாட்டினாலே துன்பங்களெல்லாம் உளவாம்; உடன்பட்டு கருதலாலே நல்ல நயமாகிய வுள்ளக்களிப்பு உண்டாம், (எ - று). 6

857. இகன்மேவு மெய்ப்பொருள் காணா ரிகன்மேவு
857 மின்னா வறிவி னவர்.

(இ - ள்.) மிகுதலைப் பொருந்துகின்ற உண்மைப்பொருளைக் காணமாட்டார், மாறுபாட்டினைப் பொருந்தின இன்னாதஅறிவுடையார், (எ - று).

இது மாறுபடுவார்க்கு மெய்ப்பொருள் தோன்றாதென்றது. 7

858. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
853 மிகலூக்குந் தன்மை யவர்.

858. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
853 தாவில் விளக்கந் தரும்.

(இ - ள்.) மாறுபடுதலாகிய இன்னாதநோயை நீக்குவானாயின், அந்நீக்குதல் கேடில்லாத குற்றமற்ற ஒளியினைத் தரும், (எ - று).

இது தோற்றமுண்டா மென்றது. 8

859. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
854 துன்பத்துட் டுன்பங் கெடின்.

(இ - ள்.) இன்பத்தின் மிக்க இன்பம் எய்தும்; மாறுபாடாகிய துன்பத்தின் மிக்க துன்பம் கெடுமாயின், (எ - று)

எல்லா இன்பத்தின்மிக்க வீடுபேற்றின்பம் எய்தும் என்றவாறு. 9

860. பகல்கருதிப் பற்றார் செயினு மிகல்கருதி
852 யின்னாசெய் யாமை தலை.

(இ-ள்.) தம்மோடு பற்றில்லாதார் வேறுபடுதலைக் கருதி, இன்னாதவற்றைச் செய்தாராயினும், அவரோடு மாறுபடுதலைக் கருதித் தாமும் அவர்க்கு அவற்றைச் செய்யாமை நன்று, (எ - று).

இது மேற்கூறிய குற்றமும் குணமும் பயக்குமாதலின், மாறுபடுதற்குக் காரணமுள வழியும் அதனைத் தவிர்தல் வேண்டும் என்றது. 10

---

## 4 - ம் அதிகாரம்.

## பகைமாட்சி.

பகைமாட்சியாவது பகைகொள்ளுங்கால் தனக்கு நன்மைபயக்குமாறு கொள்ளுதல். மேல் பகைகொள்ளலாகாதென்றார் பகைகொள்ளுங்கால் நன்மை பயக்குமாயின் கொள்கவென்றமையால், அதன்பின் இது கூறப்பட்டது.

861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
861 மெலியார்மேன் மேக பகை.

(இ - ள்.) தம்மின் வலியார்க்குப் பகையா யெதிர்தலைத் தவிர்க; தம்மைப் போற்றாத எளியார்மாட்டுப் பகைகோடலை மேவுக, (எ - று).

இது தனக்கு எளியாரோடு பகை கோடலாமென்றது. 1

862. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளென்றும்
870 மொல்லானை யொல்லா தொளி.

(இ - ள்.) கல்லாதானுமாய், வெகுளியுடையனுமாய் சிறுபொருளனுமாகிய பகைவனை எல்லாநாளும் ஒளி பொருந்ாது, (எ - று). 2

863. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
869 வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(இ - ள்.) அறிவில்லாத அச்சமுடைய பகைவரைப்பெறின், அவரைச் செறுவார்க்கு இன்பம் தூரப்போகாது, அணித்தாக வரும், (எ - று).

அறிவு - காரியவறிவு. 3

864. காணச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
866 பேணாமை பேணப் படும்.

(இ - ள்.) மீண்மெப்பாராத சினத்தனுமாய் மிகப்பெருகிய காமத்தனுமாகிய வன் பகை, விரும்பப்படும், (எ - று).

இஃது இவைபுடையார் கட்டோரிலாதலால், இவரிடத்துப் பகை கொள்ளலா மென்றது. 4

865. கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்து
867 மாணாத செய்வான் பகை.

(இ - ள்.) பகையைஉற்றிருந்தும் மாட்சிமையில்லாதன செய்பவன் பகையினை, துணிந்து ஒன்றினைக் கொடுத்தும் கொள்ளல்வேண்டும், (எ - று).

மாணாதசெய்தலாவது பகைக்காவன செய்யாது பிறிது செயல். இஃது இவன் பகைசெய்யமாட்டானாதலால், அப்பகை கோடலாமென்றது. 5

866. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
868 கினனிலனா மேமாப் புடைத்து

(இ - ள்.) குணங்களுள் யாதும் இலனாய்க் குற்றங்கள் பல உடையனாயின், அவன் துணையிலனாம்; அது மாற்றார்க்கு ஏமமாதலை உடைத்தாம், (எ - று). 6

867. அன்பில ஞன்ற துணையிலன் ருன்றுவ்வா
862 னென்பரியு மேதிலான் றுப்பு.

(இ - ள்.) *சுற்றத்தார்மாட்டு அன்புறுதலும் இலன், வேற்றரசாகிய வலிய துணையும் இலன்; ஆதலான், தான் வலியிலன்; இப்பெற்றிப்பட்டவன் மேல் வந்த பகைவன் வலியை யாங்ஙனம் தொலைப்பன்? (எ - று).* 7

868. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
864 யாங்கணும் யார்க்கு மெளிது.

(இ-ள்.) *வெகுளியின் நின்று நீங்கானுய், நிறையுடைமை யிலனுயினவனை வெல்லுதல் எக்காலத்தும் எவ்விடத்தும் யாவர்க்கும் எளிது, (எ - று).*

*இஃது இவையிரண்டு முடையவ னெல்லார்க்குந் தோற்குமென்றது.* 8

869. அஞ்சு மறியா னமைவில னீகலான்
863 றஞ்ச மெளியன் பகைக்கு.

(இ - ள்.) *அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சுவான், பகைவனது வலிமை அறியான், மதியிலன், ஈயமாட்டான்; இப்பெற்றிப்பட்டவன் பகைவர்க்கு மிகவும் எளியன், (எ - று).*

*இஃது இவை நான்கு முடையவன் தோற்கும் மென்றது.* 9

870. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
865 பண்பிலன் பற்றார்க் கினிது.

(இ - ள்.) *ஒருவினை செய்யத்தொடங்குங்கால் பின் வருவன பாரான், பயன்படுவனவற்றைச் செய்யான், அதனால் உறும் பழியைப் பாரான், குணமு மிலன்; இவன் பகைமை பகைவர்க்கு இனிது, (எ - று).*

*இஃது இவன் பகைமையால், பகைவர்க்கு இனிமை உண்டாமென்றது.* 10

---

## 5 - ம் அதிகாரம்.

## பகைத்திறந் தெரிதல்.

*பகைத்திறந் தெரிதலாவது பகையின்கண் செய்யுந் திறமாராய்தல். மேல் பகைகொண்டால் வெல்வாரையுந் தோற்பாரையுங் கூறினார். இனி அப்பகை*

வர்மாட்டுச் செய்புந்திற மெண்ணிச் செய்யவேண்டுமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.

871. உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
880 செம்மல் சிதைக்கலா தார்.



(இ - ள்.) பகைவரது தலைமையைக் கெடுக்க மாட்டாதார், அப்பகைவர் உயிர்க்கு மாத்திரத்திலே அறுதியாகச் சாவா, (எ - று).

இது பகை கொள்ளுங்கால் வலியாரோடு பகைகோடலாகா தென்றது. 1

872. பகையென்னும் பண்பி லதனை யொருவ
871 னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(இ - ள்.) பகை யென்று சொல்லப்படுகின்ற குணமில்லாததனை, ஒருவன் விளையாட்டின்கண்ணும் விரும்பற்பாலதன்று, (எ - று).

இஃது எவ்விடத்தும் பகைகோடல் தீது என்றது 2

873. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
872 சொல்லே ருழவர் பகை.

(இ - ள்.) வில்லை ஏராக உடைய பகைவரோடு பகைகொளினும், சொல்லை ஏராக உடைய உழவரோடு பகை கொள்ளாதொழிக, (எ - று)

இஃது அரசரோடு பகைகொளினும் அமைச்சரோடு பகைகொள்ளலாகா தென்றது. 3

874. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
875 னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(இ - ள்.) பகையிரண்டாய், தான் ஒருவனுமாய், தனக்குத் துணையும் இலனாயின், அப்பகை யிரண்டினுள் ஒன்றை இனிய துணையாகச் செய்துகொள்க.

இஃது இருவரோடு பகைகொள்ளலாகா தென்றது. 4

875. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
873 பல்லார் பகைகொள் பவன்.

(இ - ள்.) பித்து உற்றவரினும் அறிவிலன்; தனியனாயிருந்து பலரோடு பகை கொள்ளுமவன், (எ - று).

இது பலரோடும் பகைகொள்ளலாகா தென்றது. 5

876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்

876 டேறுன் பகாஅன் விடல்.

(இ - ள்.) பகைவனை ஆககமுள்ள காலத்து நட்டோனென்று தெளியலுமாம்; பகைவனென்று ஐயப்படலுமா ட, அழிவுவந்தவிடத்து, தெளிவதுஞ் செய்யாது நீக்குவதுஞ் செய்யாது ஒழுகுக, (எ - று).

இது பகையாயினார்மாட்டு அழிவின்கண் செய்வதோரியல்பு கூறிற்று. 6

877. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
874 றகைமைக்கட் டங்கு முலகு.



(இ - ள்) பகைவரை நட்புபோலக கொண்டொழுகவல்ல பண்புடையவன் பெருமையின்கீழே உலகம தங்கும, (எ - று).

இது பகை கொள்ளாமையால வரும பயன கூறிறறு. 7

878. நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
877 மென்மை பகைவ ரகத்து.

(இ - ள்) தாம் வருநத முறறதனை அறியாதாககு வருதத முறறச சொலலா தொழிக, அதுபோல, பகைவரிடதததத தமது மென்மையைத தோறறுவித்தலை விரு பாதொழிக, (எ - று).

இது பகைவாமாட்டுத தமது மெனமையைத தோற்றுவியா தொழிகவென றது 8

879. இளைதாக முள்மரங் கோல்க களையுநர்
879 கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(இ - ள்) முள் ளாதததை இளைதாகவே களைக, முற்றினவிடதது, தன்னைக களைவார கையைக கொலலுமாதலால, (எ - று).

இது பகைவா வலியாாவதன் முன்னே களைதலவேண்டு மென்றது. 9

880. வகையறிந்து தற்செயது தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(இ - ள்) வினைசெயயும வகையை யறிநது, தனனைப் பெருககி, தானை தனனைக் காகக, பகைவாமாட்டு உணடான பெருமிதம கெடும, (எ - று)

இது பகைவரைக கொலலுந திறங கூறிறறு 10

---

6 - ம் அதிகாரம்.

## உட்பகை.

உட்பகையாவது உடனே வாழும் பகைவர் செய்யுந்திறங் கூறுதல். அஃதாவது புறம்பு நட்டார் போன்றும் சுற்றத்தாராயும் ஒழுகி மனத்தினுற் பகைத்திருப்பார் செய்யுந் திறங்கூறுதல். இதுவும் ஆராய்ந்து காக்கவேண்டுமாதலின், அதன்பின் கூறப்பட்டது.

881. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
882 கேள்போல் பகைவர் தொடர்பு.

(இ - ள்.) வாள்போலக் கொல்லுந் திறலுடைய பகைவரை அஞ்சாதொழிக, புறம்பு நட்டாரைப் போல மனத்தினுற் பகைத்திருப்பார் தொடர்பை அஞ்சுக. ()

இது பகை அஞ்சுவதினும் மிக அஞ்சவேண்டுமென்றது. 1



882. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
883 மட்பகையின் மாணத் தெறும்.

(இ - ள்.) உடனே வாழும் பகைவரை அஞ்சித் தன்னைக் காக்க; அவர் தனக்குத் தளர்ச்சி வந்தவிடத்து, குயவன் கலத்தை அறுக்குங் கருவி போலத் தப்பாமல் கொல்லுவர், (எ - று).

மட்பகை தான் அறுக்குங்கால் பிறரறியாமல் நின்று அறுக்கும். 2

883. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
884 முட்பகை யுள்ளதாங் கேடு.

(இ - ள்.) எள்ளின் பிளவு போன்ற சிறுமைத்தேயாயினும், உடனே வாழும் பகையினுன் ஒருவர்க்குக் கேடு உளதாம், (எ - று).

இது பகை சிறிதென் றிகழற்க வென்றது. 3

884. நிழனீரு மின்னுத வின்னு தமர்நீரு
885 மின்னுவா மின்னு செயின்.

(இ - ள்.) நிழலகத்து நீர் இனிதேயாயினும் அவற்றான் இன்னுத செய்யும் நீர் இன்னுதாகும்; அதுபோல, சுற்றத்தார் நன்மை இனிதாயினும் அவர் இன்னுத வற்றைச் செய்வாராயின், அஃது இன்னுதாயே விடும், (எ - று).

இது சுற்றமென் றிகழற்க என்றது. 4

885. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு

885 துட்பகை யுற்ற குடி.

(இ - ள்.) உட்பகையானது உற்ற குடி, அரத்தினால் தேய்க்கப்பட்ட பொன்னைப் போல, அதனால் பொரப்படாவே வலிதேயும், (எ - று).

இஃது உட்பகை அழுந்த செய்வது போலப் பலத்தைக் கெடுக்கு மென்றது. 5

886. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
887 யுட்பகை யுற்ற குடி.

(இ - ள்.) உட்பகையும் அஃது உற்ற குடியும், செப்பும் மூடியும் பொருந்தினாற்போலப் பொருந்தினவாயினும், பொருத்தமில்லவாம், (எ - று).

உட்பகையுற்றார் செப்பும் மூடியும் ஒன்றுபட்டாற்போல இருந்து, செப்பகத்துப் பொருள் வாங்குவார்க்கு மூடி துணையாய் அகன்று நிற்குமதுபோல அகன்று நிற்பரென்றவாறு. 6

887. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
890 பாம்போ டுடனுறைந் தற்று.



(இ - ள்.) மனத்தினால் பொருத்தமில்லாதாரோடு ஒத்து வாழும் வாழ்க்கை, ஒரு குடிலகத்தே பாம்போடு கூடி வாழ்ந்தாற் போலும். (எ - று).

இது பாம்பு இடம் வந்தால் கடிக்கும்; அதுபோல, உட்பகைவர் இடம் வந்தால் கொல்லுவரென்றது. 7

888. மனமாணா வுட்பகை தோன்றி னினமாணா
884 வேதம் பலவுந் தரும்.

(இ-ள்.) மனம் நன்றாகாத உட்பகை தோன்றுமாயின், தனக்கு இனமாயினார் நல்லராகார்; அஃதன்றிப் பல குற்றங்களும் உண்டாம், (எ - று).

இஃது இனம் பொருந்தாமல் கூடநின்று பகைப்பிக்குமென்றது. 8

889. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையா
885 னேதம் பலவுந் தரும்.

(இ - ள்.) உறவு முறைமையோடே உட்பகை தோன்றுமாயின், அது கெடுதல் முறைமையோடே கூடப் பல துன்பத்தினையும் தரும், (எ - று).

இது சுற்றத்தாராகிய உட்பகையினால் வரும் தீமை கூறிற்று. 9

890. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
886 பொன்றாமை யொன்ற லரிது.

(இ - ள்.) தன் ஒன்றினோரிடத்து ஒன்றாமை உண்டாயின், எஞ்ஞான்றும்

*சாவாமையைக் கூடுதல் அரிது, (எ - று).*

*இது நட்டோராகிய உட்பகையிருல் வரும் தீமை கூறிற்று.* 10

---

## 7 - ம் அதிகாரம்.

## பெரியாரைப் பிழையாமை.

*பெரியாரைப் பிழையாமையாவது தம்மிற் பெரிய அரசரையும், முனிவரையும், அறிஞரையும் பிழைத்தொழுகாமை. மேல் பகையும் பகையின்கண் செய்யும் திறமும் கூறினர். தம்மிற் பெரியார் தம்மைப் பகையாகக் கொள்ளாராயினும், தமது இகழ்ச்சி அவரால் தீமை பயக்குமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

891. கேடல்வேண்டிற் கேளாது செய்க வடல்வேண்டி
893 னாற்று பவர்க ணிழுக்கு.

(இ - ள்.) *தான் கெடுதல் வேண்டுவனாயின், பெரியோரைக் கேளாதே ஒருவினையைச் செய்க, தன்னைக் கொல்ல வேண்டுவனாயின், வலியுடையார் மாட்டே தப்புச்செய்க, (எ - று).* 1



892. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
892 பேரா விடும்பை தரும்.

(இ - ள்.) *பெரியவர்களைப் போற்றாது ஒழுகுவனாயின், அவ்வொழுக்கம் அவராலே எல்லாராலும் இகழப்படும் நீங்காத துன்பத்தைத் தரும், (எ - று).*

*இது முனிவரைப் போற்றா தொழியின், அது குற்றம் பயக்குமென்றது.* 2

893. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
894 காற்றாதா ரின்னா செயல்.

(இ - ள்.) *வலியுடையார்க்கு வலியில்லாதார் இன்னாதவற்றைச் செய்தல், தம்மைக் கொல்லும் கூற்றத்தைக் கைகாட்டி அழைத்தாற்போலும், (எ - று)* 3

894. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்னாந்
897 தகைமாண்ட தக்கார் செறின்.

(இ - ள்.) *எல்லாவகையும் மாட்சிமைப்பட்ட வாழ்க்கையும் மிக்க பொருளும் என்ன பயனுடையனவாம்; பெருமையால் மிக்க தகுதியுடையார் செறுவாராயின், (எ - று).*

*எல்லாவகையுமாவன - சுற்றமும், நட்டோரும், சுற்றமயரும், இல்லும், நிலமும் முதலாயின.* 4

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
895. வேந்து செறப்பட் டவர்.

(இ - ள்.) *எவ்விடத்துச் செல்லினும் எவ்விடத்தும் உளராகார்; வெய்ய வலியையுடைய வேந்தனால் செறப்பட்டார், (எ - று)*

*இது கெட்டுப்போயினும் வேந்தனாற் செறப்பட்டவர் தப்பார் என்றது.* 5

896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
896 பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(இ - ள்) *தீயினால் சுடப்படினும் உய்தல் உண்டாம்; பெரியாரைப் பிழைத்தொழுகுவார் உய்யார், (எ - று).*

*இது முனிவரைப் பிழைத்தலினால் வருங் கேடு கூறிற்று; முற்பட உயிர்க்கேடு வருமென்று கூறினார்* 6

897. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
900 சிறந்தமைந்த சீரார் செறின்.

(இ - ள்) *மிகவும் அமைந்த துணையுடைய ராயினும் கெடுவர்; மிகவும் அமைந்த சீர்மையுடையார் செறுவாராயின், (எ - று).*

*இது துணையுடையாராயினும் உயிர்க்கேடு வருமென்றது.* 7



898. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
899 வேந்தனும் வேந்து கெடும்.

(இ - ள்.) *உயர்ந்த கோட்பாட்டை யுடையார் வெகுள்வாராயின், இந்திரனும் இடையிலே முற்றுத் தன்னரசு இழக்கும், (எ - று).*

*இது பொருட்கேடு வருமென்று கூறிற்று.* 8

899. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
898 நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(இ - ள்.) *மலைபோலப் பெரியாரைக் குறைய மதிப்பாராயின், உலகத்தின் கண்ணே நின்றாற்போலத் தோன்றுகின்றவர் குடியோடே கூடமாய்வர், (எ - று).*

*குன்ற மதித்தல் - அவமதித்தல்.* 9

900. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்

891 போற்றலு ளெல்லாந் தலை.

(இ - ள்.) தவத்தினாலும் வலியினாலும் பெரியாரது வலியை இகழாதொழிதல், தம்மைக் காப்பார்க்கும் காவலாகிய எல்லாவற்றுள்ளும் தலையான காவலாம்.
இது பெரியாரைப் பிழையாமையால் வரும் பயன் கூறிற்று. 10

---

## 8 - ம் அதிகாரம்.

## பெண்வழிச் சேறல்.

*பெண்வழிச் சேறலாவது இன்பங் காரணமாக மனையாள்வழி ஒழுகுதலும், கணிகையரோடுகூடி ஒழுகுதலும், நறவுண்டு களித்தலும், சூதாடலும், இயல்லவன்றி மிக உண்டலுமென ஐந்து வகைப்படும்; அவற்றுள், பெண்வழிச் சேறலாவது மனைவியர் வழியொழுகுதலினால் வரும் குற்றங் கூறுதல்.*

901. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
906 ளமையார்தோ ளஞ்சு பவர்.

(இ - ள்.) தேவரைப்போல இன்புற்று வாழினும், பெருமையிலாராவர்; மனையாளது வேய்போலும் தோளை அஞ்சுபவர், (எ - று).
இது செல்வமுடையாராயினும் பிறரால் மதிக்கப்படாரென்றது. 1

902. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
905 நல்லார்க்கு நல்ல செயல்.

(இ - ள்.) மனையாளை அஞ்சுவான், எஞ்ஞான்றும் நல்லார்க்கு நல்லவை செய்தலை அஞ்சும், (எ - று).
இஃது அறஞ்செய்ய மாட்டானென்றது. 2



903. மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
904 வினையாண்மை வீறெய்த லின்று.

(இ - ள்.) மனையாளை அஞ்சுகின்ற மறுமைப் பயனெய்தாதவன், ஒரு வினையை ஆளுந்தன்மை, பெருமை யெய்துதல் இல்லை, (எ - று).
இது பொருள் செய்ய மாட்டாரென்றது. 3

904. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
903 நல்லாரு ணாணுத் தரும்.

(இ - ள்.) மனையாள்மாட்டுத் தாழ்ந்தொழுகும் இயல்பாகிய கேடு, எல்லா நாளும் நல்லாரிடத்து நாணுதலைத் தரும், (எ - று). 4

905. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
907 பெண்ணே பெருமை யுடைத்து.

(இ - ள்.) பெண்டிர் ஏவின தொழிலைச் செய்தொழுகும் ஆண்மையின், நாணமுடைய பெண்மையே, தலைமை உடைத்தாம், (எ - று).

இது பிறரால் மதிக்கப்படாரென்றது. 5

906. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
908 பெட்டாங் கொழுகு பவர்.

(இ - ள். நல்ல நுதலினை யுடையாள் விரும்பியவாறு செய்தொழுகுவார், தம்மோடு நட்டார் குறைதீர்க்கவுமாட்டார்; அவர்க்கு நல்லது செய்யவுமாட்டார்.

குறைதீர்த்தல் - உற்ற துயரம் தீர்த்தல். 6

907. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
909 பெண்ணேவல் செய்வார்க ணில்.

(இ - ள்.) அறஞ்செய்தலும், அமைந்த பொருள் செய்தலும், ஒழிந்த காம நுகர்தலும், பெண்ணேவல் செய்வார்மாட்டு இல்லையாம், (எ - று).

இஃது அச்சமில்லாராயினும் சொன்னது செய்வாராயின், இம்மூன்று பொருளும் எய்தார் என்றது. 7

908. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
901 வேண்டாப் பொருளு மது.

(இ-ள்.) மனையாளைக் காதலித்தொழுகுவார் நற்பயனைப் பெறார்; யாதானும் ஒருவினையைச் செய்து முடிக்கவேண்டுவார் விரும்பாத பொருளும் அவரை விழையாமை, (எ - று).

இஃது அறத்திலும் பொருளினும் காதலின்றி, அவர்தம்மையே காதலிப்பார்க்கு அறனும் பொருளும் இல்லையாமென்றது. 8

23

909. பேணுது பெண்விழைவா ளுக்கம் பெரியதோர்
902 நாணுக நாணுத் தரும்.

(இ - ள்.) *அறத்தினையும் பொருளினையும் பேணுத மனையாளைக் காதலிப் பானது செல்வம், பெரியதோர் நாணம் உலகத்தே நிற்கும்படியாக, தனக்கு நாணினைத் தரும்,* (எ - று). 9

910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
910 பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

(இ - ள்.) *எண்ணஞ் சேர்ந்த மனத்தினை விரிவாக உடையார்க்கு எல்லா நாளும் பெண்ணைச் சேர்ந்து ஆகும் அறியாமை இல்லையாம்,* (எ - று).
*எண்ணஞ்சேர்தல் - இதனுல் வருங்குற்றத்தினைத் தெரிந்துணர்தல்.* 10

---

## 9 - ம் அதிகாரம்.

## வரைவின் மகளிர்.

*வரைவின்மகளிராவது கணிகையரோடு கலந்தொழுகினுல் வரும் குற்றங் கூறுதல். முயக்கத்தில் வரைவின்மையால், வரைவின் மகளிரென்று கூறப் பட்டது.*

911. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
912 நயன்றூக்கி நள்ளா விடல்.

(இ - ள்.) *தமக்கு உளதாகும் பயனை நோக்கிக் குணமாகக்கூறும் குண மில்லாத மகளிரது இன்பத்தை யாராய்ந்து பார்த்து, அவரைச் சாராதொழிக,* ().
*இதனுலே கணிகையர் இலக்கண மெல்லாந் தொகுத்துக் கூறினர்.* 1

912. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடியா
911 ரின்சொ லிழுக்கந் தரும்.

(இ - ள்.) *அன்பால் கலத்தலின்றிப் பொருளால் கலக்கும் ஆய்தொடியார் சொல்லும் இன்சொல், பின்பு கேட்டினைத் தரும்,* (எ - று). 2

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
913 லேதில் பிணந்தழீஇ யற்று.

(இ - ள்.) பொருளை கருதும் பெண்டிர் ஒருவனோடு பொய்யே முயங்கும் முயக்கம், இருட்டறையினுள்ளே கிடந்ததொரு வேற்றுமைப்பிணத்தைக் கூலிக்குத் தழுவியதுபோலும், (எ - று).

இவை இரண்டினாலும் கணிகையர் கூட்டத்தினால் வரும் குற்றம் கூறப்பட்டது. 3



914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
914 ளாயு மறிவி னவர்.

(இ - ள்.) பொருளைப் பொருளாகக் கொள்வாரது புல்லிய நலத்தைத் தோயார், அருளைப் பொருளாக ஆராயும் அறிவுடையார், (எ - று). 4

915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
915 மாண்ட வறிவி னவர்.

(இ - ள்.) மதிநலத்தாலே மாட்சிமைப்பட்ட அறிவுடையார், எல்லார்க்கும் பொதுவாகிய நலத்தினையுடையவரது புல்லிய நலத்தைச் சேரார், (எ - று).

இது புத்திமான் சேரானென்றது. 5

916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
916 புன்னலம் பாரிப்பார் தோள்.

(இ - ள்.) தம்முடைய நலத்தை உலகின்கண் பரப்புவார் சேரார்; வனப்பினால் களிப்புற்றுத் தமது புல்லிய நலத்தை எல்லாமாட்டும் பரப்புவாரது தோளினை, (எ - று). 6

917. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
918 மாய மகளிர் முயக்கு.

(இ - ள்.) யாதானும் ஒருபொருளை உள்ளவாறு ஆராய்ந்தறியும் அறிவுடையரல்லாதார்க்கு, வருத்தமாமென்று சொல்லுவர், மாயத்தைவல்லமகளிரது முயக்கத்தை, (எ - று).

இஃது இவரை அறிவில்லாதார் சேர்வரென்றது. 7

918. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
917 பேணிப் புணர்பவர் தோள்.

(இ - ள்.) நிறையுடைய நெஞ்சில்லாதவர் தோய்வார்; இன்பமல்லாத பிறவாகிய பொருளை நெஞ்சினுள்ளே விரும்பிவைத்து அன்புற்றாற்போலப் புணருமவரது தோளினை, (எ - று).

இது நிறையில்லாதார் சேர்வரென்றது. 8

919. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
919 பூரியர்க ளாழு மளறு.

(இ - ள்.) முயக்கத்தில் வரைவில்லாத மாணிழையாரது மெல்லியதோளாவது, உயர்வில்லாத கயவர் அழுந்தும் நரகம், (எ - று).

இஃது இழிந்தார் சார்வரென்றது. 9



920. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
920 திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(இ - ள்.) கவர்த்தமனத்தையுடைய பெண்டிரும், கள்ளும், கவறும், திருமகளால் கடியப்பட்டாரது நட்பு, (எ - று).

இது நல்குரவாவார் சார்வென்றது. 10

---

## 10 - ம் அதிகாரம்.

## க ள் ளு ண் ணா மை.

கள்ளுண்ணாமையாவது கள்ளுண்டலைத் தவிரவேண்டுமென்று கூறுதல். இது கணிகையர் கூட்டத்தினுள் வருதலின், அதன் பின் கூறப்பட்டது.

921. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
922 லெண்ணப் படவேண்டா தார்.

(இ - ள்.) கள்ளினை உண்ணுதலொழிக; உண்ணவேண்டின், சான்றோரால் மதிக்கப்படுதலை வேண்டாதார் உண்க, (எ - று). 1

922. ஈன்றாண் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
923 சான்றோர் முகத்துக் களி.

(இ - ள்.) தன்னைப்பயந்தாள் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாது; அங்ஙனமாக, சான்றோர் முன்பு களித்தல் மற்றியாதாகும்? (எ - று).

எல்லார் முன்பும் இன்னுமையே பயப்பதென்றவா றாயிற்று. 2

923. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
924 பேணப் பெருங்குற்றத் தார்க்கு.

(இ - ள்.) நாணமென்று சொல்லப்படுகின்ற நன்மடங்கைத பின்பு காட்டிப் போம்; கள்ளுண்டலாகிய பிறரால் விரும்பப்படாத பெரிய குற்றத்தினையுடையார்க்கு, (எ - று).

இது நாணம் போமென்றது. 3

924. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
921 கட்காதல் கொண்டொழுகு வார்.

(இ - ள்.) பிறரால் மதிக்கவும் படார், தோற்றமும் இழப்பர், எல்லா நாளும் கள்ளின்கண் காதல்கொண்டு ஒழுகுவார், (எ - று).

இது மதிக்கவும் படார், புகழும் இலராவரென்றது. 4

துன்பவியல் - **10** - வது கள்ளுண்ணாமை. 181

925. துஞ்சினார் செத்தாரின் வேறல்ல ரெஞ்ஞான்று
926 நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(இ - ள்.) உறங்கினார் செத்தாரோடு ஒப்பர்; அறிவிழத்தலான், அது போல, எல்லாநாளும் கள்ளுண்பார் நஞ்சுண்பவரோடு ஒப்பர்; மயங்குதலான், ().

இஃது அறிவிழப்பரென்றது. 5

926. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
930 லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(இ - ள்.) தான் கள்ளுண்ணாதபோது கள்ளுண்டு களித்தவனைக் கண்டவிடத்து, தான் கள்ளுண்டபொழுது தனக்குள்ளதாகுஞ் சோர்வினை நினையான் போலும்; நினைப்பனாயின், தவிரும், (எ - று). 6

927. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
929 குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(இ - ள்.) கள்ளுண்டு களித்தவனைக் காரணங் காட்டித் தெளிவித்தல், நீரின்கீழே முழுகினானைத் தீயினாற் சுட்டது போலும், (எ - று).

இது பிறர்சொல்லவும் கேளாரென்றது. 7

928. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
927 கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(இ - ள்.) தங்கள் ஒழுக்கத்தை உள்புகு அறிந்த உள்ளூரார்லே இகழப்படு

வர்; எல்லோரானும் கள்ளுண்ணாவிடத்தை நாடி, அதின்கண்ணே தாழ்வார்,(எ-று.)ப்

929. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
928 தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(இ - ள்.) கள்ளுண்டால் களித்தறியேன் என்பதனைக் கைவிடுக; மனத்தின்கண்ணே கரந்ததூஉம் அப்பொழுதே வாய்சோர்ந்து புலப்படும்; அது கள்ளிற்கு இயல்பு, (எ - று).

உளம் கெடாதென்பார்க்கு இது கூறப்பட்டது. 9

930. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
925 மெய்யறி யாமை கொளல்.

(இ-ள். பயன் அறியாமை யுடைத்து; பொருளினைக் கொடுத்துத் தம்மெய் அறியாமையைச் செய்யும் கள்ளினைக் கோடல், (எ - று).

இது மேற்கூறியகுற்ற மெல்லாம் பயத்தலின், அதனை அறிவுடையார் செய்யா ரென்றது. 10

---



## 11 - ம் அதிகாரம்.

## சூது.

சூதாவது சூதாடினால் வரும் குற்றங்கூறுதல். இது மேற்கூறியவற்றோ டொத்தவியல்பிற்றாதலின், அதன்பின் கூறப்பட்டது.

931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
931 தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று.

(இ - ள்.) வெல்லுமாயினும் சூதினை விரும்பாதொழிக; வென்று பெற்ற பொருளும், தூண்டிலின்கண்ணுண்டாகிய பொருளை மீன் விழுங்கினாற் போலும், (எ - று).

இது பின் கேடுபயக்கு மென்றது 1

932. அகடாரா ரல்லல் உழப்பர் சூதென்னு
936 முகடியான் மூடப்பட் டார்.

(இ - ள்) தமக்கு உள்ளாகிய இந்திரியங்களும் மனமும் இனபுற்று நிறையப்பெறார்; அதுவேயன்றி, அல்லற்படுவதும் செய்வார்; சூதாகிய மூதேவி

யாலே மறைக்கப்பட்டார், (எ - று).

மறைத்தல்-நற்குணங்களைத் தோன்றாமல் மறைத்தல். 2

933. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
939 மடையாவா மாயங் கொளின்.

(இ - ள்.) உடையும், செல்வமும், உணவும், புகழும், கல்வியுமென்று சொல்லப்பட்ட ஐந்தும் சூதினைக் கொள்ளின், சாராவாம், (எ - று).

செல்வம் - பொன்னும், மனையும், பூமியும், அடிமையு முதலாயின. 3

934. உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
933 போஒய்ப் புறமே படும்.

(இ - ள்.) புரளும் கவற்றை இடைவிடாது எக்காலத்தும் கூறுவனாயின், பொருள்வரவு தன்னைவிட்டுப் போய்ப் பிறராற் செல்லும், (எ - று). 4

935. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
937 கழகத்துக் காலை புகின்.

(இ - ள்.) சூதுகழகத்தின்கண்ணே காலைப்பொழுது புகுவானாயின், அது தோன்றுதொட்டு வருகின்ற செல்வத்தினையும் தமக்கியல்பாகிய குணத்தினையும் கெடுக்கும், (எ - று). 5



936. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்கெடுத்
938 தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(இ - ள்.) சூது, முற்படப்பொருளைக் கெடுத்து, அதன்பின்னர்ப் பொய்யை மேற்கொள்ளப்பண்ணி, அருளுடைமையைக் கெடுத்து, அல்லற்படுத்துவிக்கும்.

937. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
932 னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(இ - ள்.) முன்பு ஒருபொருளைப் பெற்று, அவ்வாசையாலே மற்றொரு பொருளினைப் பெறலாமென்று நூறு பொருளை யிழக்கின்ற சூதாடிகளுக்கு

கன்றெய்தி வாழ்வதோரு நெறி உண்டாமோ ? (எ - று). 7

938. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதேபோற் றுன்ப
940 முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(இ - ள்.) *பொருளை இழக்குந்தோறும் பொருளைக் காதலிக்கும் சூது போல, துன்பத்தை உழக்குந்தோறும் இன்பத்திலே காதலுடைத்து உயிர்; இவை இரண்டினுக்கும் அஃதியல்பு,* (எ - று). 8

939. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
934 வறுமை தருவதொன் றில்.

(இ - ள்.) *துன்பமாயின பலவற்றையுஞ் செய்து தலைமையையழிக்கும் சூதுபோல, வறுமையைத் தருவது பிறிதொன்று இல்லை,* (எ - று). 9

940. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி
935 யிவறியா ரில்லாகி யார்.

(இ - ள்.) *கவற்றினையும், கழகத்தினையும், கைத்தொழிலினையும் விரும்பி விடாதவர் முற்காலத்திலும் வறுவியரானார்,* (எ - று).

*கவறு - நெத்தம்; கழகம் - உண்டையுருட்டு மிடம்; கைத்தொழில்-கவடி பிடித்தல்.* 10

---

## 12 - ம் அதிகாரம்.

## *ம ரு ந் து .*

*மருந்தாவது யாக்கை நோயுறாமற் செய்யுந் திறங்கூறுதல். மேல் கடியப்படுவன கூறினார். இனிக்கடியப்படாத உணவும் தன்னளவில் மிகுமாயின் துன்பம் பயக்கு மாதலான், அதுவும் அளவு அறிந்துண்ணவேண்டு மென்று அதன்பின் இது கூறப்பட்டது.*

941. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
942 தற்றது போற்றி யுணின்.



(இ - ள்.) *யாக்கைக்கு மருந்தென்பதொன்று வேண்டா ; குற்றமற முற்*

காலத்து அருந்திய உணவு அற்றமையறிந்து பாதுகாத்து உண்பனாயின், (எ-று).

இஃது இவ்வாறு செய்யின் மருந்து தேடவேண்டாமென்றது. 1

942. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு

943 பெற்றா னெடிதுய்க்கு மாறு.

(இ - ள்.) முன்பு உண்டது அற்றால், பின்பு உண்ணுங்கால் இத்துணை யளவுமென்று தான் அறிந்து உண்க; அஃது உடம்பு பெற்றவன் அதனை நெடுங் காலம் செலுத்துதற்குரியவழி, (எ - று). 2

943. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல

944 துய்க்க துவரப் பசித்து.

(இ - ள்.) முன்பு உண்டவுணவு அற்றதனை அறிந்து, பின்பு அளவும் கடைப்பிடித்து, உண்ணுங்கால் ஒன்றினோடொன்று மாறுகொள்ளாத உணவினை மிகவும் பசித்து உண்க, (எ - று).

மாறுகோடலாவது நெய்யுந் தேனும் இனியவாயினும் தம்மிலளவொக்குமாயின் கொல்லும்; அதுபோல்வதாம். இஃது உண்ணுங்கால் அளவறிந்துண்கவே யன்றி மாறல்லவும் உண்ணவேண்டு மென்றது. 3

944. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி

945 னூறுபா டில்லை யுயிர்க்கு.

(இ - ள்.) சுவையும் வீரியமும் மாறுபாடில்லாத உணவை நீக்கி யுண்பனாயின், தன்னுயிர்க்கு வரும் இடையூறு இல்லை, (எ - று).

மாறுபாடு - பலாப்பழந்தின்றால் சுக்குத்தின்றல். 4

945. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்

946 கழிபே ரிரையான்க ணோய்.

(இ - ள்.) அறம் அளவறிந்து உண்பவன்கண் இன்பம்போல உண்டாம்; மிக உண்பான்கண் நோய், (எ - று). 5

946. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்

941 வளிமுதலா வெண்ணிய மூன்று.

(இ-ள்.) உணவும் உறக்கமும் இணைவிழைச்சும் தன்னுடம்பின் அளவிற்கு மிகினும் குறையினும், நூலோரால் எண்ணப்பட்ட வாதமும் பித்தமும் சீதமு மாகிய மூன்றும் நோயைச் செய்யும், (எ - று). 6

947. நோய்நாடி நோய்முத ஞடி யதுதணிக்கும்
948 வாய்நாடி வாய்ப்பச் செயல்.

*(இ-ள்.) நோயினையும் ஆராய்ந்து, நோய்வருதற்குக் காரணமும் ஆராய்ந்து, அந்நோய்தீர்க்கும் நெறியையும் ஆராய்ந்து, அது தீர்க்குங்கால் தப்பாமற் செய்க. இது நோய் தீர்க்குமாறு கூறிற்று.* 7

948. உற்ரு னளவும் பிணியளவுங் காலமுங்
949 கற்ருன் கருதிச் செயல்.

*(இ - ள்.) நோயுற்றவனது அளவும், நோயினது அளவும், அதுபற்றிய காலமும் அறிந்து, அதற்குத்தக்கவாறு மருந்து செய்க; ஆயுள் வேதம் வல்லவன்.*

949. உற்றவன் றீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
950 றப்பாஞற் கூற்றே மருந்து.

*(இ - ள்.) நோயுற்றவனும், நோய்தீர்க்கு மவனும், மருந்தும், அதற்குத்தக்க மருந்தினைக் காலம் தப்பாமல் இயற்றுவானும் என்றிவ்வகைப்பட்ட நான்கு திறத்தது மருந்து, (எ - று).* 9

950. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
947 ஞேயள வின்றிப் படும்.

*(இ - ள்.) பசியின் அளவன்றி ஆராயாதே மிகவுண்பானுயின், மிகநோய் உண்டாம், (எ - று).*

*இது நோய் தீர்ந்தாலும் பசியளவு அறியாதே உண்பானுயின், மீண்டும் நோயா மாதலான், அளவறிந்து உண்ணல் வேண்டுமென்றது.* 10

துன்பவியல் முற்றிற்று.

---

## 6. குடியியல். (13)

### 1 - ம் அதிகாரம்.

### குடி.

*குடியியலாவது அரசரும், அமைச்சரும், வீரருமல்லாத மக்கள்தமது இயல்பு கூறுதல். கூறிய அம்மூன்றினும் முற்பட்ட குடிப்பிறந்தார் இலக்கணங் கூறுவர்.*

951. நகையீகை யின்சோ லிகழாமை நான்கும்
953 வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(இ - ள்.) முகமலர்ச்சியும், கொடையும், இனியவை கூறுதலும், பிறரை இகழாமையுமாகிய நான்கினையும் மெய்ம்மையுடைய குலத்தினுள்ளார்க்கு அங்க மென்று சொல்லுவர், (எ - று). 1





952. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
951 செப்பமு நாணு மொருங்கு.

(இ - ள்.) உயர்குடிப்பிறந்தார்மாட்டல்லது பிறர்மாட்டு நடுவுநிலைமையும், பழி நாணுதலும், இயல்பாக ஒருங்கே உண்டாகா, (எ - று).

இஃது இற்பிறந்தார் இவையிரண்டும் இயல்பாக உடையரென்றது. 2

953. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
952 மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(இ-ள்.) ஒழுக்க முடைமையும், மெய்ம்மை கூறுதலும், அற்றம் மறைத்தலாகிய நாணமுடைமையும் ஆகிய இம்மூன்றினையும் தப்பார் உயர்குடிப்பிறந்தார்.

954. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
959 குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(இ - ள்.) வித்து நிலத்தின்கண் மறைந்து கிடப்பினும், அது மறைந்து கிடந்தமையை அதன் முளை யறிவிக்கும்; அதுபோல, உயர்குடிப்பிறந்தாரை அவரவர் வாயிற்சொல் அறிவிக்கும், (எ - று). 4

955. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
954 குன்றுவ செய்த லிலர்.

(இ - ள்.) பல கோடிப் பொருளைப் பெறினும், உயர்குடிப்பிறந்தார் தங் குடிக்குத் தாழ்வாயின செய்யார், (எ - று).

இது சான்றாண்மை விடாரென்றது. 5

956. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
955 பண்பிற் றலைப்பிரித லின்று.

(இ - ள்.) வழங்கும் பொருள் தம்மளவிற்குக் குன்றிச் சுருங்கியவிடத்தும், பழய பண்பு வழுவாத குடிப்பிறந்தார் தமது இயல்பினின்றும் நீங்குத லிலர்.

*இது பண்புடைமை விடாரென்றது.* 6

957. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
956 குலம்பற்றி வாழ்துமேன் பார்.

(இ - ள்.) *பொய்யைச் சார்ந்து, அமைவில்லாதன செய்யார்; குற்றமற்ற குலத்தைச் சார்ந்து உயிர்வாழ்வோ மென்று கருதுவார், (எ - று).*

*இது சான்றாண்மை விடார் என்றது.* 7

958. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்வேண்டின்
960 வேண்டுக யார்க்கும் பணிவு.



(இ - ள்.) *ஒருவர் தமக்கு நலத்தை வேண்டுவாராயின், நாணுடைமையை விரும்புக; அவ்வண்ணமே, குலத்தை விரும்புவாராயின், யாவர்மாட்டும் தாழ்ந்தொழுகுதலை விரும்புக, (எ - று).*

*இது பணிந்தொழுக வேண்டு மென்றது.* 8

959. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
957 மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(இ - ள்.) *உயர்குடிப் பிறந்தார்மாட்டுக் குற்றமுளதாயின், அது வானத்தின் மதியின்கணுள்ள மறுப்போல உயர்ந்து விளங்கும்; ஆதலால், குற்றப்பட ஒழுகற்க, (எ - று).*

*இது குற்றஞ் செய்தலைத் தவிரவேண்டுமென்றது.* 9

960. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
958 குலத்தின்க ணையப் படும்.

(இ - ள்.) *ஒருவன் குடிநலத்தின்கண்ணே நீர்மை யின்மை தோன்றுமாயின், அவனைக் குலத்தின்கண் தப்பினவனென்று ஐயப்படுக, (எ - று).* 10

---

## 2 - ம் அதிகாரம்.

## மானம்.

*மானமாவது எக்காலத்தினும் தமது நிலைமையில் திரியாமை. இது குடிப்பிறந்தார்க்கு இன்றியமையாமையின் அதன்பின் கூறப்பட்டது. இது மூன்று வகைப்படும்; தமது தன்மை குன்றுவன செய்யாமையும், இகழ்வார்மாட்டுச்*

செல்லாமையும், இனிவரவு பொருமையுமென.

961\. இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
961 குன்ற வருப விடல்.

(இ - ள்.) இன்றியமையாத சிறப்புடையனவாயினும், தமது தன்மை குறையவரும் பொருளையும் இன்பத்தையும் விடுக, (எ - று).

இது பொருளும் இன்பமும் மிகினும், தன்மை குறைவன செய்யற்க வென்றது. 1

962\. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
963 சுருக்கத்து வேண்டு முயர்வு.

(இ - ள்.) செல்வம் பெருகிய காலத்து எல்லார்க்கும் பணிதல்வேண்டும்; செல்வம் மிகவுஞ் சுருங்கின காலத்துத் தமது தன்மை குறைவுபடாமல் ஒழுகல் வேண்டும், (எ - று). 2



963\. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
962 பேராண்மை வேண்டு பவர்.

(இ - ள்.) தமக்குப் பொருள் மிகுதி உண்டாமாயினும், தகரல்லாதன செய்யார், தலைமையோடே கூடப் பெரிய ஆண்மையை விரும்புவார், (எ - று). 3

964\. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
964 நிலையி னிழிந்தக் கடை.

(இ - ள்.) தலையினின்று இறங்கிய மயிரைப்போல இகழப்படுவர் ; மாந்தர் தமது நிலையினின்று நீங்கித் தாழ ஒழுகின விடத்து, (எ - று) 4

965\. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
965 குன்றி யனைய செயின்.

(இ - ள்.) மலைபோலப் பெரிய உயர்வுடையாரும் தமது தன்மை குறைபடுவா;ஒரு குறைவு வருவனவற்றைக குன்றி அளவாயினும் செய்வாராயின்,(எ- று)

இது மிக்காராயினும் இகழப்படுவ ரென்றது. 5

966\. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
966 றிகழ்வார்பின் சென்று நிலை.

(இ - ள்.) இம்மைப் பயனாகிய புகழைத் தாராதாயின், மறுமைப் பயனாகிய

கவாககத்துப் புகுதலில்லை; ஆயின், தன்னை இகழ்ந்துரைப்பார்பின் சென்று ஒருவன் நிற்கின்றது பின்னை என்னபயனைக் கருதி? (எ - று).

இது தம்மை இகழ்வாரபாட்டுச் சென்று நிற்றலைத் தவிர்க வென்றது. 6

967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
967 கெட்டா னெனப்படுத னன்று.

(இ - ள்.) ஒருவன் தன்னை இகழ்வார்பின் சென்று வாழும் வாழ்க்கையின், அவர்பால் செல்லாத அந்நிலையே நின்று கெட்டானென்று பிறரால் சொல்லப்படுதல் நன்று, (எ - று). 7

968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
968 பீடழிய வந்த விடத்து.

(இ - ள்). தமது பெரிய தகைமை வலியழிய வந்தவிடத்து, சாவாதே இருந்து உயிரினையோம்பி வாழும் வாழ்க்கை பின்பும் ஒருகாலஞ் சாவாமைக்கு மருந்தாமோ, (எ - று).

பெருந்தகைமை அழியவந்தவிடத் தென்று கூட்டுக. 8

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
969 ருயிர்நீப்பர் மானம் வரின்.



(இ - ள்.) ஒருமயிர் நீங்கின் உயிர்வாழாத கவரிமாவைப் போன்ற மானமுடையார், மானம் அழியவரின் உயிர்விடுவர், (எ - று). 9

970. இளிவரின் வாழாத மான முடையா
970 ரொளிதொழு தேத்து முலகு.

(இ-ள்.) இளிவரவு உண்டானால்,உயிர் வாழாத மானமுடையாரது புகழைத் தொழுது துதிக்கும் உலகு, (எ - று). 10

## 3 - ம் அதிகாரம்.

## பெருமை.

பெருமையாவது சிறியா செயல் செய்யாமை. அது பின்பு காணப்படும்.

971. பிறப்போக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்போவ்வா
972 செய்தொழில் வேற்றுமை யான்.

(இ - ள்.) எல்லா வுயிர்க்கும் பிறப்பால் ஒரு வேறுபாடில்லை; ஆயினும், தான்செய் தொழிலினது ஏற்றச் சுருக்கத்தினாலே பெருமை ஒவ்வாது. ( )

எனவே, இது பெருமையாவது குலத்தினால் அறியப்படா தென்பதூஉம் அதற்குக் காரணமும் கூறிற்று. 1

972. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
973 கீழல்லார் கீழல்ல வர்.

(இ - ள்) மேலான இடத்திருந்தாராயினும், மேன்மையில்லாதார் மேன்மக்களாகார்; கீழான இடத்திருந்தாலும், கீழ்மை யில்லாதார் கீழ்மக்களாகார், (எ - று).

இடமென்பது செல்வத்தினால் இருக்குமிடம். 2

973. இறப்போ ரிருந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
977 சீரல் லவர்கட் படின்.

(இ - ள்.) செல்வமானது தனக்கு ஏற்கில்லாதார்மாட்டே நிற்குமாயின், நிலையை இறப்பாரிடத்தே பொருந்தின தொழிலை உடைத்தாம் (எ - று).

சீரல்லவா - பெரியரல்லா 3

974. பெருமை பெருமித மின்மை சிறுமை
979 பெருமித மூர்ந்து விடும்.

(இ - ள்) பெருமையாவது செருக்கின்மை ; சிறுமை செருக்கினை மேற் கொண்டொழுகுமதலான், (எ - று).

மேல் குலத்திருந்தும் பெரியாரைப் பெரியாரென்று கொள்ளல் படாதென் றார் இனிப் பெருமை யிலக்கணம் கூறுவார், முற்பட செருக்கின்மை பெருமையென்று கூறினார். 4



975. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
978 யணியுமாந் தன்னை வியந்து.

(இ - ள்.) பெருமை எக்காலத்தும் பிறரைத் தாழ்ந்தொழுகும்; சிறுமை தன்னைப் பெருக்க நினைத்து அலங்கரிக்கும், (எ - று).

இது பெருமையாவது பணிந்தொழுகுதலென்று கூறிற்று 5

976. அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்

980 குற்றமே கூறி விடும்.

(இ - ள்.) பெருமை பிறருடைய குறையை மறைத்துச் சொல்லும்; சிறுமை அவர்க்குள்ள நன்மை சொல்லுதலைத் தவிர்த்து குற்றத்தையே சொல்லி விடும், (எ - று).

இது குற்றம் கூறுமை பெருமையென்று கூறிற்று. 6

977. ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
971 கஃதிறந்து வாழு மெனல்.

(இ - ள்.) ஒருவனுக்கு மனப்பெருமை புகழாம்; அதனை நீங்கி வாழுமென்று பிறர் சொல்லுதல் ஒருவனுக்கு இளிவாமாதலான், (எ - று).

இது பெருமையாவது நிறையுடைமை யென்று கூறிற்று. 7

978. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
974 தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

* (இ - ள்.) சுவாரா மனத்தினையுடைய மாதர் நிறையின் வழுவாமல் தம் மைத் தாம் காத்துக்கொண்டொழுகுமாறுபோல, பெருமைக் குணனும் ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத் தான் காத்துக்கொண்டொழுகுவானாயின், அவன்கண் உண்டாம், (எ - று). 8

979. சிறியா ருணர்ச்சியு ளில்லை பெரியாரைப்
976 பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(இ - ள்.) சிறுமையுடையார் உணர்வின்கண் இல்லை, பெருமையுடை யாரைப் போற்றித் துணையாகக் கொள்வேமென்னும் கருத்து, (எ - று).

இது பெரியாரைப் பெறுதலும் பெருமையென்று கூறிற்று. 9

980. பெருமை யுடையவ ராற்றுவா ராற்றி
975 னருமை யுடைய செயல்.

(இ - ள்.) பெருமையுடையவர் நெறியினானே செய்யவல்லர்; செய்தற்கு அருமையுடைய செயல்களை, (எ - று).

இது செய்தற்கு அரிய செய்வார் பெரியரென்றது. 10

---

* இது பரிமேலழகருரை.



4 - ம் அதிகாரம்.

# சான்றாண்மை.

*சான்றாண்மையாவது நற்குணங்கள் பலவற்றானும் அமைந்தார் இலக்கணங் கூறுதல். இது பெரும்பான்மையும் அறத்தினால் தலையளி செய்தொழுகுவாரை நோக்கிற்று.*

981. இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
988 திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) *ஒருவனுக்குச் சால்பாகிய வலி உண்டாகப் பெறின், பொருளின்மை இளிவாகாது,* (எ - று).

*இஃது அமைதியுடையராதல் பெறுதற்கரிதென்றது.* 1

982. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
984 சொல்லா நலத்தது சால்பு.

(இ - ள்.) *தவத்துக்கு உறுப்பான சீலங்கள் பல உண்டாயினும், கொல்லாத நலத்தையுடையது தவம்; அதுபோல, சான்றாண்மைக்கு உறுப்பான நற்குணங்கள் பல உண்டாயினும், பிறர் பழியைச் சொல்லாத நலத்தையுடையது சால்பு.* 2

983. அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
983 டைந்துசால் பூன்றிய தூண்.

(இ - ள்.) *அன்புடைமையும், பழிநாணுதலும், ஒப்புரவுடைமையும், கண்ணோட்டமும், மெய்யுரையுமென்று சொல்லப்பட்ட ஐந்தும் சால்பினைத் தாங்கும் தூண்,* (எ - று).

*இஃது இவை ஐந்தும் சால்பிற்கு அங்கமென்றது.* 3

984. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
982 மெந்நலத் துள்ளதூஉ மன்று.

(இ - ள்.) *சான்றோர்க்கு நலமாவது குணநல்லராகுதல்; குணநலம், பிற நலமாகிய எல்லா நலத்தினும் உள்ளதொரு நலமன்று,* (எ - று).

*இது குணநலம் சால்பிற்கு அழகென்றது.* 4

985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
985 மாற்றாரை மாற்றும் படை.

(இ - ள்.) *பெரியார் பெருமையாவது எல்லார்க்கும் தாழ்ந்தொழுகுதல்;*

*சான்றோர் தம் பகைவரை ஒழிக்கும் கருவியும் அதுவே, (எ - று).* 5

986. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
981 சான்றாண்மை மேற்கோள் பவர்க்கு.



* (இ - ள்.) *நமக்குத் தகுவது இதுவென்றறிந்து சான்றாண்மையை மேற்கொண்டொழுகுவார்க்கு, நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாயிருக்குமென்று சொல்லுவர் நூலோர், (எ - று)* 6

987. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
986 துலையல்லார் கண்ணுங் கொளல்.

* (இ - ள்.) *சால்பாகிய பொன்னினளவறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின், அது தம்மினுயர்ந்தார் மாட்டுக் கொள்ளுந் தோல்வியை இழிந்தார் மாட்டுங் கோடல், (எ - று).* 7

988. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
987 லென்ன பயத்ததோ சால்பு.

* (இ - ள்.) *தமக்கின்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின், அச்சால்பு வேறென்ன பயனையுடைத்து, (எ - று).* 8

989. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
989 காழி யெனப்படு வார்.

* (இ - ள்.) *சால்புடைமையாகிய கடற்குக் கரையென்று சொல்லப்படுவார் ஏனைக் கடலுங் கரையுணில்லாத காலந் திரிந்தாலுந் தாந்திரியார், (எ - று).* 9

990. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
990 றாங்காது மன்னோ பொறை.

* (இ - ள்) *பலகுணங்களாலு நிறைந்தவர் தந்தன்மை குன்றுவாராயின், மற்றை யிருநிலந்தானுந் தன்பொறையைத் தாங்காதாய் முடியும், (எ - று)* 10

---

## 5 - ம் அதிகாரம்.

## பண்புடைமை.

991. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
991 பண்புடைமை யென்னும் வழக்கு.

* (இ - ள்.) யாவர் மாட்டு மெளிய செவ்வியராதலால் அரிதாய பண்புடைமையென்னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர். 1

992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
992 பண்புடைமை யென்னும் வழக்கு.

* (இ - ள்) பிறர்மேலன்புடையனாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட் பிறத்தலு மாகிய இவ்விரண்டும், ஒருவனுக்குப் பண்புடைமையென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி, (எ - று). 2

* இக் குறியுள்ள உரையனைத்தும் பரிமேலழகருரை



993. உறுப்பொத்தன் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
993 பண்பொத்த லொப்பதா மொப்பு.

* (இ - ள்.) செறியத்தகாத உடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோடொப்பாகாமையின், அது பொருந்துவதன்று; இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத்தக்க பண்பாலொத்தல், (எ - று). 3

994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
994 பண்புபா ராட்டு முலகு.

* (இ - ள்.) நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயன்படுதலுடையாரது பண்பினை உலகத்தார் கொண்டாடாநிற்பர், (எ - று). 4

995. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
995 பண்புள பாடறிவார் மாட்டு.

* (இ-ள்.) தன்னை யிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின்கண்ணும் இன்னாது; ஆகலாற் பிறர் பாடறிந் தொழுகுவார்மாட்டுப் பகையையுள்வழியும் அஃதுளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன, (எ - று). 5

996. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேன்
996 மண்புக்கு மாய்வது மன்.

* (இ - ள்.) பண்புடையார்கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்றுமுண்டாய் வாராநின்றது; ஆண்டுப் படுதலில்லையாயின், அது மண்ணின்கட் புக்கு மாய்ந்து போவதாம், (எ - று). 6

997. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
997 மக்கட்பண் பில்லா தவர்.

* (இ - ள்.) நன்மக்கட்கேயுரிய பண்பில்லாதவர் அரத்தின் கூர்மை

போலுங் கூர்மையுடையரே யாயினும், ஓரறிவிற்றாய மரத்தினையொப்பர், (எ-று).

998. நண்பாற்று ராகி நயமில செய்வார்க்கும்
998 பண்பாற்று ராதல் கடை.

* (இ - ள்.) *தம்மொடு நட்பினைச்செய்யாது பகைமையைச் செய்தொழுகு வார்மாட்டும் தாம் பண்புடையரா யொழுகாமை அறிவுடையார்க் கிழுக்காம்.* 8

999. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
999 பகலும்பாற் பட்டன் றிருள்.

* (இ-ள்.) *பண்பின்மையான் ஒருவரோடுங் கலந்து உண்மகிழ்தன்மாட்டா தார்க்கு மிகவும் பெரிய ஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட் கிடந்ததாம்,* (எ - று). 9

* *இக் குறியுள்ள உரையனைத்தும் பரிமேலழகருரை.*





1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
1000 கலந்தீமை யாற்றிரிந் தற்று.

* (இ - ள்.) *பண்பில்லாதவன் முன்னை நல்வினையா னெய்திய பெரிய செல்வம் அக்குற்றத்தால் ஒருவர்க்கும் பயன்படாது கெடுதல், நல்லவான்பால் ஏற்றகலத்தின் குற்றத்தால் இன்சுவைத்தாகாது கெட்டாற்போலும்,* (எ-று). 10

## 6 - ம் அதிகாரம்.

## நன்றியில் செல்வம்.

*நன்றியில் செல்வமாவது அறத்தையும் இன்பத்தையும் பயவாத செல்வத்தி னியல்பு கூறுதல். இது பண்பிலாதார்க் குளதாவதொன்றாதலின், அதன் பின் கூறப்பட்டது.*

1001. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
1009 வொண்பொருள் கொள்வார் பிறர்.

(இ - ள்.) *பொருள் தேடுங்கால் பிறர்மாட்டு அன்பு செய்தலையும் நீக்கி, அது தேடிஞெகிய தன்னைக் காத்தலுமின்றி, அறத்தையுஞ் செய்யாது, தொகுத்த*

ஒள்ளிய பொருளைக் கொள்வார் பிறர், (எ - று). 1

1002. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
1003 தோற்ற நிலக்குப் பொறை.

(இ - ள்.) பொருளீட்டுதலை விரும்பிப் புகழை விரும்பாத மாந்தர், தாம் பிறந்த நிலத்துக்குப் பாரமாவர், (எ - று).

இஃது இவர் பிறப்பதினும் பிறவாமை நன்றென்றது. 2

1003. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்ணான்
1001 செத்தான் செயக்கிடந்த தில்.

(இ - ள்.) இடம் நிறைந்த பெரும்பொருளை யீட்டிவைத்தா னொருவன் அதனை நுகரானாயின், செத்தான்; அவன் பின்பு செய்யக்கிடந்தது யாது மில்லை.

இஃது ஈட்டினனாயினும் தானொருபயன் பெறானென்றது. 3

1004. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
1007 பெற்றா டமியண்மூத் தற்று.

(இ - ள்.) பொருளற்றார்க்கு யாதானு மொன்றைக் கொடாதவனுடைய செல்வம், மிக்க அழகினைப் பெற்றாளொருத்தி தனியளாய் முதிர்ந்தாற்போலும்.

இது செல்வம் தானும் ஒருபயன் பெறாதென்றது. 4

* இது பரிமேலழகருரை,



1005. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
1008 ணச்சு மரம்பழுத் தற்று.

(இ - ள்) பிறரால் ஆசைப்படாதவனது செல்வம், ஊர் நடுவுள் பழுத்து நிற்பதொரு நச்சுமரம் பழுத்ததன்மைத்து, (எ - று).

இது நச்சுமரப்பழம் தமதாசையாலே தின்பாருண்டாயின், அவரைக் கொல்லுமென்றது. 5

1006. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ வொருவரா
1004 னச்சப் படாஅ தவன்.

(இ - ள்.) ஒருவராலும் நச்சப்படாத செல்வமுடையவன், தனக்குப் பின்பு நிற்பதென்று யாதினை எண்ணுமோ? (எ - று).

இது புகழில்லையா மென்றது. 6

1007. பொருளானா மெல்லாமென் றீயா திவறு
1002 மருளானா மாணாப் பிறப்பு.

(இ - ள்.) *பொருளினாலே யெல்லாச்சிறப்பும் எய்தலாமென்று பிறர்க்கு யாதொன்றும் ஈயாது உலோபஞ் செய்கின்ற மயக்கத்தினாலே மாட்சிமையில்லாத பிறப்பு உண்டாம்,* (எ - று).

*இது தீக்கதியுள் உய்க்குமென்றது.* 7

1008. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
1005 கோடியுண் டாயினு மில்.

(இ - ள்.) *பிறர்க்குக் கொடுத்தலும் தாம் நுகர்தலும் இல்லாதார்க்குப் பலகோடிப் பொருள் உண்டாயினும் அவை இன்மையோ டொக்கும்,* (எ-று). 8

1009. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
1010 வறங்கூர்ந் தனைய துடைத்து.

(இ-ள்.) *சீருடைய செல்வர் சிறு துனியால் ஈயாதொழிதல், மாரி பெய்யாமை மிக்காற் போலும்,* (எ - று).

*மேற்கூறிய நன்றியில்செல்வ முடையாரன்றி நற்செல்வமுடையாரும் பிறர்க்கு ஈயாராயின், மழை பெய்யாதாயின் உலகம் துன்பமுறுமாறு போல அவர் துன்பமுறுவரென்றவாறு.* 9

1010. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
1006 றீத லியல்பிலா தான்.

(இ - ள்.) *தானுந் துவ்வாது பிறர்க்கும் ஒன்று ஈயாத இயல்பினையுடையான் பெற்ற பெருஞ் செல்வம் குற்றமுடைத்து,* (எ - று). 10

---



## 7 - ம் அதிகாரம்.

## நாணுடைமை.

*நாணுடைமையாவது அறம் பொருள் இன்பங்களிற் பிறர் பழியாமலொழுகுதல்.*

1011. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல

1012 நாணுடைமை மாந்தர் சிறப்பு.

(இ - ள்.) உணவும் உடையும் ஒழிந்தனவும் புன்மக்க ளெல்லார்க்கும் வேண்டும்; தலைமக்களுக்கு விசேடமாக வேண்டுவது நாணுடைமை, (எ - று).

இது நாணம் வேண்டுமென்றது. 1

1012. ஊனைக் குறித்த துயிரெல்லா நாணென்னு
1013 நன்மை குறித்தது சால்பு.

(இ - ள்.) பலவகை உயிரும் மேற்கூறிய எல்லாவற்றினும் உண்டியைக் கருதிற்று; அதுபோல, சால்பு நாணமாகிய நன்மையைக் கருதிற்று, (எ - று).

இது சான்றோர்க்கு நற்குணங்கள் பலவும் வேண்டுமாயினும், இஃது இன்றியமையாதென்றது. 2

1013. நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா
1017 ணாண்டுறவார் நாணாள் பவர்.

(இ-ள்.) நாணுடைமைப் பொருட்டாக உயிரைத் துறப்பார்; உயிர்ப்பொருட்டாக நாணைத் துறவார், நாணம் வேண்டுபவர், (எ - று).

இது நாண் உயிரினும் சிறந்ததென்றது. 3

1014. அணியன்றோ நாணுடைமை சான்றோர்க் கஃதின்றேற்
1014 பிணியன்றோ பீடு நடை.

(இ - ள்.) சான்றோர்க்கு நாணுடைமையாவது அழகன்றோ? அஃதில்லையாயின், பெரிய நடை நோயன்றோ! (எ - று).

இது சான்றோர்க்கழகாவது நாணுடைமை யென்றது. 4

1015. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
1018 னறநாணத் தக்க துடைத்து.

(இ-ள்.) உயர்ந்தார் பலரும் நாணத்தகுவ தொன்றினைத் தான் நாணாது செய்வனாயின், அவனை அறம் நாணியடையா தொழியும் தகுதியுடைத்தாம், (எ - று).

இது நாணமில்லாதாரை அறஞ் சாரா தென்றது. 5



1016. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
1019 நாணின்மை நின்றக் கடை.

(இ - ள்.) ஒழுக்கம் தப்புமாயின், அத் தப்புதல் குலத்தினைச் சுடும்; அது போல, நாணின்மை நிற்குமாயின், தமது நலத்தினைச் சுடும், (எ - று).

*இது கலயில்லையா மென்றது.* 6

1017\. நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
1020 நாணா லுயிர்மருட்டி யற்று.

(இ-ள்.) *மனத்தின்கண் நாணமில்லாதார் இயங்குதல், மரப்பாவை கயிற்றினாலே இயங்கி உயிருள்ளதுபோல மயக்குமதனை யொக்கும்,* (எ - று).

*இது நாணமில்லாதார் மக்களல்லரென்றது.* 7

1018\. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
1016 பேணலர் மேலா யவர்.

* (இ - ள்.) *உயர்ந்தவர் தமக்கு வேலியாக நாணினைக்கொள்வதன்றி அகன்ற ஞாலத்தைக் கொள்ள விரும்பார்.* (எ - று). 8

1019\. கருமத்தா னாணுத னாணுத் திருநுத
1011 லல்லவர் நாணுப் பிற.

(இ - ள்.) *தாம் செய்யும் வினையினாலே நாணுதல் நாணம்; அஃதல்லாத நாணம் அழகிய நுதலினாலே நல்லாராகிய கன்னிகையர் நாணத்தோடொக்கும்.*

*மேற்கூறிய நாணம் எத்தன்மைத் தென்றார்க்கு, இது கூறப்பட்டது.* 9

1020\. பிறர்பழியுந் தம்பழிபோ னாணுவார் நாணுக்
1015 குறைபதி யென்னு முலகு.

(இ - ள்.) *பிறர்க்குவரும் பழியையும் தமக்குவரும் பழியைப்போல அஞ்சி நாணுமவர்களை நாணுக்கு இருப்பிடமென்று சொல்லுவர் உலகத்தார்,* (எ - று).

*இது தம்பழிக்கு அஞ்சி நாணுதலேயன்றிப் பிறர்பழிக்கும் அஞ்சி நாண வேண்டுமென்றது.* 10

*இது பரிமேலழகருரை.*

*இவர் இந்த "நாணென்னும் வேலியைப் பெற்றல்லது ஞாலம்பெற விரும்பார் என்றுரைப்பாரு முளர்" என்றெழுதியிருப்பது மணக்குடவருரையாக விருக்கலாம் போலும்.*

198 திருக்குறள் - பொருட்பால்.

## 8 - ம் அதிகாரம்.

# குடி செயல் வகை.

குடிசெயல்வகையாவது குடியோம்புதல் வேண்டுமென்று கூறுதல். இது காணமுடையார் செயலாதலின், அதன்பின் கூறப்பட்டது.

1021. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
1026 வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(இ - ள்.) ஒருவனுக்கு மிக்க ஆண்மையென்று சொல்லப்படுவது, தான் பிறந்த குடியை ஆளுதலுடைமையை மனத்தின்கண் போக்கிக்கோடல், (எ - று) ஆளுதலுடைமை - குடியோம்புதலை எப்பொழுதுஞ் சிந்தித்தல். எனவே, இது குடியோம்புதல் வேண்டுமென்றது 1

1022. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
1027 மாற்றுவார் மேற்றே பொறை.

(இ - ள்.) போர்க்களத்துச் செல்வார் பலருளராயினும் போர்தாங்கல் வன்கண்ணர்மாட்டே உளதானாற்போல, ஒருகுடியிற் பிறந்தார் பலருளராயினும் குடியோம்பல்வல்லவர்கண்ணதே குடியாகிய பாரத்தைப் பொறுத்தல், (எ - று). 2

1023. ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி
1022 னீள்வினையா னீளுங் குடி.

(இ - ள்.) முயற்சியும் நிரம்பின அறிவும் என்று சொல்லப்பட்ட இரண்டினாலும் வளருகின்ற வினையினாலே குடி உயரும், (எ - று). 3

1024. கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
1021 பெருமையிற் பீடுடைய தில்.

(இ - ள்.) ஒருவன் கருமஞ்செய்தற்கு நான் ஒழியே னென்றுசொல்லுகின்ற பெருமைபோலப் பெருமையுடையது பிறிது இல்லை, (எ - று) 4

1025. இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
1029 குற்ற மறைப்பா னுடம்பு.

(இ - ள்.) சுற்றத்தார்மாட்டு உளதாகிய குறையை மறைக்கக் கருதுவான் உடம்பு, துன்பத்திற்குக் கொள்கலமாம், (எ - று). 5

1026. குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
1028 மானங் கருதக் கெடும்.

குடியியல் - 9 - வது உழவு.

(இ-ள்.) குடியோம்புவார்க்குப் பருவம் இல்லை; தங் குடும்பத்தின் குறையை நினைத்து மடிசெய்து அதனை உயர்த்துவதனுளதாகும் குற்றத்தை நினைக்கக் குடிகெடும் ஆதலான், (எ - று).

இது குடிசெய்வார் இன்பநுகர்ச்சியை விரும்பாரென்றது. 6

1027. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
1024 தாழா துஞற்று பவர்க்கு.

(இ - ள்.) தங்குடியைத் தாழச்செய்யாதே உயரச்செய்யக் கருதுவார்க்கு அவ்வுயர்ச்சி எண்ணாமல் தானே முடிவுபெறும், (எ - று).

கருதினவளவிலே அவரது நல்வினை தானே முடிக்கும்; இவர் தம்கண் அதனை மேற்கோடலே வேண்டுவ தென்றவாறு. 7

1028. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
1023 மடிதற்றுத் தான்முந் துறும்.

(இ - ள்.) குடியை யோம்புவனென்று கருதி முயலுமவனுக்குத் தெய்வம் மடிதற்றுக்கொண்டு தான் முற்பட்டு முயலும், (எ - று).

மடிதற்றல் - தொழில்செய்வார் ஆடையை யிறுக உடுத்தல். 8

1029. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
1025 சுற்றமாச் சுற்று முலகு.

(இ - ள்.) குற்றப்பட ஒழுகுத லிலனாய்த் தன்குடியை யோம்பி வாழுமவனை, உலகத்தாரெல்லாரும் தமக்குற்ற சுற்றமாக நினைத்துச் சூழ்ந்துவருவர். 9

1030. இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
1030 நல்லா ளிலாத குடி.

(இ - ள்.) இடும்பையாகிய கவியம் அடுத்துத் தனது வேரை வெட்டுத லானே வீழும்; பக்கத்திலே அடுத்து ஊன்றுகின்ற முட்டுக்கோல்போலத் தாங்க வல்ல நல்ல ஆண்மக்கள் இல்லாத குடியாகிய மரம், (எ - று).

இது குடியோம்புவாரில்லாக்கால் அக்குடி கெடுமென்று கூறிற்று. 10

---

## 9 - ம் அதிகாரம்.

# உழவு.

உழவாவது உழவின் திறனும் அதனால் வரும் பயனும் கூறுதல்.

1031. சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனா
1031 லுழன்று முழவே தலை.



(இ - ள்.) உழவு ஒழிந்த வல்லா நெறிகளிலும் சுழன்று திரிந்தாலும், ஏருடையவர் வழியே வருவா உலகத்தார்; ஆதலான், வருந்தியும் உழுதல்லே தலைமையுடையது, (எ - று).

இஃது உழவு வேண்டுமென்றது. 1

1032. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
1037 வேண்டாமற் சான்று படும்.

(இ - ள்.) ஒரு பலப்புழுதியைக் கஃசாக உணக்குவனாயின், ஒரு கையாற் பிடித்தது எருவும் இடவேண்டாமல் அமைந்து விளையும், (எ - று).

மேற்கூறிய உழவு செய்யுந்திறன் கூறுவார் முற்படப் புழுதியுணக்க வேண்டுமென்றார். 2

1033. ஏரினு நன்றா மெருவிடுதல் கட்டபி
1038 னீரினு நன்றதன் காப்பு.

(இ - ள்.) உழுகின்றதினும் நன்றாம் எருவிடுதல்; களை கட்டபின்பு நீர் விடுதலினும் நன்றாம் அதனை அழியாமற் காத்தல், (எ - று).

இது பல்கால் உழவு வேண்டுமென்பதூஉம், எருவிடவேண்டுமென்பதூஉம், களைபறிக்க வேண்டுமென்பதூஉம், பசப்புகுதாமற் காக்கவேண்டுமென்பதூஉம் கூறிற்று. 3

1034. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
1039 தில்லாளி னூடி விடும்.

(இ - ள்.) நிலத்திற்கு உரியவன் நாடோறும் அந்நிலத்தின்பாற் செல்லாது மனையகத்திருப்பனாயின், அது தான் செல்லாமையாற் புலந்த இல்லாளைப் போலப் புலந்துவிடும், (எ - று).

இது நாடோறுஞ்சென்று பார்க்க வேண்டுமென்றது. 4

1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது

1035 கைசெய்தூண் மாலை யவர்.

(இ - ள்.) பிறரை இரவார் ; தம்மை இரப்பார்க்குக் கரத்தலின்றி யாதொன்றாயினும் ஈவர் ; கையாலே உழவுத் தொழிலைச் செய்து உண்ணும் இயல்பினையுடையார், (எ - று). 5

1036. உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.



(இ - ள்.) உழவை யுடையவர் அத்தொழிலைச் செய்யாது கைம்மடங்குவராயின், யாதொரு பொருளின்கண்ணும் விருப்புவதனையும் விட்டேமென்பார்க்கு அந்நிலையின்கண் நிற்றல் இல்லை, (எ - று).

எனவே, துறவறத்தின்கண் நிற்பாரை நிறுத்துதல் உழவர்கண்ணதென்றவாறு. 6

1037. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

(இ - ள்.) உலகின்கண் வாழ்வாராவார் உழுதுண்டு வாழ்பவரே ; மற்று வாழ்கின்ற வெல்லோரும் பிறரைத் தொழுது உண்டு அவரேவல் செய்கின்றவர்.

இது செல்வமாவது உழவினால் வருஞ் செல்வமென்றது. 7

1038. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப
ரலகுடை நீழ லவர்.

(இ-ள்.) பல அரசர் குடைநிழலும் தம்மரசர் குடைநிழற்கீழே வரக்காண்பர், குடையில்லா நிழலை யுடையவர், (எ - று).

குடையில்லா நிழலாவது பைங்கூழ் நிழல். இது தாம் வாழ்தலே யன்றித் தம்மரசனையும் வாழ்விப்பரென்றது. 8

(அலகுடைய நீழல்-கதிர்களையுடைய நெற்பயிரின் நிழல்.)

1039. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றார்
தொழுவாரே யெல்லாம் பொறுத்து.

(இ - ள்.) உலகத்தாராகிய தேரினுக்கு அச்சாணிபோல்வார் உழுவாரே ; அதனைச் செய்யாதாரே பிறர் பெருமிதத்தினால் செய்வனவெல்லாம் பொறுத்துத் தொழுது நிற்பார், (எ - று).

இஃது உழுவார் தம்மையும் அரசனையும் பெரியராக்குதலன்றி உலகத்தையும் தாங்குவரென்பது கூறிற்று. 9

1040. இலமென் றசைஇ யிரப்பாரைக் காணி
1041 னிலமென்னு நல்லா ணகும்.

(இ - ள்.) பொருளிலோமென்று சோம்பி இரப்பாரைக் கண்டால், நிலமாகிய நல்லாள் இகழ்ந்து நகும், (எ - று).

இது நிலம் மடியில்லாதார்க்கு வேண்டியது கொடுக்கு மென்றது. 10

---



## 10 - ம் அதிகாரம்.

## நல்குரவு.

நல்குரவாவது பொருளில்லாதார்க்கு உளதாகுங் குற்றங் கூறுதல். இஃது உழவில்லாதார்க்கு உளதாவ தொன்றாதலின், அதன்பின் கூறப்பட்டது.

1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
1041 னின்மையே யின்னா தது.

(இ - ள்.) நல்குரவுபோல இன்னாதது யாதெனின், நல்குரவுபோல இன்னாதது தானே, (தானே - நல்குரவே), (எ - று).

இது தன்னை யொத்த இன்னாதது பிறிதில்லை யென்றது. 1

1042. இன்மை யெனவொரு பாவி மறுமையு
1042 மிம்மையு மின்றி விடும்.

(இ - ள்.) நல்குரவென்று கூறப்படுகின்ற நிகரில்லாத பாவத்தை யுடையவன், இம்மையின்கண்ணும் மறுமையின்கண்ணும் நுகர்ச்சி யின்றி விடும். ( ) தன்மம் பண்ணுமையால், மறுமையின்கண்ணு நுகர்ச்சியில்லாமை யாயிற்று.
இது நல்குரவு துன்பமாக்கு மென்றது. 2

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
1043 நல்குர வென்னு நசை.

(இ-ள்.) தொன்றுதொட்டு வருகின்ற குடிப்பிறப்பினையும் வடிவழகினையும் ஒருங்கு கெடுக்கும்; நல்குரவென்று சொல்லப்படுகின்ற ஆசைப்பாடு, (எ - று).

நல்குரவு ஆசையைப் பண்ணுதலினால், ஆசையாயிற்று. தோல்-ஆகுபெயர்.

இது குலத்தினையும் அழகினையும் கெடுசெருமென்றது 3

1044. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
1046 சொற்பொருள் சோர்வு படும்.

(இ - ள்.) நல்ல பொருளினை மிகவும் ஆராய்ந்து சொல்லினும், நல்கூர்ந்தார் சொல்லும் பொருள் சோர்வு படும், (எ - று).

ஏற்றுக்கொள்வாரில்லை யென்றவாறாயிற்று. இது கல்வி கெடும்; சுற்றத்தாரும் கைவிடுவ ரென்றது. 4

1045. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குரைத்
1045 துன்பங்கள் சென்று படும்.

(இ - ள்.) வறுமை யெனப்படும் இடும்பையுள் பலவாகிய வன்மையுடைய துன்பங்கள் வந்து சோர்வுபடும், (எ - று).



இது துன்பங்கள் சென்றுளவாமென்றது. பல்குரைத் துன்பம்-இரப்பார்க்கு உரைக்கத் துன்பம். 5

1046. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
1049 யாதொன்றுங் கண்பா டரிது.

(இ - ள்) நெருப்பினுள்ளே கிடந்து உறங்குதலும் ஆகும்; நிரப்பிடும்பையுள் உறங்குதல் யாதொரு முகத்தினானும் அரிது, (எ - று).

இஃது உறங்கவொட்டா தென்றது. 6

1047. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
1048 கொன்றது போலு நிரப்பு.

(இ - ள்.) இன்றும் வருமோ போலும்; நெருநற்றும் என்னைக் கொன்றதுபோலுற்ற நிரப்பிடும்பை, (எ - று)

இது நாடோறும் அச்ச முறுத்து மென்று கூறிற்று. 7

1048. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
1044 சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(இ - ள்.) நல்குரவு, குடிப்பிறந்தாமாட்டும் இளிவரவான சொற்கள் பிறக்குஞ் சோர்வினை உண்டாக்கும், (எ - று). 8

1049. துப்புர வில்லார் துவரத் துறவாமை

1050 யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(இ - ள்.) நுகரும்பொருள் இல்லாதார் பொருளின்மேற் பற்றறத் துறவாது வருந்துதல், உப்பிற்குங் காடிக்குங் கேடாகும் இடியாம், (எ - று).

துறப்பாராயின், நன்றென்றவாறாயிற்று. நல்கூர்ந்தார்க்குத் துன்ப முறுத லன்றி, இன்ப நுகரும் நெறியுளவோ என்றார்க்கு, இது துறப்பாராயின், இன்ப முறலா மென்று கூறிற்று. 9

1050. அறஞ்சாரா நல்குர வின்றதா யானும்
1047 பிறன்போல நோக்கப் படும்.

*(இ - ள்.) அறத்தோடு இயைபில்லாத நல்குரவுடையான் தன்னை யீன்ற தாயானும் பிறனைக் கருதுமாறு போலக் கருதி நோக்கப்படும், (எ - று). 10

* இது பரிமேலழகருரை.

---



## 11 - ம் அதிகாரம்.

## இ ர வு.

இரவாவது பிறர்மாட்டுச்சென் றிரந்து கோடல். இது நல்கூர்ந்தார் செயலாதலின், அதன்பின் கூறப்பட்டது.

1051. இரக்க விரத்தக்கார்க் காணிற் கரப்பி
1051 னவர்பழி தம்பழி யன்று.

(இ - ள்.) தமக்கு இல்லாதவிடத்து இரக்கத்தக்காரைக் காணின், இரந்து கொள்க; அவர் இல்லை யென்பாராயின், அஃது அவர்க்குப் பழியாம்; தமக்குப் பழியாகாது, (எ - று).

இது கூறுகின்ற இரத்தல் எல்லார்மாட்டுஞ் செயலாகாதென்பதூஉம், தக்கார் மாட்டிரத்தலென்பதூஉம் கூறிற்று. 1

1052. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்துகோண்
1059 மேவாரில் லாத கடை.

(இ - ள்.) இரந்து கோடலைப் பொருந்துவார் இல்லாதவிடத்து ஈயக்கருதி

யிருப்பார்மாட்டுப் புகழ் யாதான் உண்டாம், (எ - று).

இஃது இரப்பாரில்லாராயின், புகழுடையார் இலராவர்; ஆதலால், இரவு பழிக்கப்படா தென்றது. 2

1053. இன்ப மொருவர்க் கிரத்த லிரந்தவை
1052 துன்ப முறுஅ வரின்.

(இ - ள்.) இரத்தல் ஒருவர்க்கு இன்பமாம்; இரக்கப்பட்ட பொருள்கள் தான் வருத்தமுறாதவகை எய்துமாயின், (எ - று).

இது வேண்டிய பொருள் பெறின், துன்பமாகா தென்றது. 3

1054. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞால
1058 மரப்பாவை சென்றுவந் தற்று.

(இ - ள்.) குளிர்ந்த இடத்தையுடைய பெரிய உலகம் இரக்குமவர்களை உடைத்தல்லவாயின், உள்ள மக்களது இயக்கம் மரப்பாவை சென்றுவந்து இயங்கினாற்போலும், (எ - று).

இஃது இரத்தலும் ஈதலும் உலகியல்பாதலான், இரத்தல் இழிவென்று கொள்ளப்படா தென்றது. 4



1055. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
1057 முள்ளு ளுவப்ப துடைத்து.

(இ - ள்.) இரப்பாரைக் கண்டால் உதாசனித்தலும் இன்றி, அவர் சொன்ன மாற்றத்தை இகழ்ந்துரைத்தலும் செய்யாது, வேண்டப்பட்டதனைக் கொடுப்பாரைக் காணின், இரந்து சென்றவர் மனம் மகிழ்ந்துநின்று உள்ளுள்ளே இன்புறுந் தன்மை யுடைத்து, (எ - று). 5

1056. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
1054 கனவிலுந் தேற்றுதார் மாட்டு.

(இ - ள்.) கரத்தலைக் கனவின்கண்ணும் அறியாதார்மாட்டு, இரந்து சேறலும் கொடுப்பதனோடு ஒக்கும், (எ - று).

ஈதலேபோலும் என்பதற்கு 'கரத்தல் கனவிலுந் தேற்றுதார்' என்றமையால் இரப்பான் தாரானென்று கொள்ளப்படும். 6

1057. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
1056 யெல்லா மொருங்கு கெடும்.

(இ - ள்.) *கரப்பிடும்பை இல்லாதாரைக் காண்பாராயின், நிரப்பினன் ஆகிய இடும்பை யெல்லாம் ஒருங்கு கெடும், (எ - று).*

*கரப்பிடும்பை யில்லார் என்றமையால், இது செல்வாயினர்மாட்டு இரக்க லாகா தென்றது.* 7

1058. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
1053 றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(இ - ள்.) *கரப்பிலாத நெஞ்சினை யுடைய ஒப்புரவறிவார் முன்பே நின்று, இரத்தலும் ஓரழகுடைத்து, (எ - று).*

*இஃது ஒப்புர வறிவார்மாட்டு இரத்தலா மென்றது.* 8

1059. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
1055 றிரப்பவர் மேற்கொள் வது.

(இ - ள்.) *ஒருவன் முன்னே நின்று இரத்தலை இரப்பார் மேற்கொள்வது, கரப்பில்லாதார் உலகத்து உண்டாதலானே, மற்றொன்றாலன்று, (எ - று).*

*மேல் கரவாதார்மாட் டிரக்கவென்றா உலகத்தில் அவரைப் பெறுத லரி தென்றூர்க்கு, இது கூறினார்.* 9

1060. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை
1060 தானேயுஞ் சாலுங் கரி.



(இ - ள்.) *ஒருவனை யிரந்தான் அவன் ஈந்தில னென்று தான் வெகுளா தொழிதல் வேண்டும்; பொருளரிதென்பதற்குத் தன்னுடைய நிரப்பிடும்பை தானேயும் அமையுஞ் சான்று, (எ - று).*

*இஃது இரப்பார்க்கு வேண்டியதோ ரியல்பு கூறிற்று.* 10

---

## 12 - ம் அதிகாரம்.

## இரவச்சம்.

*இரவச்சமாவது இரத்தலைத் தவிரவேண்டுமென்று கூறுதல். மேல் நல்கூர்ந் தார் இவர்மாட்டே இரத்த லமையுமென்று பொதுப்படக் கூறினாராயினும்,*

மேலாயினார்க்கு அது தகுதியன்றென்பது குறித்து இவ்வதிகாரம் கூறப்பட்டது. இது மேலதனோடியையும்.

1061. இரப்ப விரப்பாரை யெல்லா மிரப்பிற்
1067 கரப்பா ரிரவன்மி னென்று.

(இ - ள்.) பிறர்மாட்டு இரந்து செல்வா ரெல்லாரையும் யானிரந்து கொள்ளாநின்றேன்; இரக்குமிடத்து, இல்லை யென்பவர்மாட்டு ஒரு பொருளை இரந்து சொல்லன்மின் என்று சொல்லி, (எ - று).

இரந்து சொல்லாமை இரந்து பெற்ற பொருளினும் கோடிமடங்கு மிகுதி யுடைத்தென்றவாறு. இஃது ஈவார்மாட்டும் இரத்தலாகா தென்றது. 1

1062. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
1066 கிரவி னிளிவந்த தில்.

(இ - ள்.) இப் பசுவிற்குத் தண்ணீர் தருமினென்று பிறரை இரப்பினும், நாவினுக்கு இரத்தல்போல இளிவரவு தருவது பிறிது இல்லை, (எ - று).

இஃது அறத்திற்காக இரத்தலும் ஆகா தென்றது. 2

1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
1063 வன்மையின் வன்பாட்ட தில்

(இ - ள்.) வறுமையாலுற்ற துன்பத்தைப் பிறர்மாட்டு இரந்து பெற்ற பொருளினாலே தீர்ப்பேமென்று கருதுகின்ற வன்மைபோல, வன்பாயிருப்பது பிறிது இல்லை, (எ - று).

இஃது இரந்தாலும் நல்குரவு தீரா தென்றது. 3

1064. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
1068 பார்தாக்கப் பக்கு விடும்.



(இ - ள்.) ஒருவன் வறுமையாகிய கடலை நீந்திக் கடக்க அமைத்துக் கொண்ட இரத்தலாகிய அரணில்லாத தோணி, இரக்கப்பட்டார்மாட்டுக் கரத்தலாகிய கல்லோடே தாக்க இறந் நவிடும், (எ - று).

இஃது நல்குரவு தீராமைக்குக் காரணங் கூறிற்று. 4

1065. இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
1069 வுள்ளதூஉ மின்றிக் கெடும்.

(இ - ள்.) இரப்பெற்று நினைக்க உள்ளம் கரையும்; இரக்கப்பட்டவர்

காக்கு மதனை நினைக்க, கரைந்து நின்ற உள்ளமும் மாய்ந்து செடும், (எ - று).

இஃது இரப்பார்க்கு ஆக்கமில்லை என்றது 5

1066. கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ விரப்பார்க்குச்
1070 சொல்லாடப் போஒ முயிர்.

(இ - ள்.) எமக்கு யாதும் இல்லை; சிறிது ஈயவேண்டுமென்று சொல்லுவார்க்கு, குறித்தவர்கள் இல்லையென்று சொன்ன அளவிலே அவர் உயிர்போய்ப் பிணமபோல நிற்பார். பொருள் உடையாராய வைத்து அவர் சொன்ன இல்லையென்னுஞ் சொல்லையே சொல்லி ஈயாதார்க்கு உயிர் எவ்விடத்து ஒளித்து நிற்கின்றதோ, (எ - று)

இது பிணத்தை யொப்பரென்றது. 6

1067. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
1061 மிரவாமை கோடி யுறும்.

* (இ - ள்.) தமக்குள்ளது கரவாது இவர் வசப்பெற்றேமென்று உண்மகிழ்ந்துகொடுக்குங் கண்போலச் சிறந்தாரமாட்டும் இரவாதே ஒருவன் வறுமைகூர்தல் இரந்து செல்வமெய்தலின் கோடிமடங்கு நன்று, (எ - று). 7

1068. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
1062 கெடுக வுலகியற்றி யான்.

(இ - ள்.) தப்புதல் இல்லாக்கால இறந்துபடாதே பிறர்மாட்டு இரந்துகொண்டும் உயிர் வாழ்தல் வேண்டுமாயின், உலக நடையை இவ்வாறாகக் கற்பித்த முதல்வன் மிகக் கெடுவானாக வேண்டும், (எ - று).

இஃது இரக்கு மதனின், இறத்தல் அமையு மென்றது. 8

1069. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
1065 துண்ணலி னூங்கினிய தில்.

(இ - ள்.) மோரினும் காடியினும் அடப்பெறாது தெளிந்த நீரினாலே யட்ட புற்கையாயினும், தனது தாளாண்மையால் வந்ததனை உண்ணுதலின் மிகஇனிதாயிருப்பது பிறிது இல்லை, (எ - று). 9

* இது பரிமேலழகருரை.

1070. இடமெல்லாங் கோள்ளாத் தகைத்தே யிடனில்லாக்
1064 காலு மிரவோல்லாச் சால்பு.

(இ - ள்.) தஞ்சுற்றத்தளவு தமக்கு வருவாய் இல்லாக் காலத்தினும், பிறரை இரத்தற்கு இசையாத சால்பு, அகன்ற வுலகமெல்லாம் கொள்ளாத பெருமையே யுடைத்து, (எ - று).

இஃது இரவாதார் பெரிய ரென்றது. 10

## 13 - ம் அதிகாரம்.

## கயமை.

கயமையாவது இழிகுணத்தாராகிய மாந்தரியல்பு கூறுதல். இவர் மேற்கூறப்பட்ட எல்லாரினும் இழிந்தாராதலின், இது பின் கூறப்பட்டது.

1071. மக்களே போல்வர் கயவ ரவரன்ன
1071 வொப்பாரி யாங்கண்ட தில்.

(இ - ள்.) மக்களை யொப்பவர் கயவர், அம்மக்களை யொக்குமாறுபோல ஒப்பது ஒன்றனோடு மற்றொன்று உவமை கூறப்படுமவற்றில் யாங்கண்டறிவது இல்லை, (எ - று).

உறுப்பொத்துக் குணமொவ்வாமையால், கயவர் மக்களல்லராயினர். 1

1072. தேவ ரனையர் கயவ ரவருந்தா
1073 மேவன செய்தொழுக லான்.

(இ - ள்.) கயவர் தேவரை யொப்பவர்; அத்தேவரும் இக்கயவரைப்போலத் தாம் வேண்டியன செய்தொழுகுவாராதலான், (எ - று).

இது கயவர் வேண்டியன செய்வாரென்றது. 2

1073. நன்றறி வாரிற் கயவர் திருவுடையார்
1072 நெஞ்சத் தவல மிலர்.

(இ - ள்.) நன்மையறிவாரினும் கயவர் திருவுடையர்; இம்மை மறுமைக்கு உறுதியாயின செய்யப்பெறுகிலேமென்னும் கவற்சி நெஞ்சின்கண் உறுதலிலராதலான், (எ - று).

இது தாமறியா ரென்பது. 3

1074. அச்சமே கீழ்கள தாசார மேச்ச

1075 மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.



(இ - ள்.) *கயவர் ஆசாரமுடைய ராதற்குக் காரணம் அச்சமே; அஃ தொழிய, ஒருபொருள்மேல் ஆசையுடையாராயின், அது காரணமாகவும் சிறிது ஒழுக்கம் உண்டாம்,* (எ - று)

*இஃது இயல்பான ஒழுக்கம் இலரென்றது.* 4

1075. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
1074 மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(இ - ள்.) *மனையகத்திருந்து பொற்புடையாராகிய பெண்டிரைக் காணின், அவரினும் மிகப்பொற்புடையாராய் அதனைப்பெற்றே மென்று இறுமாப்பர் கயவர்,* (எ - று).

*இது நிறையிலரென்றது.* 5

1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
1076 மறைபிறர்க் குய்த்துரைத்த லான்.

(இ - ள்.) *கயவர் அறையும் பறைபோல்வர்; தாங்கேட்ட மறைகளைப் பிறர்க்குக் கொண்டு சென்று அறிவித்தலான்,* (எ - று).

*இஃது அடக்கமில ரென்றது.* 6

1077. உடுப்பதூஉ முண்பதூஉங் காணிற் பிறர்மேல்
1079 வடுக்காண வற்றாகுங் கீழ்.

(இ-ள்.) *பிறர் உடுப்பதனையும் உண்பதனையும் காண்பாராயின், அவர்மாட்டு உள்ள குற்றங்களை ஆராயவல்லாராவர் கயவர்,* (எ - று).

*இஃது அழுக்காறுடையா ரென்றது.* 7

1078. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
1077 கூன்கைய ரல்லா தவர்க்கு.

(இ - ள்.) *தங்கதுப்பினை ஒடிக்கும் வளைந்தகையினை உடைய ரல்லாதார்க்கு, ஈரக்கையையுந் தெரியார் கயவர்,* (எ - று).

*ஈரக்கை - கழுவினகை. இஃது இரப்பார்க்குக் கொடாரென்றது.* 8

1079. சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்

1078 கொல்லப் பயன்படுங் கீழ்.

27



(இ-ள்.) பிறர் தங்குறையைச் சொல்ல அதற்கு இரங்கிப் பயன்படுவர் மேன் மக்கள்; அவ்வாறன்றி, கரும்பு பயன்படுமாறுபோலத் தம்மை நெருக்கினால் பயன்படுவர் கீழ்மக்கள், (எ - று).

இஃது ஒறுப்பார்க்குக் கொடுப்பரென்றது. 9

1080. எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
1080 விற்றற் குரியர் விரைந்து.

(இ - ள்.) கயவர் யாதினுக்குவல்லரெனின், தமக்கு ஒருதுன்பமுற்றால் விரைந்து தம்மை விற்க வல்லர், (எ - று).

இது நிலையில ரென்றது. 10

குடியியல் முற்றிற்று.

பொருட்பால் முற்றிற்று.



# 3. காமத்துப் பால். (25)

இதனுள் தகையணங்குறுத்தல் முதலாகப் புணர்ச்சி மகிழ்தலீறாக அருமை யிற்கூடலும் அதற்கு நிமித்தமுமாகிய அதிகாரம் மூன்றும், நலம்புனைந் துரைத்தல் முதலாகப் புணர்ச்சி விதும்பலீறாகப் பிரிந்துகூடலும் அதற்கு நிமித்தமுமாகிய அதிகாரம் பதினெட்டும், நெஞ்சொடுகிளத்தல் முதலாக ஊடலுவகை யீறாக ஊடிக் கூடலும் அதற்கு நிமித்தமுமாகிய அதிகார நான்கும், ஆக இருபத்தைந் ததிகாரம் கூறப்பட்டது.

# 1. களவியல். (7)

## 1 - ம் அதிகாரம்.

## தகையணங்குறுத்தல்.

*தகையுணங்குறுத்தலாவது மைந்தர்க்கும் மகளிர்க்கும் கலவியினுளாகிய இன்பப்பகுதி கூறுதல். அஃதெங்ஙனங் கூறினாரெனின், ஒருவனுக்கு இன்பங் கலத்தற்கிடம் *கன்னியரும் கணிகையரும், பிறர்தாரமுமென மூவகையல்லதில்லை; அவற்றுள், பிறர்மனைக் கூட்டம் பாவந்தருமென்று அறத்துப்பாலுட் கூறிக் கணிகையர் கூட்டம் பொருட்கேடு தருமென்று பொருட்பாலிற் கூறினாராதலின், அறனும் பொருளும் இன்பமும் வழுவாமல் வருவது கன்னியர் கூட்டமென்றாரென்பது.*

1081. நோக்கினா ளேக்கெதிர் நோக்குத ருக்கணங்கு
1082 தானைக்கோண் டன்ன துடைத்து.

(இ - ள்.) இவ்வழகினையுடையவள் எனது நோக்கின் எதிர் நோக்குதல், தானே வருத்தவல்ல தெய்வம் அஞ்சாமல்வரும் தானையைக் கொண்டுவந்தது போலும், (எ - று).

*தானைக்குஉவமை நோக்கம். இது மெய்கண்டு வருந்துவான் கண் கண்டதனால் வருத்த மிக்கது கூறியது.* 1

1082. பண்டறியேன் கூற்றென் பதனை யினியறிந்தேன்
1083 பெண்டகையாற் பேரமர்க் கட்டு.



(இ-ள்.) *பண்டு கூற்றின்வடிவு இன்னபெற்றித்தென்பதை அறியேன்; இப்பொழுது அறிந்தேன்; அது பெண்டகையோடே பெருத்துஅமர்த்த கண்களையுடைத்து,* (எ - று).

*இது நம்மை வருத்துதற்குத் தக்காளென்னுங் குறிப்பு.* 2

1083. கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப்
1084 பேதைக் கமர்த்தன கண்.

(இ - ள்.) தம்மைக்கண்டவர்கள் உயிரையுண்ணும் தோற்றத்தாலே, பெண் தகைமையையுடைய பேதைக்கு ஒத்தன கண்கள், (எ - று).

அமர்தல் - மேவல். இது பேதையோடு ஒத்த தொழிலுடைத்தென்று கண்ணின் கொடுமையை யுட்கொண்டு கூறியது. 3

1084. கொடும்புருவங் கோடா மறைப்பி னடுங்கஞர்
1086 செய்யல மன்னிவள் கண்.

(இ - ள்.) வளைந்த புருவங்கள் தாம் செப்பமுடையனவாய் விலக்கினவாயின், இவள் கண்கள் அவற்றைக்கடந்து போந்து எனக்கு நடுங்கும் துன்பத்தைச் செய்யலாற்று, (எ - று).

இது மேல் தலைமகன் கூறிய சொற்கேட்டுத் தலைமகள் தலையிறைஞ்சிய வழி, கண்ணை மறைத்துத் தோற்றிய புருவ முறிவுகண்டு அவன் கூறியது. 4

1085. ஒண்ணுதற் கோஒ வுடைந்ததே ஞாட்பினு
1088 ணண்ணாரு முட்குமென் பீடு.

(இ - ள்.) இவ்வொள்ளிய நுதற்கு மிகவுங் கெட்டது, போரின்கண் கிட்டாதாரும் உட்கும் எனது வலி, (எ - று).

இது மேற்கூறிய தலைமகன் மிகவுங் கவிழ்ந்து நிலநோக்கிப் புருவத்தின் மேற்றோன்றிய தலைமகள் நுதல் கண்டு கூறியது. 5

1086. கூற்றமோ கண்ணோ பிணையோ மடவர
1085 னோக்கமிம் மூன்று முடைத்து.

(இ - ள்.) சொடுமை செய்தலால் கூற்றமோ? ஓடுதலால் கண்ணோ? வெருவுதலால் மானோ? மடவரலே! நினதுநோக்கம் இம்மூன்று பகுதியையும் உடைத்து, (எ - று).

இக் கொடியபுருவம் இவள் கண் என்னைத் துன்பஞ்செய்வதன் முன்னே அதனைக்கோடி மறைத்ததாயினும், அஃது அதனைக் கடத்தலும் உடையது; அத



னால், அவற்றுள் யாதோ? என்றவாறு. இது தலைமகள் குறிப்பறிதற்பொருட்டுத் தலைமகன் கூறியது. 6

1087. பிணையேர் மடநோக்கு நாணு முடையாட்
1089 கணியெவனோ வேதில தந்து.

(இ - ள்) பிணையையொத்த மடப்பத்தினையுடைய நோக்கினையும் நாணினையும் உடையவட்குப் பிறிது கொணர்ந்து அணிவது யாதினைக் கருதியோ? பிறரை வருத்துதற்கு இவைதாமே அமையும், (எ - று).

இது தான் அவளைக் கொடுமை கூறுவான்போல நலம் பாராட்டியது. 7

1088. கடாஅக் களிற்றின்மேற் கட்படா மாதர்
1087 படாஅ முலைமேற் றுகில்.

(இ - ள்) மதயானை முகத்துக் கண்மறைவாக இட்ட படாம்போலும்; மாதரே! நினது படாமுலைமேல் இட்ட துகில், (எ - று). 8

1089. அணங்குகொ லாய்மயில் கொல்லோ கனங்குழை
1081 மாதர்கொல் மாலுமென் னெஞ்சு.

(இ - ள்) இக் கனங்குழையை யுடையாள் தெய்வக்கொல்லோ? நல்லதோர் மயில் கொல்லோ? அன்றி, மக்களுள்ளாள் கொல்லோ? என்மனம் மயங்காநின்றது; அவற்றுள் யாதோ? (எ - று). 9

1090. உண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
1090 கண்டார் மகிழ்செய்த லின்று.

(இ - ள்.) அடப்பட்ட நறவு, உண்டாரையட்டலல்லது காமம்போலக் கண்டாரமாட்டு மகிழ்வு செய்தலின்று, (எ - று).

இது தலைமகள் தலைமகனைக் கண்டுழி வருத்தமுற்றுக் கருதியது. 10

## 2 - ம் அதிகாரம்.

## குறிப்பறிதல்.

குறிப்பறிதலாவது தலைமகளுள்ளக் குறிப்பினைத் தலைமகனறிதல்.

1091. இருநோக் கிவளுண்க ணுள்ள தொருநோக்கு
1091 நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

(இ - ள்.) இவள் உண்கண்ணுள்ள நோக்கம் இரண்டுவகைத்து, அவ்விருவகையிலும் ஒருநோக்கு நோய்செய்யும், ஒருநோக்கு அதற்கு மருந்தாம், (எ - று).

நோய்நோக்கென்பது முதல்நோக்கின நோக்கம்; மருந்து நோக்கென்பது இதனால் வருத்தமுற்ற தலைமகனைத் தலைமகள் உள்ளங்கலங்கி நாணோடுகூடி நோக்கின நோக்கம். இது நாணமுடைய பெண்டிரது உள்ளக்கருத்து வெளிப்படுமாறு கூறியது. 1

1092. நோக்கினா ளோக்கி யிறைஞ்சினா ளஃதவள்
1093 யாப்பினு ளட்டிய நீர்.

(இ - ள்.) முறபடநோக்கினாள், நோக்கினபின்பு நாணினாள், அஃது அவள் நட்புப் பயிர்வளர அதன்கண் வார்த்த நீர், (எ - று).

தலைமகள் நாண் போகாமைக்குக் காரணங் கூறியவாறும். 2

1093. யானோக்குங் காலை நிலனோக்கு நோக்காக்காற்
1094 றானோக்கி மெல்ல நகும்.

(இ - ள்.) யான் தன்னைப்பார்க்குங்கால், தான் நிலத்தைப்பார்க்கும், யான் பாராத விடத்து, தான்பார்த்துத் தோன்றாமை நகும், (எ - று).

மெல்ல நகுதல் - முகிழமுகிழ்த்தல். 3

1094. கண்களவு கொள்ளுஞ் சிறுநோக்கங் காமத்திற்
1092 செம்பாக மன்று பெரிது.

(இ - ள்.) என் கண்களைச் சோர்வுபார்த்துக் களவினால் நோக்குகின்ற சிறிய நோக்கம், வேண்டப்பட்ட பொருளிற் பாதியேயன்று; பெரிது, (எ - று).

தலைமகள் தலைமகன் காணாமலோ நோக்குதலின், அது களவாயிற்று. 4

1095. ஏதிலார் போலப் பொதுநோக்கு நோக்குதல்
1099 காதலார் கண்ணே யுள.

(இ - ள்.) அயலார்போலப் பொது நோக்கத்தால் நோக்குதல், காதலித்தாரமாட்டே யுளதாய், (எ - று).

இது குறித்து நோக்காமையும் உடன்படுதலென்றது. 5

1096. குறிக்கொண்டு நோக்காமை யல்லா லொருகண்
1095 சிறக்கணித்தாள் போல நகும்.

(இ - ள்.) குறித்துக் கொண்டு நோக்காமை யல்லது ஒருகால் உடம்பட்டாள்போல நகா நின்றாள், (எ - று).

அஃதாவது காமக்குறிப்புடையார்போல நகுதல். அஃது வெளிப்படா தில்லாமையின், போல என்றார். இது தன்குறிப்புத்தோன்றாமல் நகுதல் உடன்படுதலாமென்றது. 6



1097. அசையியற் குண்டாண்டோ ரேஎர்யா னோக்கப்
1098 பசையினள் பைய நகும்.

(இ - ள்.) அசைந்த இயல்பினையுடையாட்கு அவ்விடத்தோர் அழகுண்டு; யான்நோக்க, நெகிழ்ந்து மெல்ல நகாநின்றாள், (எ - று).

அவ்விடமென்றது தானே நெகிழ்ந்து நக்கஇடம்; அழகு - தன்வடிவினுள் மிக்க குணம்; பைய நகுதல் - ஓசைப்படாமல் நகுதல். 7

1098. உறாஅ தவர்போற் சொலினுஞ் செறாஅர்சொ
1096 லொல்லை யுணரப் படும்.

(இ - ள்.) கூடாதவர் போலச் சொல்லினும், செறுதலில்லாதார் சொல்லை அதற்குக் காரணமாகப் பிறிதொன்று உளதென்று விரைந்தறிதல்வேண்டும். (-)

இஃது உறப்பினுவிசைவுகாட்டி, உரையினால் மறுப்பினும் உடன்படுதலாமென்றது. 8

1099. செறாஅச் சிறுசொல்லுஞ் செற்றார்போ னோக்கு
1097 முறாஅர்போன் றுற்றார் குறிப்பு.

(இ - ள்) செறுதலில்லாத் கடுஞ்சொல்லும், செற்றார்போல நோக்குதலும், அன்புறாதார்போல அன்புற்றாரது குறிப்பென்று கொள்ளப்படும், (எ - று).

இஃது அன்பின்மை தோற்ற நில்லாமையின், உடன்பாடென்று தேறியது. 9

1100. கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்க
1100 ளென்ன பயனு மில.

(இ - ள்.) கண்களோடுகண்கள் காமக்குறிப்பினால் நோக்கும்நோக்கம் ஒக்குமாயின், வாயினாற் சொல்லுஞ் சொற்கள் ஒருபயனுமுடையவல்ல, (எ - று).

இது சார்தலுறுகின்ற தலைமகன் தன்னைத்தேற்றிச் சொல்லியது. 10

---

## 3 - ம் அதிகாரம்.

## புணர்ச்சி மகிழ்தல்.

புணர்ச்சிமகிழ்தலாவது தலைமகள் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் புணர்ச்சியினை மகிழ்ந்து கூறுதல்.

1101. பிணிக்கு மருந்து பிறம னணியிழை
1102 தன்னோய்க்குத் தானே மருந்து.

(இ - ள்) நோயுற்றால் அதற்கு மருந்தாவது பிறிதொன்ற; இவ்வணியிழையால் வந்த நோய்க்குக் காரணமாகிய இவள் தானே மருந்தாம், (எ - று).

இது புணர்வதன் முன்னின்ற வேட்கை தணிந்தமை கூறிற்று. 1



1102. கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனு
1101 மொண்டொடி கண்ணே யுள.

(இ - ள்.) கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிகின்ற ஐந்து புலனும், இவ்வொள்ளிய தொடியை யுடையாள்மாட்டே யுள, (எ - று).

இது பொறிகள் ஐந்தினுக்கும ஒருகாலத்தே யின்பம் பயந்ததென்று புணர்ச்சியை வியந்து கூறியது. 2

1103. தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
1107 லம்மா வரிவை முயக்கு.

(இ - ள்.) தம்மிடத்திலே யிருந்து, தமது தாளாண்மையால் பெற்ற பொருளை இல்லாதார்க்குப் பகுத்து உண்டாற்போலும்; அழகிய மாமை நிறத்தினையுடைய அரிவை முயக்கம், (எ - று). 3

1104. தாம்வீழ்வார் மென்றோட் டுயிலி னினிதுகொ
1103 றாமரைக் கண்ணா னுலகு.

(இ - ள்.) தம்மால் விரும்பப்படுவாரது மெல்லியதோளின்கண் துயிலுந் துயிலினும் இனிதோ? இந்திரனது சுவர்க்கம், (எ - று).

இது சுவர்க்கத்தின்பமும் இதுதானே யென்று கூறியது. 4

1105. வேட்ட பொழுதி னவையவை போலுமே
1105 தோட்டாழ் கதுப்பினா டோள்.

(இ - ள்.) காதலித்தபொழுது காதலிக்கப்பட்ட அவ்வப்பொருள்களைப் போலும்; தோளின்கண் தாழ்ந்த கூந்தலினையுடையவள் தோள், (எ - று).

தோட்டாழ்கதுப்பு - புணர்ச்சிக்காலத்து அசைந்து தாழ்ந்த கூந்தல். 5

1106. அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ்

1110 செறிதோறுஞ் சேயிழை மாட்டு.

(இ - ள்.) யாதாலும் ஒன்றை அறியுந்தோறும் அறியாமை தோன்றினாற் போலும்; இச் சேயிழைமாட்டுப் புணர்ச்சியும் புணருந்தோறும் அமையாமை. ( )

காமப்புணர்ச்சியாயிற்று. இஃது அமையாமையின் கூற்று. 6

1107. நீங்கிற் றெறூஉங் குறுகுங்காற் றண்ணென்னுந்

1104 தீயாண்டுப் பெற்றா ளிவள்.

(இ - ள்) தன்னை நீங்கினவிடத்துச் சுடும், குறுகினவிடத்துக் குளிரும்; இத்தன்மையாகிய தீ எவ்விடத்துப் பெற்றாள் இவள், (எ - று).

இது புணர்ச்சி உவமையாற் கூறுதலான், புணர்ச்சி மகிழ்தலாயிற்று. 7



1108. உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்

1106 கமிழ்தி னியன்றன தோள்.

(இ - ள்.) சாருந்தோறும் என்னுயிர தழைப்பச் சார்தலால், பேதைக்குத் தோள்கள் அமுதினால் செய்யப்பட்டனவாகவேண்டும், (எ - று).

சாராதகாலதது இறந்துபடுவதான உயிரைத் தழைக்கப் பண்ணுதலான், அமுதம் போன்றதென்றவாறு. இது கூடிய தலைமகன் மகிழ்ந்து கூறியது. 8

1109. வீழு மிருவர்க் கினிதே வளியிடை

1108 போழப் படாஅ முயக்கு.

(இ - ள்.) ஒத்த காதலுடையா ரிருவர்க்கும் இனிதாம்; காற்றால் இடையறுக்கப்படாத முயக்கம், (எ - று).

இது புணர்ச்சி விருப்பினால் கூறினமையால், புணர்ச்சி மகிழ்தலாயிற்று. இது குறிப்பினால் புகழ்ந்தது 9

1110. ஊட லுணர்தல் புணர்த லிவைகாமங்

1109 கூடியார் பெற்ற பயன்.

(இ - ள்.) ஊடுதலும், ஊடல் தீர்தலும், பின்னைப் புணர்தலுமென்னு மிவை அன்பினாற் கூடினார் பெற்ற பயன், (எ - று)

காமம் - அன்பு. புணர்தலெனினும் பேணுதலெனினும் ஒக்கும். ஊடற் குறிப்புத்தோன்றநின்ற தலைமகளை ஊடல் தீர்த்துப் புணர்ந்த தலைமகன் அதனால் வந்த மகிழ்ச்சி கூறியது 10

---

4 - ம் அதிகாரம்.

## நலம்புனைந்துரைத்தல்.

நலம்புனைந்துரைத்தலாவது தலைமகளது நலத்தினை அலங்காரவகையாய்க் கூறுதல். புனைந்துரை எனினும், பாராட்டெனினும், கொண்டாட்டெனினும், மகிழ்ச்சியெனினும் ஒக்கும்.

1111. மதியு மடந்தை முகனு மறியா
1116 பதியிற் கலங்கிய மீன்.

(இ - ள்) மதியினையும் மடந்தை முகத்தினையும் கண்டு, இவ்விரண்டினையும் அறியாது, தன்னிலையினின்றுங் கலங்கித்திரியாநின்றன மீன்கள், (எ - று).

மீன் இயக்கத்தைக் கலங்குதலாகக் கூறினார் இது மீன் கலங்கித் திரிதலானே இவள்முகம் மதியோடு ஒக்கு மென்று கூறியது. 1

28



1112. அறுவாய் நிறைந்த வவிர்மதிக்குப் போல
1117 மறுவுண்டோ மாதர் முகத்து.

(இ - ள்.) குறையிடை நிறைந்த ஒளிர்மதிக்குப்போல, இம்மாதர் முகத்துக்கு மறுவுண்டோ? (எ - று).

இது மேல் கலக்கமுற்றுத் திரிகின்ற மீன் கலங்குதற்குக் காரணம் அறிவின்மையாம்; இவள்முகத்து மறுவில்லையாதலான், அது மதியோடு ஒவ்வாதென்று கூறியது. 2

1113. மாதர் முகம்போ லொளிவிட வல்லையேற்
1118 காதலை வாழி மதி.

(இ - ள்.) மதியே! நீ இம்மாதர் முகம்போல ஒளிவிடவல்லையாயின், நீயும் எம்மாற் காதலிக்கப்படுதி, (எ - று).

வாழி - அசை. இது மறுப்போயினதாய முகமென்று கூறப்பட்டது. 3

1114. மலரன்ன கண்ணாண் முகமொத்தி யாயிற்
1119 பலர்காணத் தோன்றன் மதி.

(இ - ள்.) மதியே! நீ மலர்போலுங் கண்களை யுடையாளது முகத்தை ஒப்பையாயின், பலர் காணுமாறு தோன்றாதொழிக, (எ - று).

இது மதி ஒளியும் வடிவும் ஒத்ததாயினும், குணத்தினாலே ஒவ்வாதென்றது.

1115. மலர்காணின் மையாத்தி நெஞ்சே யிவள்கண்
1112 பலர்காணும் பூவொக்கு மென்று.

(இ - ள்.) நெஞ்சே! நீ இவள்கண் மலராயினும் பலரால் காணப்படும் பூவையொக்கு மென்று மலரைக் கண்டபொழுதே மயங்கா நின்றாய், (எ - று).

இது கண் பூவினது நிறமொக்குமாயினும், குணமொவ்வாதென்று கூறிற்று.

1116. காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
1114 மாணிழை கண்ணொவ்வே மென்று.

(இ - ள்.) குவளைமலர் காணவற்றாயின், மாட்சிமைப்பட்ட இழையினையுடையாளது கண்ணை ஒவ்வோமென்று நாணி, கவிழ்ந்து நிலத்தை நோக்கும்.

இது காணுந்தோறும் ஒவ்வாதென்றது. 6

1117. நன்னீரை வாழி யனிச்சமே நின்னினு
1111 மென்னீரள் யாம்வீழ் பவள்.

களவியல் - 5 - வது காதற்சிறப்புரைத்தல். 219

(இ - ள்.) அனிச்சப்பூவே! நீ நல்ல நீர்மையை யுடையாய்; எம்மால் விரும்பப்பட்டவள் நின்னினும் மிக நீர்மையள்; காண். (எ - று).

இஃது உடம்பினது மென்மை கூறிற்று. 7

1118. அனிச்சப்பூக் கால்களையாள் பெய்தா ணுசுப்பிற்கு
1115 நல்ல படாஅ பறை.

(இ-ள்.) அனிச்சப்பூவைக் காம்பு நன் அருது மயிரில் அணிந்தாள்; இனி இவளது நுசுப்பிற்கு நல்லவாக ஒலிக்கமாட்டா பறை, (எ - று).

இஃது இடையினது நுண்மை கூறிற்று. 8

1119. முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
1113 வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

(இ - ள்.) தளிர்போலும் மேனி; முத்துப்போலும் முறுவல்; நறுநாற்றம் போலும் நாற்றம்; வேல்போலும் உண்கண்; வேயொத்த தோளினை யுடையாளுக்கு, (எ - று).

இது நிறமும், எயிறும், நாற்றமும், கண்ணின்வடிவும், தோளும் புகழ்ந்து கூறிற்று. 9

1120. அனிச்சமு மன்னத்தின் றூவியு மாத
1120 ரடிக்கு நெருஞ்சிப் பழம்.

(இ - ள்.) அனிச்சப்பூவும், அன்னத்தின் தூவியும், மாதரடிக்கு நெருஞ்சிப்

*பழத்தோடு ஒக்கும்,* (எ - று).

*இஃது அவையிற்றினுாய் மெல்லியது அடியென்று கூறிற்று.* 10

---

## 5 - ம் அதிகாரம்.

## *காதற்சிறப்புரைத்தல்.*

*காதற்சிறப்புரைத்தலாவது தலைமகன் காதல் மிகுதி கூறுதலும் தலைமகள் காதல் மிகுதி கூறுதலுமாம். இது கலப்புணர்ந்துரைத்தலின்பின் நிகழ்வதொன்றாகலின், அதன்பின் கூறப்பட்டது.*

**1121.** உடம்போ டுயிரிடை யென்னமற் றன்ன

1122 மடந்தையோ டெம்மிடை நட்பு.

(இ - ள்) *உடம்போடு உயிரிடையுள்ள நட்பு எத்தன்மைத்து அத்தன்மைத்து ; மடப்பத்தையுடையாளோடு எம்மிடையுள்ள நட்பு,* (எ - று).



*நின்னிற் பிரியமாட்டே னென்றவாறு. இது தலைமகன் தனது காதல் மிகுதி கூறியது.* 1

**1122.** கருமணியுட் பாவாய்நீ போதாயாம் வீழுந்

1123 திருநுதற் கில்லை யிடம்.

(இ - ள்.) *என் கண்ணுட் கருமணியகத்து நிற்கும் பாவாய்! நீ அங்கு நின்று போதுவாயாக, எம்மால் விரும்பப்பட்ட அழகிய நுதலினையுடையாட்கு இருத்தற்கிடம் போதாது,* (எ - று). 2

**1123.** வாழ்த லுயிர்க்கன்ன ளாயிழை சாத

1124 லதற்கன்ன ணீங்கு மிடத்து.

(இ - ள்.) *கூடுமிடத்து இவ்வாயிழை உயிர்க்கு வாழ்தலோடு ஒப்பள் ; நீங்குமிடத்து அவ்வுயிர்க்குச் சாதலோடு ஒப்பள்,* ( எ - று).

*இஃது இரண்டாங்கூட்டத்துப் புணர்ந்து நீங்காவென்று கருதிய தலைமகள் கேட்பத் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.* 3

**1124.** பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி

1125 வாலெயி றூறிய நீர்.

(இ - ள்.) பாலொடுகூடத் தேனைகலந்தாற்போலும்; மிகவும் இனிமை தரும் புகழினையுடையாளாது வெள்ளிய எயிற்றினின்று ஊறிய நீர், (எ - று).

இது புணர்ச்சியுண்மையும் காதல் மிகுதியும் தோன்றத் தலைமகன் கூறியது. 4

1125. உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
1125 ளொள்ளமர்க் கண்ணாள் குணம்.

(இ - ள்) மறந்தேனாயின், நினைப்பேன் யான்; மறத்தலறியேன்; ஒள்ளமர்க் கண்ணாள் குணத்தினை, (எ - று).

தோழியிற்கூடி நீங்குந் தலைமகனை நோக்கி எங்களை நினைக்கிலீரோ? என்ற தோழிக்குத் தலைமகன் கூறியது. இவை ஐந்தும் தலைமகன் கூற்று. இனிக் கூறுமைந்துந் தலைமகள் கூற்று. 5

1126. உவந்துறைவ ருள்ளத்து ளென்று மிகந்துறைவ
1130 ரேதில ரென்னுமிவ் வூர்.

(இ - ள்.) அவர் எனது நெஞ்சத்தே என்றும் மகிழ்ந்து உறையாநிற்பர்; அவரை ஏதிலராய் நீங்கி யுறைவர் என்றே சொல்லாநின்றது இவ்வூர், (எ-று).



தலைமகள் வேறுபாடுகண்டு தலைமகனை அன்பிலனென்று இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் என்னெஞ்சில் நின்று நீங்காரென்று நெஞ்சின்மேல் வைத்துக் கூறியது. 6

1127. கண்ணுள்ளிற் போகா ரிமைப்பிற் பருவரார்
1126 நுண்ணியரெங் காத லவர்.

(இ - ள்.) என் கண்ணுள் நின்று நீங்கார்; இமைப்பேனாயின், இவட்கு உறுத்துமென்று பருவருத்திருப்பதுஞ் செய்யார்; ஆதலான், எம்மாற் காதலிக்கப்பட்டார, நுண்ணியவறிவை யுடையார், (எ - று). 7

1128. நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்ட
1128 லஞ்சுதும் வேபாக் கறிந்து.

(இ - ள்) எம்மாற் காதலிக்கப்பட்டவா எம்நெஞ்சத்தி லிருக்கின்றார்; ஆதலானே, வெய்தாக வுண்டலை அஞ்சாநின்றேம்; அவர்க்குச் சுடுமென்பதனையறிந்து.

இது நீ உண்ணுதலேன்னையென்று வினவுதோழிக்குத் தலைமகள் உணவில்

காதலின்லை யென்று கூறியது. இது காரணத்து உறவு உரைத்தல். 8

1129. இமைப்பிற் கரப்பாக் கறிவ லனைத்திற்கே
1129 யேதில ரென்னுமிவ் வூர்.

(இ - ள்.) கண்ணிமைக்குமாயின், அவரொளிக்குமாறு யானறிவேன், அவ்வொளித்தற்கு அவரை நமக்கு ஏதிலரென்று சொல்லும் இவ்வூர்; அதற்காக இமைக்கிலேன், (எ - று).

இது கண் துயிலமறுத்தலென்னும் மெய்ப்பாடு. 9

1130. கண்ணுள்ளார் காத லவராகக் கண்ணு
1117 மெழுதேங் கரப்பாக் கறிந்து.

(இ - ள்) எங்காதலவர் கண்ணுள்ளார்; ஆதலானே, கண்ணும் மையெழுதேம் : அவர் ஒளித்தலை யறிந்து, (எ - று).

எப்பொழுதும் நோக்கியிருத்தலால், கோலஞ்செய்தற்குக் காலம் பெற்றிலேனென்றவா றாயிற்று. 10

---

## 6 - ம் அதிகாரம்.

## நாணுத் துறவுரைத்தல்.

நாணுத்துறவுரைத்தலாவது தலைமகன் தனது நாணின்மையைத் தோழிக்குக் கூறுதலும் தலைமகளது நாணம் நீங்கினமையைத் தோழி தலைமகற்குக் கூறுதலு



மாம். காதல் மிக்கார்க்கு நாணமில்லை யென்பதனால், அதன்பின் இது கூறப்பட்டது.

1131. காம முழந்து வருந்தினார்க் கேம
1131 மடலல்ல தில்லை வலி.

(இ - ள்.) காமம் காரணமாக முயன்று வருந்தினார்க்கு ஏமமாவது மடலேறுவதல்லது மற்றும் வலி யில்லை, (எ - று).

இது தலைமகளைத் தோழி சேட்படுத்தியவிடத்து மடலேறவேனென்று தலைமகன் கூறியது. 1

1132. நோனா வுடம்பு முயிரு மடலேறு
1132 நாணினை நீக்கி நிறுத்து.

(இ - ள்.) பொறுத்த லில்லாத உடம்பும் உயிரும் மடலேறும்; நாணினை

*நீக்கி நின்று, (எ - று).*

*இஃது உடம்போடு உயிரும் மடலேறுமெனத் தலைமகன் கூறியது.* 2

1133. நாணொடு நல்லாண்மை பண்டுடையே னின்றுடையேன்

1133 காமுற்று ரேறு மடல்.

(இ - ள்.) *நாணமிக்க நிலைமையும் சிறந்த ஆண்மையும் யான் பண்டுடையேன்; காமமிக்கார் ஏறும் மடலினை இன்றுடையேனானேன்,* (எ - று). 3

1134. அறிவிலா ரெல்லாரு மென்றேயென் காம

1139 மறுகின் மறுகு மருண்டு.

(இ - ள்.) *என்னை யொழிந்த எல்லாரும் அறிவிலரென்றே சொல்லி, என் காமமானது தலைமயங்கி மறுகின்கண்ணே வெளிப்படச் சுழலா நின்றது,* ( - ).

*சுழல்தல் - இவ்வாறு சொல்லித் திரிதல்.* 4

1135. மடலூர்தல் யாமத்து முள்ளுவேன் மன்ற

1136 படலொல்லா பேதைக்கென் கண்.

(இ - ள்.) *பேதை பொருட்டு என்கண் உறங்குதலை இசையாது; ஆதலானே, மடலூர்தலை ஒருதலையாக யாமத்தினும் நினைப்பேன்,* (எ - று).

*இது மடலேறுவது காலையன்றே; இராவுறக்கத்திலே மறந்துவிடுகின்றீர் என்ற தோழிக்கு, என் கண் உறங்காது; ஆதலான், மறவேனென்று தலைமகன் கூறியது.* 5

1136. தொடலைக் குறுந்தொடி தந்தாண் மடலொடு

1135 மாலை யுழக்குந் துயர்.



(இ-ள்.) *மாலைபோலச் செய்யப்பட்ட சிறுவளையினை யுடையாள் மடலோடே கூட மாலைக்காலத்து உறுந்துயரினைத் தந்தாள்,* (எ - று).

*தொடலை யென்பதற்குச் சோர்ந்தவளை யெனினும் அமையும். குறுந்தொடி - பின்னைப்பணி. இவை எழும் தலைமகன் கூற்று.* 6

1137. கடலன்ன காம முழந்து மடலேறாப்

1137 பெண்ணிற் பெருந்தக்க தில்.

(இ - ள்.) *கடலையொத்த காமநோயாலே வருந்தியும், மடலேற நினையாத பெண்பிறப்புப்போல மேம்பட்டது இல்லை,* (எ - று).

*இது நம்மாற் காதலிக்கப்பட்டாள் தனக்கும் இவ்வருத்தமொக்கும்; பெண்*

டிர்க்கு இப்பெண்மையான் மடலேறுதலே குறையென்று தலைமகன் ஆற்றுமை நீங்குதற்பொருட்டுத் தோழி கூறியது. 7

1138. நிறையரியர் மன்னளிய ரென்னுதென் காம
1138 மறையிறந்து மன்று படும்.

(இ - ள்.) *நிறையிலர்; மிக அளிக்கத்தக்கா ரென்னாது என் காமமானது மறைத்தலைக் கடத்தலுமன்றி மன்றின்கண் படாநின்றது,* (எ - று).

*இஃது அம்பலும் அலரும் ஆகாவென்று தோழி பகற்குறி மறுத்தது.* 8

1139. காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
1134 நல்லாண்மை யென்னும் புணை.

* (இ - ள்.) *யான் தன்னைக் கடத்தற்குக் கொண்ட நாணும் நல்லாண்மையுமாகிய புணைகளை என்னிற் பிரித்துக் காமமாகிய கடியபுனல் கொண்டுபோகாநின்றது,* (எ - று). 9

1140. யாங்கண்ணிற் காண நகுப வறிவில்லார்
1140 யாம்பட்ட தாம்படா வாறு.

* (இ - ள்.) *யாம் கேட்குமாறு மன்றிக் கண்ணுற் காணுமாறு எம்மை யறிவிலார் நகாநின்றார்; அவரங்ஙனஞ் செய்கின்றது யாமுற்ற நோய்கள் தாமுறாமையான்,* (எ - று). 10

---

## 7 - ம் அதிகாரம்.

## *அலரறிவுறுத்தல்.*

*அலரறிவுறுத்தலாவது இவ்வாறு ஒழுகும் ஒழுக்கத்தினால் வந்த அலரைத் தலைமகள் தோழிக்கு அறிவித்தலும் தோழி தலைமகட்கும் தலைமகற்கும் அறி*

* இக்குறியுள்ளது பரிமேலழகருரை.



*வித்தலுமாம். நாணுத் துறவுரைத்து இரவுக்குறி யொழுகாநின்ற தலைமகனுக்குத் தோழி அம்பலும் அலரும் ஆகாநின்றனவென் றறிவித்தலான், அதன் பின் இது கூறப்பட்டது.*

1141. கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுந்
1145 திங்களைப் பாம்புகொண் டற்று.

1140
(இ - ள்.) யான் கண்ணுற்றது, ஒருநாள்; அக்காட்சி திங்களைப் பாம்பு கொண்டாற்போல, எல்லாராலும் அறியப்பட்டு அலராகாநின்றது, (எ - று). 1

1142. ஊரவர் கௌவை யெருவாக வன்னைசொ
1126 னீராக நீளுமிந் நோய்.
1127

(இ - ள்.) ஊரார் எடுத்த அலர் எருவாக, அன்னை சொல்லுஞ் சொற்கள் நீராக, இந்நோய் வளராநின்றது, (எ - று).

இஃது அலரின் ஆற்றுளாகிய தலைமகன் தோழிக்குச் சொல்லியது இவை யிரண்டிற்கும் வரைவானுதல் பயன். 2

1143. அலர்நாண லொல்வதோ வஞ்சலோம் பென்றார்
1149 பலர்நாண நீத்தக் கடை.

(இ-ள்) அலராகுமென்று நாணுதல் இயல்வதோ? அஞ்சுதலைத் தவிரென்று சொன்னவர் பலரும் நாணுமாறு நம்மை நீக்கினவிடத்து, (எ - று).

பலரென்றது தோழியும் செவிலியும் முதலாயினாரை. 3

1144. தாம்வேண்டி நல்குவர் காதலர் யாம்வேண்டிற்
1150 கௌவை யெடுத்ததிவ் வூர்.

(இ - ள்) யாம் விரும்ப, அலரையும் இவ்வூரார் எடுத்தார்; ஆதலான், இனித் தாங்களே விரும்பிக் கொடுப்பர் நமது காதலர்க்கு. (எ - று). 4

1145. மலரன்ன கண்ணா ளருமை யறியா
1142 தலரெமக் கீந்ததிவ் வூர்.

(இ - ள்.) பூவொத்த கண்ணாளது இற்பிறப்பின் அருமையை யறியாதே, இவ்வூரவர் எங்கட்கு அலரைத் தந்தார், (எ - று)

எளியாரைச் சொல்லுமாறுபோலச் சொல்லாநின்று றென்றவாறு. 5

1146. களித்தோறுங் கள்ளுண்டல் வேட்டற்றாற் காமம்
1145 வெளிப்படுந் தோறு மினிது.

(இ - ள்) மயங்குந்தோறும் கள்ளுண்டலை விரும்பினாற்போல, காமமும் அலராகுந்தோறும் இனிதாகும், (எ - று).

களவியல் - 7 - வது அலரறிவுறுத்தல். 225

இஃது அலரறிவுறுத்த தோழியைநோக்கி, நமக்குத் துன்பமாயிற்றே

இவ்வலரென்று விஞயிய தலைமகற்குத் தோழி கூறியது. 6

1147. உருஅதோ வூரறிந்த கௌவை யதனைப்
1143 பெருஅது பெற்றன்ன நீர்த்து.

(இ - ள்.) ஊரறிந்த அலர் வருவதொன்றன்றோ? அவ்வலரைத் தீதாகக் கொள்ளாது, பெருததொன்றைப் பெற்றுலொத்த நீர்மைத்தாகக் கொள்ளல் வேண்டும், (எ - று).

இஃது அலரறிவுறுத்த தோழிக்கு அவ்வலரினன் என்றும் தமராவார் உடன்படுவரென்று தலைமகன் கூறியது. 7

1148. கவ்வையாற் கவ்விது காம மதுவின்றேற்
1144 றவ்வென்னுந் தன்மை யிழந்து.

(இ - ள்) அலரினனே அலர்தலை யுடைத்தாக காமம்; அவ்வலரில்லை யாயின், தனது தன்மை யிழந்து பொலிவழியும், (எ - று)

செவ்வை யுடையதனைச் செவ்விது என்றாற்போல, கவ்வையுடைய தனைக் கவ்விது என்றார். 8

1149. நெய்யா லெரிநுதுப்பே மென்றற்றாற் கௌவையாற்
1148 காம நுதுப்பே மெனல்.

(இ - ள்.) எரிகின்ற நெருப்பை நெய்யினலே அவிப்போமென்று நினைத்தாற்போலும்; அலரினனே காமத்தை அவிப்போமென்று நினைத்தல், (எ - று).

இது தலைமகன் பின்னுங் களவொழுக்கம் வேண்டினமைகண்டு தோழி கூறியது. 9

1150. அலரெழ வாருயிர் நிற்கு மதனைப்
1141 பலரறியார் பாக்கியத் தால்.

(இ - ள்) நமது புணர்ச்சியால் வந்த அலர் எழுதலினனே அவளது ஆருயிர் நிற்கும்; அவ்வாறு உயிர்நிற்றலை எங்கள் புண்ணியத்தாலே பலரறியா ராயினர்; அறிவாராயின், எமக்கு ஏதிலராய் அலர்தூற்றுவார் இவள் இறந்துபடவேண்டுமென்று தூற்றார், (எ - று) 10

களவியல் முற்றிற்று.

---

29

## 2. கற்பியல். (18)

## 1 - ம் அதிகாரம்.

# பி ரி வா ற் ரு மை ம.

*பிரிவாற்ருமையாவது அலராறிவுறுத்தல் படத் தலைமகன் தலைமகளை வரைந்துகொண்டு இன்புறுமாயினும், பிரியுங்காலத்து ஆற்ருமை கூறுதல். மேல தனோடியையும் இது. இதுமுதலாகக் கற்பென்று கொள்ளப்படும்.*

1151. இன்க ணுடைத்தவர் பார்வல் பிரிவஞ்சும்
1152 புன்க ணுடைத்தாற் புணர்வு.

(இ - ள்.) *கங்காதலரை வரவு பார்த்திருக்குமது, இன்பத்தையுடைத்து; அவரைப் புணர்ந்திருக்கும் இருப்பு, பிரிவாரோவென்று அஞ்சப்படுந் துன்பத்தையுடைத்து, (எ - று).* 1

1152. துறைவன் றுறந்தமை தூற் றகோன் முன்கை
1157 யிறையிறைவா நின்ற வளை.

(இ - ள்.) *இறைவன் பிரிகின்றமையை எமக்கு அறிவியாவோ? முன் கையின் இறையைக் கடவாநின்ற வளைகள், (எ - று).*

*முன்பே அறிதலான், உடம்பு மெலித்தது என்றவா ருயிற்று.* 2

1153. இன்ஞ தினனில்லூர் வாழ்த லதனினு
1158 மின்ஞ தினியார்ப் பிரிவு.

(இ - ள்.) *தமக்கு இன்பமில்லாதவூரின்கண் இருந்து வாழ்தல் இன்ஞது; இனியாரைப் பிரிதல், அதனினும் இன்ஞது, (எ - று).*

*இது பிரிவுணர்த்திய தலைமகற்கு இவ்விரண்டு துன்பமும் எங்கட்குளவாமென்று பிரிவுடன்படாது தோழி கூறியது.* 3

1154. அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற் றெளித்தசொற்
1154 றேறியார்க் குண்டோ தவறு.

(இ - ள்.) *நம்மைத் தலையளிசெய்து நின்னிற் பிரியேன், நீ அஞ்சல் என்றவர் தாமே நீங்கிப்போவாராயின், அவர் தெளிவித்தசொல்லைத் தெளிந்தவர்க்கு வருவதொரு குற்றம் உண்டோ? (எ - று).*

*தன்மையைப் படர்க்கைபோற் கூறினர்.* 4

1155. ஓம்பி னமைந்தார் பிரிவோம்பன் மற்றவர்
1155 நீங்கி னரிதாற் புணர்வு.

(இ - ள்.) காக்கலாமாயின் அமைந்தார் தம்முடைய பிரிவைக் காக்க; அவர் பிரிவாராயின், பின்பு கூடுதல் அரிது, (எ - று).

மேல் தலைமகன் கூறிய சொற்கேட்டு யாது சொல்வேனென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 5

1156. செல்லாமை யுண்டே லெனக்குரை மற்றுநின்
1151 வல்வரவு வாழ்வார்க் குரை.

(இ - ள்.) காதலர் போகாமையுண்டாயின், எனக்குக்கூறு; பிரிந்தார் நீட்டியாது விரைந்து வருவாரென்று சொல்லுகின்ற வரவினைப் பின்புளராய் வாழ்வார்க்குக் கூறு, (எ - று).

இது கடிதுவருவாரென்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றாமையாற் கூறியது. 6

1157. அரிதாற்றி யல்லனோய் நீக்கிப் பிரிவாற்றிப்
~~1153~~ பின்னிருந்து வாழ்வார் பலர்.
1160

(இ - ள்.) பொறுத்தற்கரியதனைப் பொறுத்து, அல்லல் செய்யும் நோயை நீக்கி, பிரிவையும் பொறுத்து, காதலரை நீங்கியபின் தமியரா யிருந்து வாழ்வார் பலர், (எ - று).

அல்லல்நோய் - காமவேதனை. பிரிவாற்றுதல் - புணர்ச்சி யின்மையைப் பொறுத்தல். 7

1158. பிரிவுரைக்கும் வன்கண்ண ராயி னரிதவர்
1156 நல்குவ ரென்னு நசை.

(இ - ள்.) பிரிவினை யுரைக்கும் வன்கண்மையை யுடையராயின், அவர் மறுத்துவந்து நல்குவரென்னும் ஆசை யில்லை, (எ - று).

இது தலைமகன் பிரிந்தானென்று கேட்டவிடத்து நின்னிற் பிரியேனென்ற சொல்லை உட்கொண்டு தலைமகள் கூறியது. 8

1159. தொடிற்சுடி னல்லது காமநோய் போல
1159 விடிற்சுட லாற்றுமோ தீ.

(இ - ள்.) தீண்டினாற் சுடுமதல்லது காமநோய்போல, நீங்கினாற் சுடவற்றோ தீ, (எ - று).

1160. அரிதரோ தேற்ற மறிவுடையார் கண்ணும்
1153 பிரிவோ ரிடத்துண்மை யான்.

(இ - ள்.) பிரியேனென்ற தஞ்சொல்லும் நம்பிரிவாற்றாமையும் அறித லுடையராய காதலர்கண்ணும், ஒரோவழிப் பிரிவு நிகழ்தலான், அவர் சொல்லும் தலையளியும் பற்றி நம்மாட்டன்புடையரெனத் தேறுந்தேற்றம் அரிதாயிருந்தது.

## ௨ - ம் அதிகாரம்.

## படர்மெலிந்திரங்கல்.

படர்மெலிந்திரங்கலாவது தலைமகள் தலைமகன் பிரிந்துழிக் கதுமென உற்ற துன்பத்தினால் மெலிந்திரங்குதல். பிரிந்துழியுற்ற துன்பமாவது போனு னென்று கேட்டகாலத்து வருவதோர் மனநெகிழ்ச்சி. இது பிரியப்பட்டார்க்கு முற்பாடு தோன்றுமாதலான், அதன்பின் கூறப்பட்டது.

1161. துப்பி லெவன்செய்வார் கொல்லோ துயர்வரவு
1165 நட்பினு ளாற்று பவர்.

(இ - ள்.) மென்மை செய்யவேண்டும் நட்டோர்மாட்டே துன்பம் வருதலைச் செய்கின்றவர், வன்மை செய்ய வேண்டுமிடத்து யாங்ஙனஞ் செய்கின்றாரோ?

இது பகைதணி வினையின்கண் பிரிந்த தலைமகனது கொடுமையை உட் கொண்டு தலைமகள் தோழிக்குச் சொல்லியது. 1

1162. மறைப்பேன்மன் யானிஃதோ நோயை யிறைப்பவர்க்
1161 கூற்றுநீர் போல மிகும்.

(இ - ள்.) இந் நோயை யான் மறைப்பேன்; மறைப்பவும், இஃது இறைப்பார்க்கு ஊற்றுநீர்போல மிகாநின்றது, (எ - று).

தலைமகள் ஆற்றாமை கண்டு இதனை இவ்வாறு புலப்பட விடுத்தல் தகா தென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 2

1163. கரத்தலு மாற்றேனிந் நோயைநோய் செய்தார்க்
1162 குரைத்தலு நாணுத் தரும்.

(இ - ள்.) இந்நோயை மறைக்கவும் அறிகின்றிலேன்; இந்நோயைச் செய்தார்க்குச் சொல்லவும் நாணமாக நின்றது, (எ - று).

இது குறிப்பறிதற் பொருட்டுக் கூறிய தோழிக்குத் தலைமகள் கூறியது. 3

* இது பரிமேலழகருரை.



1164. காமக் கடன்மன்னு முண்டே யதுநீந்து
1164 மேமப் புணைமன்னு மில்.

(இ - ள்.) காமக்கடல் நிலையாக உண்டே, அது கடக்கும் ஏமமாகிய புணை நிலையாக இல்லையே, (எ - று).

இது தலைமகள் ஆற்றாமை கண்டு நெருங்கிக் கூறிய தோழியைக் குறித்து நமக்குத் துணையாவார் இல்லை யெனத் தலைமகள் கூறியது. 4

1165. இன்பங் கடலற்றுக் காமமஃ தடுங்கால்
1166 றுன்ப மதனிற் பெரிது.

(இ - ள்.) காமப்புணர்வினால் நமக்குவரும் இன்பம் கடல்போலப் பெரிது; பிரிவினான், அஃது அடுங்காலத்து வருந்துன்பம் அக்கடலினும் பெரிது, (எ-று).

இஃது இன்பமுற்றார் துன்பமுறுதல் உலகியலென்று ஆற்றுவித்த தோழிக்கு ஆற்றலரிதென்று தலைமகள் கூறியது. 5

1166. காமக் கடும்புன னீந்திக் கரைகாணேன்
1167 யாமத்தும் யானே யுளேன்.

(இ - ள்.) காமமாகிய பெருங்காற்றினை நீந்திக் கரை காண்கின்றிலேன்; அறையிருள் யாமத்திலும் உறங்காது யானேயுளேன், மற்று உறங்காதாரில்லை.

இது காதலர் குறித்தநாள் வருந்துணையும் ஆற்றுமாறு என்னையென்று தலைமகள் தன்னுள்ளே சொல்லியது. 6

1167. மன்னுயி ரெல்லாந் துயிற்றி யளித்திரா

1168 வென்னல்ல தில்லை துணை.

(இ - ள்.) இவ்விரா அளித்தா யிருந்தது; உலகத்து வாழ்கின்ற உயிர்க ளெல்லாவற்றையும் துயிலப்பண்ணி, என்னையல்லது வேறுதுணை யில்லையாக இருந்தது, (எ - று).

இது பிற்றை ஞான்று வினவிய தோழிக்குத் தலைமகள் கண் உறங்கு கின்றதில்லை யென்று சொல்லியது. 7

1168. கொடியார் கொடுமையிற் றாங்கொடிய விந்நா
1169 ணெடிய கழியு மிரா.

(இ - ள்.) கொடியவர்செய்த கொடுமையினும் தாம் கொடியனவாய் நின் றன; இக்காலத்து நெடியவாய்க் கழிகின்ற இராப்பொழுதுகள், (எ - று).

இது பொழுது விடிகின்றதில்லை யென்று தலைமகள் தோழிக்குச் சொல்லி யது. 8



1169. உள்ளம்போன் றுள்வழிச் செல்கிற்பின் வெள்ளநீர்
1170 நீந்தல மன்னோவென் கண்.

(இ-ள்.) அவருள்ளவிடத்து நெஞ்சினைப்போல என் கண்கள் செல்லவல்லன வாயின், வெள்ளமாகிய நீரின்கண் புகுந்து நீந்தா, (எ - று).

இது காண்டல் விருப்பினால் தலைமகள் கூறியது. 9

1170. காமமு நாணு முயிர்காவாத் தூங்குமென்
1163 னோனா வுடம்பி னகத்து.

(இ - ள்.) வேட்கையும் நாணமும் என்னுயிரே காத்தண்டாகத் தூங்கா நின்றன; பொறுக்கமாட்டாத என்னுடம்பினுள்ளே நின்று, (எ - று.)

இது தலைமகள் மனநிகழ்ச்சி யிதுவென்று கூறியது. 10

---

## 3 - ம் அதிகாரம்.

## கண்விதுப்பழிதல்.

கண்விதுப்பழிதலாவது கண் தனது விரைவினால் அழிந்தமை தலைமகள் தோழிக்குக் கூறுதல். பிரிவின்கண் துன்பமுற்றார்க்குக் கண்ணீர் முற்பாடு

தோன்றுயாதலின் தனது ஆற்ருமையை ஒன்றன்மேலிட்டுக் கூறுவாள் அதனை முற்பாடு கண்ணின்மேலிட்டுக் கூறுதலால், அதன்பின் இது கூறப்பட்டது.

1171. பேணுது பெட்டா ருளர்மன்னே மற்றவர்க்
1178 காணு தமைவில கண்.

(இ - ள்.) விரும்பத்தகாததனை விரும்புவாரும் உளரோ? நம்மைக்காண்டல் விருப்பமின்றிப்போன அவரைக் காணுது அமைகின்றில என் கண்கள்; இதனை யொழியப்பிறவு முளவோ? (எ - று). 1

1172. கண்டாங் கலுழ்வ தேவன்கோலோ தண்டாநோய்
1171 தாங்காட்ட யாங்கண் டது.

(இ - ள்.) அமையாத நோயை யாங்கண்டது அந்நோய் செய்தாரைத் தாங் காட்டுதலானே யன்றே? பின்னை அக்கண்கள்தாம் காண்டல் வேட்கையாற் கலுழ்கின்றது யாவர் காட்டுவாராகக் கருதி? (எ - று).

இது தலைமகள் காட்டுவாரில்லை யென்று தோழியைக் குறித்துச் சொல்லியது. 2

1173. தெரிந்துணரா நோக்கிய வுண்கண் பரிந்துணராப்
1172 பைத லுழப்ப தேவன்.



(இ-ள்.) முன்பு அவர் நல்லரென்று தெரிந்து உணர்ந்து நோக்கிய உண்கண்கள் இப்பொழுது வருத்தமுற்று, நல்லரென்று உணராவாய்,துன் பமுழப்பது எற்றுக்கு? (எ - று).

இது கண்ணினறியாமையைத் தோழிக்குச் சொல்லியது. 3

1174. கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழ
1173 மிதுநகத் தக்க துடைத்து.

(இ - ள்.) இக்கண்கள் அன்று விரைந்து தாமேநோக்கி, இன்று தாமே கலுழாநின்ற இது சிரிக்கத்தக்க துடைத்து, (எ - று).

இஃது ஆற்ருமை மிகுதியால் நகுதல் மிக்க தலைமகளை இங்ஙனநகுதற்குக் காரண மென்னையென்று வினவியதோழிக்கு அவள் கூறியது. 4

1175. மறைபெற லூரார்க் கரிதன்று லெம்போ
1180 லறைபறை கண்ணா ரகத்து.

(இ - ள்.) எம்மைப் போல அறைபறையாகிய கண்களையுடையார்மாட்டு உளதாகிய மறையை யறிதல் ஊரார்க்கு எளிது, (எ - று). 5

1176. ஓஒ வினிதே யெமக்கிந்நோய் செய்தகண்
1176 டாஅ மிதற்பட் டது.

(இ - ள்.) எமக்கு இந்நோயைச் செய்த கண்கள் தாமும் இந்நோயகத்துப் பட்டது மிகவும் இனிது, (எ - று).

இது நின்கண் கலங்கிற்று; அஃதெனக்கு இன்னாதாயிற்று என்றதோழிக்கு அது மிகவும் இனிதென்று தலைமகள் கூறியது. 6

1177. உழந்துழந் துண்ணீ ரறுக விழைந்திழைந்து
1177 வேண்டி யவர்க்கண்ட கண்.

(இ - ள்.) அழுதலை யுழந்துழந்து உள்ளநீர் அறுவனவாக, தாம் வேண்டினவரை விரும்பி நெகிழ்ந்து கண்டகண்கள், (எ - று).

இஃது இவ்வாறு அழுதல் தகாதென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 7

1178. பெயலாற்றா நீருலந்த வுண்க ணுயலாற்றா
1174 வுய்வினோ யென்க ணிறுத்து.

(இ - ள்.). உயல் ஆற்றாத என்மாட்டு உய்வில்லாத நோயை உண்கண்கள் நிறுத்தி, தாமும் அழமாட்டாவாய் நீருலந்தன, (எ - று).

கண்கள் தாம் நினைத்தது முடித்துத் தொழின்மாறினவென்று கூறியவாறு. 8



1179. வாராக்காற் றுஞ்சா வரிற்றுஞ்சா வாயிடை
1179 யாரஞ ருற்றன கண்.

(இ - ள்.) அவர் வாராத காலத்துப் புணர்ச்சி வேட்கையால் துஞ்சா; வந்த காலத்துப் பிரிவாரென்று அஞ்சித்துஞ்சா; அவ்விரண்டிடத்தினும் மிக்க துன்ப முற்றன கண்கள், (எ - று).

இது நீ உறங்கவேண்டுமென்ற தோழிக்கு, தலைமகள் இன்றேயல்ல, எஞ்ஞான்றும் உறக்கமில்லை யென்றது. 9

1180. படலாற்றா பைத லுழக்குங் கடலாற்றாக்
1175 காமநோய் செய்தவென் கண்.

(இ - ள்.) கடலினும் மிக்க காமநோயை என்மாட்டு நிறுத்துதலானே கண்கள் தாம் உறங்கமாட்டாவாய்த் துன்பமுறுகின்றன, (எ - று).

இது பிறர்க்கு இன்னாமை செய்தார்க்கு இன்னாமை வந்ததென்று தோழிக்குத் தலைமகள் கூறியது. 10

## 4 - ம் அதிகாரம்.

## *பசப்புறுதல்.*

*பசப்புறுதலாவது பசப்புறுதலால் வந்த வருத்தத்தைத் தோழிக்குத் தலைமகள் கூறுதல். காதலித்தார்க்குக் காதலிக்கப்படும்பொருளெய்தாக்கால் அவர் நிறம் வேறுபடுமாதலின், அதன்பின் இது கூறப்பட்டது.*

1181. பசப்பெனப் பேர்பெறுத லன்றே நயப்பித்தார்
1190 நல்காமை தூற்று ரெனின்.

(இ - ள்.) *பசந்தாளெனப் பேர்பெறுதல் நன்று ; நம்மைக்காதலிப்பித்தவர் அருளாமையை இவ்வூரார் கூறுராயின்,* (எ - று).

*இது நின்மேனி பசந்ததென்றதோழிக்கு அவ்வளவாய்க் குற்றமில்லையென்று தலைமகள் கூறியது.* 1

1182. விளக்கற்றம் பார்க்கு மிருளேபோற் கொண்கன்
1186 முயக்கற்றம் பார்க்கும் பசப்பு.

(இ - ள்.) *விளக்கினது இறுதிபார்க்கும் இருளே போல, கொண்கன் முயக்கினது இறுதிபார்த்து நின்றது பசப்பு,* (எ - று).

*இஃது அவர் பிரிந்தது இப்பொழுது; இப்பசப்பு யாங்ஙன்வந்தது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.* 2



1183. புல்லிக் கிடந்தேன் புடைபெயர்ந்தே னவ்வளவி
1187 லள்ளிக்கொள் வற்றே பசப்பு.

(இ - ள்.) *முயங்கிக்கொண்டு கிடந்த யான் அறியாது புடைபெயர்ந்தனன்; அவ்வளவிலே, அள்ளிக்கொள்ளலாம்படி செறிந்தது பசலை,* (எ - று)

*இது தலைமகனால் சொல்லாது பிரியப்பட்ட தலைமகளைப் பிற்றைஞான்று இவள் வேறுபாடு கண்டு இஃதெற்றினாயிற்று என்று குறித்து நோக்கிய தோழிக்குத் தலைமகள் கூறியது.* 3

1184. உவக்காணெங் காதலர் செல்வா ரிவக்காணென்
1185 மேனி பசப்பூர் வது.

(இ - ள்.) எங்காதலராகச் செல்கின்றாரை உங்கே பாராய்; என்மேனி மேலே பசப்புப் பரவுதலை இங்கே பாராய், (எ - று).

இஃது அவர் பிரிந்தது இப்பொழுதாயிருக்க, பசலை பரவாநின்றது; அவர் வருமளவும் யாங்ஙனமாற்ற தாம் என்று தலைமகள் கூறியது. 4

1185. உள்ளுவன் மன்யா னுரைப்ப தவர்திறமாற்
1184 கள்ளம் பிறவோ பசப்பு.

(இ - ள்.) யான் எக்காலமும் நினைப்பேன்; சொல்லுவதும் அவர் திறமே; இத்தன்மையேனாகவும், பசலை வஞ்சனையாகப் பரவாநின்றது; இதற்குநிலை யான் அறிகிலேன், (எ - று).

இஃது ஆற்றாமை மிகாநின்றதென்று கூறியது. 5

1186. அவர்தந்தா ரென்னுந் தகையா லிவர்தந்தென்
1182 மேனிமே லூரும் பசப்பு.

(இ - ள்.) காதலர் வரவிட்டாரென்னும் மிகுதியானே, பசப்பு என்னுடம்பின்மேலே பரந்து ஊரும், (எ - று).

இஃது இப்பசலையை நீக்கவேண்டுமென்ற தோழிக்கு இஃது என் குறிப்பினாலே வந்ததல்ல; நீக்கவேண்டுவாயாயின், அவர்க்குச் சொல்லென்று கூறியது.

1187. பசந்தா ளிவளென்ப தல்லா லிவளைத்
1188 துறந்தா ரவரென்பா ரில்.

(இ - ள்.) இவள் பசந்தாளென்று எனக்குக்குற்றம் காடுமதல்லது, இவளைத் துறந்தார் அவரென்று அவரது கொடுமையைச் சொல்லுவார் இல்லை, (எ - று).

இஃது இப்பசப்பு வாராதாதென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 7

1188. நயந்தவர்க்கு நல்காமை நேர்ந்தேன் பசந்தவென்
1181 பண்பியார்க் குரைக்கோ பிற.





(இ - ள்.) காதலிக்கப்பட்டவர்க்கு அவர் அருளாமையை இசைந்த யான் பசந்தவெனது நிறத்தை மற்றியாவர்க்குச் சொல்லுவேன், (எ - று).

இது தலைமகள் இப்பசப்பை யாவரால் நீக்குவேனென்ற வெருட்சி கொண்டு கூறியது. 8

1189. சாயலு நாணு மவர்கொண்டார் கைம்மாறு
1183 நோயும் பசலையுந் தந்து.

(இ - ள்.) மேன்மையும் நாணமும் அவர் கொண்டுபோனார்; அதற்கு மாறாக நோயையும் பசலையும் தந்து, (எ - று).

மேன்மை - பெண்மை. இது தலைமகள் வெருட்சிகண்டு அது பெண்மையும் நாணமும் உடையார் செயலன்றென்று கடிந்து கூறிய தோழிக்கு அவள் ஆற்றாமையாற் கூறியது. 9

1190. பசக்கமற் பட்டாங்கென் மேனி நயப்பித்தார்
1189 நன்நிலைய ராவ ரெனின்.

(இ - ள்.) என்னுடம்பு நிலையாக என்றும் பசப்பதாக; நம்மைக்காதலித்த வரும் நம்மைப்போலத் துன்பமுறுவராயின், (எ - று).

இது தலைமகனது கொடுமையை உட்கொண்டு கூறியது. 10

## 5 - ம் அதிகாரம்.

## தனிப்படர்மிகுதி.

தனிப்படர்மிகுதியாவது தனிமையால் வந்த துன்ப மிகுதி கூறுதல். யாம் பசப்பால் வருந்துகின்றமைபோல அவரும் வருந்துவாரென்றும் புணர்ச்சியிடையறாமல் இனிது நடக்குமென்றும் நினைத்துத் தலைமகள் தனது துன்பத்தினைக் கூறுதலான், அதன்பின் இது கூறப்பட்டது.

1191. பருவரலும் பைதலுங் காணான்கொல் காம
1197 னொருவர்க ணின்றொழுகு வான்.

(இ - ள்.) தான் ஒருவர் பக்கமாகநின்று ஒழுகித் துன்பஞ்செய்கின்ற காம தேவன், நமது நமோற்றமும் நாம் உறுகின்ற துன்பமும் காணானோ? காண்பானாயின், நம்மை வருத்தானே; தெய்வமாகலான், (எ - று). 1

1192. தாம்வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்றாரே
1191 காமத்துக் காழில் கனி.

(இ - ள்.) தாம் காதலித்தாரால் தம்மைக் காதலிக்கப்பெற்றமகளிர் காம நுகர்ச்சியின்கண் பரலில்லாததோர் பழத்தைப் பெற்றாராவர், (எ - று).



இது தடையின்றி நுகரலாமென்றது. 2

1193. உறுஅர்க் குறுநோ யுரைப்பாய் கடலைச்
1200 செறுஅஅய் வாழிய நெஞ்சு.

(இ - ள்.) நெஞ்சே! நம்மோடு அன்புற்றார்க்குத் தூது விட்டாலும் பயனில்லை யென்று உன்னோடு உறுதார்க்கு நீயுற்ற நோயைச் சொல்ல நினையா நின்றாய்; நம்மை உறங்காமல் வருத்துகின்ற கடலைத் தூர்ப்பாயாயின், அஃது அதனினும் நன்று, (எ - று).

இது தூதுவிடக்கருதிய நெஞ்சுக்குத் தூதுவிட்டாலும் பயனில்லையென்று தலைமகள் கூறியது. 3

1194. நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
1195 தாங்காதல் கொள்ளாக் கடை.

(இ - ள்.) நாம் காதலித்தார் நமக்கு யாதினைச் செய்வர்; தாம் காதலியாத விடத்து, (எ - று). 4

1195. ஒருதலையா னின்னாது காமங்காப் போல
1196 விருதலை யானு மினிது.

(இ - ள்.) ஒருதலை அன்பினாலுண்டாகிய காமம் இன்னாது; காவினது பாரம்போல, இரண்டு தலையும் ஒத்த அன்பினாலுண்டாகிய காமமே இனிதாவது, (எ - று).

இது மேற்கூறிய சொற்கேட்ட தலைவர் அருள் செய்வாரென்றும், தெய்வக் குறிப்பினாற் கூறிய சொற்கேட்டுக்கூடினாலும் பயனில்லை யென்றும் தலைமகள் கூறியது. 5

1196. வாழ்வார்க்கு வானம் பயந்தற்றால் வீழ்வார்க்கு
1192 வீழ்வா ரளிக்கு மளி.

(இ - ள்.) காதலித்தார்க்குக் காதலிக்கப்பட்டார் அருளும் அருள் உயிர் வாழ்வார்க்கு மழை பெய்தாற்போலும்; அஃதில்லார்க்கு யாதுதலை யுள்ளது. ()

இது நின்மேனி பொலிவழிந்த தென்னூர் தோழிக்குத் தலைமகள் கூறியது.

1197. வீழுநர் வீழப் படுவார்க் கமையுமே
1193 வாழுந மென்னுஞ் செருக்கு.

(இ - ள்.) தாம் காதலித்தாரால் காதலிக்கப்படுவார்க்கு உலகின்கண் இருந்து உயிர்வாழ்வோமென்னுங் களிப்பு அமையும், (எ - று).

இது தலைமகள் இருந்தாலும் பயனில்லை; அதிற்காதல் அமையுமென்று வாழ்க்கையை முனிந்து தோழிக்குக் கூறியது. 7

(இ - ள்.) அவர் நெஞ்சத்து யாமுற உளேங்கொல்லோ, எமதுடைய நெஞ்சின்கண் எப்பொழுதும் அவர் உளராகின்றார், (எ - று)



ஓஒ என்பது மிகுதிப்பொருளின்கண் வந்ததாதலான், எப்பொழுதும் என்னும் பொருளதாயிற்று. 2

1203. நினைப்பவர் போன்று நினையார்கொ றும்மல்
1203 சினைப்பது போன்று கெடும்.

(இ - ள்.) அவர் நம்மை நினைப்பவர்போன்று நினையார் கொல்லோ; தும்மல் தோன்றுவதுபோன்று கெடாநின்றது, (எ - று).

தலைமகள் உலகத்துப் பெண்டிராயுள்ளார் கூறுவதொன்றை கண்டுக் கூறினள். 3

1204. தந்நெஞ்சத் தெம்மைக் கடிகொண்டார் காணூர்கொ
1205 லெந்நெஞ்சத் தோவா வரல்.

(இ - ள்.) தமது நெஞ்சின்கண் யாமை யாம் செல்லாமல் காவல்கொண்டார் எமது நெஞ்சின்கண் ஒழியாதே வருதலைக் காணாரோ, (எ - று).

இது நினையாரோ நினைப்பாரோ என்று ஐயப்பட்ட தலைமகள் நினையாரென்று தெளிந்து கூறியது. 4

1205. விளியுமென் னின்னுயிர் வேறல்ல மென்பா
1209 ரளியின்மை யாற்ற நினைந்து.

(இ - ள்.) கம்முள் யாம் வேறல்லமென்று சொன்னவர் அருளின்மையை மிகவும் நினைத்து எனது இனிய உயிர் அழியாநின்றது, (எ - று).

இது தலைமகன் நினையானென்று தெரிந்து தலைமகள் தோழிக்குக் கூறியது.

1206. மறப்பி னெவனுவன் மற்கொன் மறப்பறியே
1207 னுள்ளினு முள்ளஞ் சுடும்.

(இ - ள்.) அவரை மறந்தால் என்னுவன் சொல்லோ; மறப்பறியேனாய் நினைக்கவும் இக்காமம் நெஞ்சத்தைச் சுடாநின்றது, (எ - று).

இது சீரியன உள்ளிப் பூரியன மறத்தல் வேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 6

1207. எனைத்தொன் றினிதேகாண் காமந்தாம் வீழ்வார்
1202 நினைப்ப வருவதொன் றில்.

(இ - ள்.) காமம் யாதொன்றினும் இனியதே காண்; தாம் விரும்பப் படுவாரை நினைக்க வருவதொரு துன்பம் இல்லையாயின், (எ - று).

இது நீ இவ்வாறு ஆற்றாயாகின்றது துன்பம் பயக்குமென்ற தோழிக்குத் தலைமகள் மறுத்துக் கூறியது. 7



1208. மற்றியா னென்னுளேன் மன்னோ வவரோடியா
6 1206 னுற்றநா ளுள்ள வுளேன்.

(இ - ள்.) யான் அவரோடு புணர்ந்த நாள் இன்பத்தை நினைத்தலானே உயிர் வாழ்கின்றேன்; அல்லது யாதொன்றினான் யான் உளேனாய் வாழ்கின்றேன்

இது தலைமகன் தலைபிரிவை நினைந்து ஆற்றாளாயின தலைமகளை நோக்கி நீ இவ்வாறு நினைந்திரங்கல் உயிர்க்கு இறுதியாகுமென்ற தோழிக்கு அவள் கூறியது. 6

1209. எனைத்து நினைப்பினுங் காயா ரனைத்தன்றே
8 1208 காதலர் செய்யுஞ் சிறப்பு.

(இ - ள்) யாம் காதலரை எவ்வளவு நினைப்பினும் வெகுளார்; அவ்வளவன்றே அவர் செய்யும் அருள், (எ - று).

அருள் செய்தலாவது குற்றம் கண்டாலும் வெகுளாமை. 9

1210. விடாஅது சென்றாரைக் கண்ணினாற் காணப்
10 1210 படாஅதி வாழி மதி.

(இ - ள்.) என்னெஞ்சை விடாது போனவரைக் கண்ணினாற் காணுமாறு படுகின்றதில்லை ஆகாதி, (எ - று).

பட்டதாயின், என்கண் உறங்கா; உறங்கினல்லது அவரைக் காணலாமென்பது கருத்து. இது மதியுடன் புலந்து கூறியது. இதனானே கனவினுள் வருதல் முற்றதும் கூறினார் 10

## 7 - ம் அதிகாரம்.

## கனவுநிலை யுரைத்தல்.

கனவுநிலையுரைத்தலாவது கனவினது நிலைமையைச் சொல்லுதல். காதலரை யொழிவின்றி நினைப்பார்க்கு உறக்கமில்லையாகுமா; அவர் உறங்கினாராயின், அவர் அது செய்தொழில் மறவாது நினைப்பாராதலான், அதன்பின் இது கூறப்பட்டது. தலைமகன் நினைத்தலை தலைமகள் நினைத்தலென்னும் இரண்டனுள்ளும் இவட்காயின், உறக்கமில்லையமைவுறக் கொள்க

1211. கயலுண்கண் யானிரப்பத் துஞ்சிற் கலந்தார்க்
1212 குயலுண்மை சாற்றுவேன் மன்.

(இ - ள்) என்னுடைய கயல்போலும் உண்கண் யான் வேண்டிக்கொள்ள உறங்குமாயின். நம்மோடு கலந்தார்க்கு யான் உய்தலுண்மையைச் சொல்லுவே னென்று உறங்குகின்றதில்லையே, (எ - று).



மன் - ஒழியிசையின்கண் வந்தது. கயலுண்கண் - பிறழ்ச்சியுடைய கண். 1

1212. நனவினு னல்கா தவரைக் கனவினுற்
1213 காண்டலி னுண்டேன் னுயிர்.

(இ-ள்.) நனவின்கண் நமக்கு அருளாதவரைக் கனவின்கண் காண்டலானே என்னுயிர் உண்டாகா நின்றது; இல்லையாயின், உயிருண்டாதற்குக் காரண முண்டோ? (எ - று).

இஃது உறங்கினால் காணலாமோவென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.

1213. கனவினு லுண்டாகுங் காம நனவினு
1214 னல்காரை நாடித் தரற்கு.

(இ - ள்) நனவின்கண் நமக்கு அருளாதவரைக் கனவு தேடித் தருதலால், அக்கனவின்கண்ணே காமத்து இன்பம் உண்டாகும், (எ - று).

இது கண்டாற் பயனென்னை? காமநுகர்ச்சியில்லையே என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 3

1214. நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
1215 கண்ட பொழுதே யினிது.

(இ - ள்.) நனவின்கண் கண்டு நுகர்ந்த இன்பமும் அப்பொழுதைக்கு இன்பமாம்; அதுபோல, கனவின்கண் கண்டு நுகர்ந்த இன்பமும் கண்ட அப்பொ

*முளைதக்கு இன்பாம், (எ - று).*

*இது கனவிற் புணர்ச்சி இன்பம் தருமோவென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.* 4

1215. துஞ்சுங்காற் றோண்மேல ராகி விழிக்குங்கா
1218 னெஞ்சத்த ராவர் விரைந்து.

(இ - ள்.) *காதலர் உறங்குங்காலத்துத் தோள்மேலராகி, விழித்தகாலத்து விரைந்து மனத்தின்கண்ணே புகுவர், (எ - று).*

*இஃது உறக்கம் நீங்கினால் யாண்டுப் போவரென்று நகைக்குறிப்பினாற் கூறிய தோழிக்குத் தலைமகள் கூறியது.* 5

1216. நனவினா னல்காக் கொடியார் கனவினா
1217 னென்னெம்மைப் பீழிப் பது. 7

(இ - ள்.) *நனவின்கண் அருளாத கொடுமையையுடையார் கனவின்கண் வந்து எம்மைத் துன்பம் உறுத்துவது எற்றுக்கு? (எ - று).*

*இது விழித்த தலைமகள் ஆற்றாமையால் தோழிக்குக் கூறியது.* 6



1217. நனவினா னல்காரை நோவர் கனவினாற் 9
1219 காதலர்க் காணா தவர்.

(இ - ள்.) *நனவின்கண் வந்து நல்காத காதலரை நோவாநிற்பர், கனவின்கண் அவரைக் காணாதவர்; காண்பாராயின், நோவார், (எ - று).*

*இது தலைமகள் ஆற்றாமை கண்டு தலைமகனை யியற்பழித்த தோழிக்கு அயலார்மேல் வைத்துத் தலைமகள் கூறியது.* 7

1218. நனவினா னங்நீத்தா ரென்பர் கனவினாற் 10
1220 காணார்கொ லிவ்வூ ரவர்.

(இ - ள்.) *இவ்வூரார் நனவின்கண்ணே நம்மை நீங்கியவன்றுரென்று அவரைக் கொடுமை கூறாநிற்பர்; அவர் அவரைக் கனவின்கண் காணார்களோ!* ()

*இஃது இவ்வேறுபாடு அலராயிற்று என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது.* 8

1219. காதலர் தூதொடு வந்த கனவினுக்
1211 கியாதுசெய் வேன்கொல் விருந்து. 1

(இ - ள்) *நம்காதலர் விட்ட தூதரோடே வந்த கனவினுக்கு யான் யாது விருந்து செய்வேன்? (எ - று).*

*இது தலைமகளாற்றுதற் பொருட்டுக் காதலர் வாராநின்றாரென்று தூதர் வரக் கனாக் கண்டேனென்று தோழி சொல்லியது.* 9

1220. நனவென வொன்றில்லை யாயிற் கனவினாற் 6
1216 காதலர் நீங்கலர் மன்.

* (இ - ள்.) *நனவென்று சொல்லப்படுகின்ற ஒருபாவி இல்லையாயின், கனவின்கண் வந்து கூடிய காதலர் என்னைப் பிரியார், (எ - று).* 10

---

## 8 - ம் அதிகாரம்.

## பொழுதுகண்டிரங்கல்.

*பொழுதுகண்டிரங்கலாவது மாலைப்பொழுது கண்டு தலைமகள் வருந்துதல். எனைப்பொழுதில் வருத்தமிலரோவெனின், பிரியப்பட்டார்க்கு எல்லாக் காலமும் வருத்தமுளவாயினும், விடியலும் நண்பகலும் போலாது மாலைப்பொழுது வருத்த மிகுதலால், இது கூறப்பட்டது*

1221. மாலையோ வல்லை மணந்தா ருயிருண்ணும்
1221 வேலைநீ வாழி பொழுது. 1

---

* *இது பரிமேலழகருரை.*



(இ - ள்.) *பொழுதே! நீ வெப்பமுடைமை யானமையான், மாலையோ எனின், அல்லை; முன்பு கூடிப் பிரியப்பட்டார் உயிரை உண்பதாகிய வொரு வேலாயிருந்தாய், (எ - று).*

*இது மாலைப்பொழுது கண்டு தலைமகள் ஆற்றாமையாற் கூறியது.* 1

1222. மாலைநோய் செய்தன் மணந்தா ரகலாத
1226 கால மறிந்த திலேன்.

(இ - ள்.) *மாலைப்பொழுது நோய் செய்தலை, என்னோடு கூடினவர் பிரியாத காலத்தே அறியப் பெற்றிலேன்; அறிந்தேனாயின், இது நோய் செய்யு*

மென்று கூறியிருப்பேன், (எ - று).

இது மாலையால் வருத்தமுற்ற தலைமகன் தலைமகளை நினைந்து கூறியது. 2

1223. அழல்போலு மாலைக்குத் தூதாகி யாயன்
/228 குழல்போலுங் கொல்லும் படை.

(இ - ள்.) நெருப்பையொத்த இம்மாலைப் பொழுதிற்கு முன்பு தூதாகி வந்து இப்பொழுது கொல்லுதற்குப் படையுமாகி வரவல்லது ஆயன் ஊதுங் குழலோ? (எ - று).

இப்பொழுது வருத்துதலின், படை என்றாள். 3

1224. காலைக்குச் செய்தநன் றென்கொ லெவன்கொல்யான்
/225 மாலைக்குச் செய்த பகை.

(இ - ள்.) காதலர் பிரிவதன் முன்னம் பிரிவரென்று அச்சத்தைத் தந்த காலைப்பொழுது பிரிந்தபின்பு வருத்தாது ஒழிதற்கு யான் செய்த நன்மை யாதோ? அவரோடு இன்ப நுகர்தற்கு நட்பாயிருந்த மாலைப்பொழுது பிரிந்த பின்பு வருத்துவதற்கு யான் செய்த பகைமை யாதோ? (எ - று).

இது மாலையது பண்பின்மையை உட்கொண்டு தலைமகள் கூறியது. 4

1225. பொருண்மாலை யாளரை யுள்ளி மருண்மாலை
/230 மாயுமென் மாயா வுயிர்.

(இ-ள்.) பொருள் தேடுதலையே தமக்கு இயல்பாக உடையவரை நினைத்து, மயங்கின மாலைப்பொழுதிலே, எனது சாகமாட்டாத உயிர் மெலியாநின்றது, ()-

இது மாலையாலடர்ப்புண்ட தலைமகள் தலைமகன் அன்பும் அறனும் இலனென்று நினைத்துத் தன்னுள்ளே சொல்லியது. 5

1226. புன்கண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
/222 வன்கண்ண தோநின் றுணை.





(இ - ள்.) மயங்கிய மாலைப்பொழுதே! நீ வாழ்வாயாக; புன்கண்மையை யுடையையாயிருந்தாய்; எம்முடைய கேளிரைப்போல வன்கண்மையை யுடைத்தோ நின் துணையும், (எ - று).

இது தன்னுட்கையாறெய்திடு கிளவி. 6

1227. காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி

1227 மாலை மலருமிந் நோய்.

(இ - ள்.) *இக்காம நோயாகியபூ விடியற்காலத்தே அரும்பி, பகற்பொழு தெல்லாம் முகிழ்முகிழ்த்து, மாலைக்காலத்தே மலராநின்றது,* (எ - று). 7

1228. காதல ரில்வழி மாலை கொலைக்களத்
1224 ஏதிலர் போல வரும்.

(இ - ள்.) *காதலரில்லாதவிடத்து இம்மாலைப்பொழுது கொலைக்களத்துப் பகைவரைப்போல வரும்,* (எ - று).

*இது மாலைக்காலத்து நோய் மிகுதற்குக் காரணமென்னை யென்ற தோழிக் குத் தலைமகள் காரணங்கூறியது.* 8

1229. பதிமருண்டு பைத லுழக்கு மதிமருண்டு
1229 மாலை படர்தரும் போழ்து.

(இ - ள்.) *என்மதி நிலைகலங்க, மயக்கத்தை யுடைத்தாகிய மாலைக்காலம் வரும்பொழுது இப்பதியெல்லாம் மயங்கித் துன்பமுறாநிற்கும்,* (எ - று).
*மதி - மானம்.* 9

1230. பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
1223 துன்பம் வளர வரும்.

(இ - ள்.) *நெருநல் எனக்கு நடுக்கத்தை யுண்டாக்கித் தானும் புன்மை கொண்டிருந்த மாலைப்பொழுது, இன்றும் எனக்கு வெறுப்புத்தோன்றி வருத்தம் மிகும்படியாக வாராநின்றது,* (எ - று).

*இது முன்னை ஞான்று மாலையாலடர்ப்புண்ட தலைமகள் பிற்றைஞான்று மாலை வருவது கண்டு கூறியது.* 10

---

## கற்பியல் - **9** - வது உறுப்புநலனழிதல். 243

### **9** - ம் அதிகாரம்.

## உறுப்புநலனழிதல்.

உறுப்புநலனழிதலாவது தலைமகளது உறுப்புக்கள் நலனழிந்தமை கூறுதல். காதன்மிக்கு இரங்குவாள் அக்காதலை அயலாரறியாமல் அடக்கினகாலத்து வெம்மையுற்ற கொடிபோல, அனைத்துறுப்பும் வாடுதலான், இது பொழுதுகண்டிரங்கலின்பின் கூறப்பட்டது.

1231. சிறுமை நமக்கொழியச் சேட்சென்றா ருள்ளி
1231 நறுமலர் நாணின கண்.

(இ - ள்.) நமக்குத் துன்பம் ஒழிய வேண்டி, நெடுநெறிக்கண் சென்றாரை நினைத்து, கண்கள் நறுவியபூக்களைக்கண்டு நாணுகின்றன, (எ - று).

பலகால் அழுதலால் நிறங்கெட்டதென்றவா றாயிற்று. 1

1232. நயந்தவர் நல்காமை சொல்லுவ போலும்
1232 பசந்து பனிவாருங் கண்.

(இ - ள்.) முன்பு நம்மை விரும்பினவர் நமக்கு அருளாமையைப் பிறர்க்குச் சொல்லுவனபோ லாகாநின்றன; பசப்புற்று நீர்சொரிகின்ற கண்கள், (எ - று).

இது தலைமகள் ஆற்றாமை கண்டு இக்கண்ணீர் அலராகாநின்றதென்று அவள் ஆற்றுதற்பொருட்டுத் தோழி கூறியது. 2

1233. தணந்தமை சால வறிவிப்ப போலு
1233 மணந்தநாள் வீங்கிய தோள்.

(இ - ள்.) காதலர் கூடின நாட்களிற் பூரித்ததோள்கள், அவர் நீங்கினமையை மிகவும் பிறர்க்கு அறிவிப்பனபோ லாகாநின்றன, (எ - று).

கருவியைக் கருத்தாவாகக் கூறினார். பிரிவிடை யாற்றளாகிய தலைமகள் தனதுதோள் வாட்ட முற்றதுகண்ட தோழிக்குச் சொல்லியது. 3

1234. பணைநீங்கப் பைந்தொடி சோருந் துணைநீங்கத்
1234 தொல்கவின் வாடிய தோள்.

(இ - ள்.) துணைவர் நீங்குதலானே பழையஅழகு அழிந்ததோள் பெருமை நீங்குதலானே பசுத்த வளைகளைக் கழலவிடாநின்றது, (எ - று).

பசுத்த வளை-மரகதத்தினாற் செய்த வளை. தோள் அழகழிதலே யன்றி மெலிவதுஞ் செய்யாநின்றதென்று தோழிக்குத் தலைமகள் சொல்லியது. 4

1235. கொடியார் கொடுமை யுரைக்குந் தொடியொடு
1235 தொல்கவின் வாடிய தோள்.

(இ - ள்.) கொடியாரது கொடுமையைச் சொல்லாநின்றன, வளையோடே கூடப் பழையவாகிய அழகினை யிழந்த தோள்களும், (எ - று).

இது தலைமகளாற்றுதற்பொருட்டுத் தலைமகனை யியற்பழித்துத் தோழி கூறியது. 5

1236. தொடியொடு தோணெகிழ நோவ லவரைக்
1236 கொடிய ரெனக்கூற னொந்து.

(இ - ள்.) வளையோடே தோள்கள் பண்டுபோல் இறுகாது நெகிழவும், நினக்குச் சொல்லாது யானே நோவேன்; நீ அவரைக் கொடியரென்று சொல்லுகின்றதற்கு நொந்து, (எ - று).

இஃது ஆற்றாளெனக் கவன்றதோழிக்கு ஆற்றுவலென்பதுபடத் தலைமகள் சொல்லியது. 6

1237. பாடு பெறுதியோ நெஞ்சே கொடியார்க்கென்
1237 வாடுதோட் பூச லுரைத்து.

(இ - ள்.) நெஞ்சே! இக்கொடுமை செய்தவர்க்கு எனதுதோள் வாடுதலானே யூரிலெழுந்த அலரைச் சென்றுசொல்லி, நீயும் நினது வாட்டம் நீங்கி அழகு பெறுவாயோ? (எ - று).

இது நீ அவர்பாற்போகல் வேண்டுமென்று நெஞ்சிற்குத் தலைமகள் சொல்லியது. 7

1238. முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
1239 பேதை பெருமழைக் கண்.

(இ - ள்.) யான் பிரிவதாக நினைத்து, முயக்கத்தின்கண்ணே எனது உடம்பை அகற்ற, அம்முயக்கிடையேசிறுகாற்று ஊடறுத்தலானே எனது நீக்கத்தைப் பொறாது பேதையுடைய பெருத்த குளிர்ந்த கண்கள் பசப்புற்றன, (எ - று).

இது முதலாக மூன்று குறள் தலைமகன் கூறுவன. 8

1239. முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
1238 பைந்தொடிப் பேதை நுதல்.

(இ - ள்.) யான் பிரிவதாக நினைத்து, அவள் முயங்கியகைகளை நீக்கினேனாக; அதனை யறிந்து, பசுத்ததொடியினையுடைய பேதைநுதல் பசந்தது, ( ). 9

1240. கண்ணின் பசப்போ பருவர லெய்தின்றே
1240 யொண்ணுதல் செய்தது கண்டு.

(இ - ள்.) ஒள்ளியநுதல் பசந்ததுகண்டு, கண்ணிலுண்டான பசலை கலங்கிற்று, (எ - று). 10

---



## **10** - ம் அதிகாரம்.

## நெஞ்சொடுகிளத்தல்.

*நெஞ்சொடுகிளத்தலாவது நெஞ்சு முன்னிலையாகத் தலைமகள் சொல்லுதல். காதலடக்க லாற்றாதார் பிறர்க்குச் சொல்லுதற்குநாணித் தன்னெஞ்சிற்குச் சொல்லி யாற்றுதலான், அதன்பின் இது கூறப்பட்டது.*

1241. காமம் விடுவொன்றோ நாண்விடு நன்னெஞ்சே 7
1247 யானோ பொறேனிவ் விரண்டு.

(இ - ள்.) *எனக்கு நல்லநெஞ்சே! ஒன்றிற் காமத்தை விடுதல் வேண்டும்; ஒன்றில் நாணத்தை விடுதல் வேண்டும்; யான் இவ்விரண்டினையுங்கூடப் பொறுத்தலரிது.* (எ - று).

*இது பிரிவிடையாற்றாளாய்த் தலைமகனிருந்துழிச் செல்லக்கருதிய தலைமகள் நாணந்தடுத்தமைகண்டு கூறியது.* 1

1242. துன்னார் துறந்தாரை நெஞ்சத் துடையேமா
1250 வின்னு மிழத்துங் கவின்.

(இ - ள்.) *மனமே! நம்மோடு செறியாராய்த் துறந்து போனவரை நெஞ்சகத்தே யுடையோமாயின், முன்னும் இழந்த கவினொழிய இன்னமுமுள்ள கவினை இழப்போம்; ஆதலான் மறத்தலே கருமம்,* (எ - று).

*ஈண்டு நெஞ்சென்றது மனத்துடையதானத்தை. இது நினைக்கின்றதனுல் பயனில்லை யென்று கூறியது.* 2

1243. காத லவரில ராகநீ நோவது
1242 பேதைமை வாழியென் னெஞ்சு.

(இ - ள்.) *அவர் நம்மேற் காதலிலராக, என் நெஞ்சே! நீ கூட்டத்தைத்*

*கருதி வருந்துகின்றது பேதைமை, (எ - று).*

*இஃது அன்பிலார்மாட்டு வருந்தினும் பயனில்லை யென்றது.* 3

1244. இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்
1243 பைதனோய் செய்தார்க ணில். 3

(இ - ள்.) *நெஞ்சே! நீ இறந்துபடாது இருந்து, அவர்வரவை நினைந்து வருந்துகின்றது யாதிற்கு? வருத்தமுற்று நினைத்தல் நமக்குச் சிறுமைசெய்யும் நோயைத் தந்தார்மாட்டு இல்லை யாயின், (எ - று).*

*இது வாராது வருந்துகின்றாயென்று கூறியது.* 4

1245. கலந்துணர்ந்துங் காதலர்க் கண்டாற் புலந்துணராய்
1246 பொய்க்காய்வு காய்தியென் னெஞ்சு.



(இ - ள்.) *என்னெஞ்சே! நீ காதலர் கொடுமையை அவர்க்கு உட்பட்டு அறிந்து வைத்தும், அவரைக்கண்டால் புலந்து கலக்கமாட்டாது முன்பே கலப்பை; இப்பொழுது பொய்க்காய்வு காயாநின்றாய், (எ - று).* 5

1246. செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
1245 முற்றா லுறாஅ தவர்.

(இ - ள்.) *நெஞ்சே! யாம் உற்றபின்பு உறாது போனவர் செறுத்தாரென்று அவரைக் கைவிடுதல் இயல்போ? (எ - று).*

*உறுதல் - விரைந்துறுதல். தலைமகள் தலைமகன் கொடுமையை உட்கொண்ட நெஞ்சிற்குச் சொல்லியது.* 6

1247. பரிந்தவர் நல்காரென் றேங்கிப் பிரிந்தவர்
1248 பின்செல்வாய் பேதையென் னெஞ்சு.

(இ - ள்.) *என்னெஞ்சே! நீ வருத்தமுற்று அவர் அருளுகின்றிலரென்று இரங்கி நம்மைவிட்டுப்போனவர் பின்னே போகாநின்றாய், பேதையா யிருந்தாய்.*

*இது தலைமகள் தலைமகனிருந்த தேயத்தை நினைத்துக்கவன்ற நெஞ்சிற்குச் சொல்லியது.* 7

1248. கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே யிவையென்னைத்
1244 தின்னு மவர்க்காண லுற்று.

(இ - ள்.) *நெஞ்சே! நீ அவர்மாட்டுச் செல்லுவையாயின், இக்கண்களும்*

அவரைக்காணும்படி கொண்டு செல்வாயாக; அவரைக்காணலுற்று இவை என்னைத் தின்பனபோல நலியாநின்றன, (எ - று).

கொள - பார்க்க. 8

1249. உள்ளத்தார் காத லவராக வுள்ளிநீ
1249 யாருழைச் சேறியென் னெஞ்சு.

(இ - ள்.) என்னெஞ்சே! நின்னாற் காதலிக்கப்பட்டவர் நினது உள்ளத்திலே யிருப்பாராக. நீ நினைத்து யாவர்மாட்டுச் செல்கின்றாய், (எ - று).

இது தலைமகன் வாராமற்போனால் இங்கே காணலாமென்று கூறியது. 9

1250. நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே யெனைத்தொன்று
1241 மெவ்வநோய் தீர்க்கு மருந்து.

(இ - ள்) நெஞ்சே! நீ எனக்கு உற்ற எவ்வநோயைத் தீர்க்கும் மருந்தாவது யாதொன்றாயினும் ஒன்றை விசாரித்துச் சொல்வாய், (எ - று).

இஃது ஆற்றாதலாலிதென்று கூறியது. இவையெல்லாம் தனித்தனி சிலகூற்றென்று கொள்ளப்படும். 10

---

கற்பியல் - **11** - வது நிறையழிதல். 247

## **11** - ம் அதிகாரம்.

# *நிறையழிதல்.*

*நிறையழிதலாவது வேட்கை மிகுதியால் தன் நிலையழிந்து தலைமகள் கூறுதல். நெஞ்சின் மிக்கது புலப்படுமாதலான், அதன்பின் இது கூறப்பட்டது.*

1251. காம மெனவொன்று கண்ணின்றென் னெஞ்சத்தை
1252 யாமத்து மாளுந் தொழில்.

(இ - ள்) காமமென்றொன்று கண்ணோட்டமுடைத்தன்று; என்னெஞ்சத்தை நடுநாள் யாமத்திலும் தொழில்கொள்ளாநின்றது, (எ - று).

தொழில் கொள்ளுதலாவது அப்பொழுது அவர்மாட்டுப் போக விடுத்தல். இது நெஞ்சின் மிக்கது வாய்சோர்ந்து ஆற்றாமையால் தலைமகள் தோழிக்குக் கூறியது.

1252. மறைப்பேன்மற் காமத்தை யானோ குறிப்பின்றித்
1253 தும்மல்போற் றோன்றி விடும்.

(இ-ள்.) காமத்தை யான் அடக்கக்கருதுவேன்; அவ்வாறு செய்யவும், அது தும்மல்தோன்றுமாறுபோல, என் குறிப்பின்றியும் தோன்றாநின்றது, (எ - று).

இது தலைமகள் நிறையழிந்து கூறிய சொற்கேட்டு இவ்வாறு செய்யாது இதனை மறைத்தல் வேண்டுமென்ற தோழிக்கு அவள் கூறியது. 2

1253. நிறையுடையே னென்பேன்மன் யானேயென் காம
1254 மறையிறந்து மன்று படும்.

(இ - ள்.) யானே நிறையுடையே னென்றிருப்பன் ; இப்படி யிருக்கவும், என்காமமானது மறைத்தலைக்கடந்து மன்றின்கண் வெளிப்படாநின்றது,(எ-று).

இது தலைமகள் ஆற்றாமையாற் கூறிய சொற்கேட்டு நிறையுடையார் இவ்வாறு செய்யாரென்ற தோழிக்கு அவள் கூறியது. 3

1254. காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
1251 நாணுத்தாழ் வீழ்த்த கதவு.

(இ - ள்.) காமமாகியமழு உடையாநின்றது; நாணமாகிய தாழில்அடைக்கப்பட்ட அறிவாகிய கதவினை, (எ - று).

இஃது அறிவும் நாணமும் உடையார் இவ்வாறு செய்யாரென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 4

1255. செற்றார்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோ
1255 யுற்றா ரறிவதொன் றன்று.

(இ - ள்.) தம்மை யிகழ்ந்தார்பின் செல்லாத பெரியதகைமை, காமநோயுற்றார் அறிவதொன்று அன்று, (எ - று).



இது தம்மை யிகழ்ந்து போனவர்பின்சென்று இரங்குதல் பெரியார்க்குத் தகாது என்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 5

1256. செற்றவர் பின்சேறல் வேண்டி யளித்தரோ
1256 வெற்றென்னை யுற்ற துயர்.

(இ - ள்.) செறுத்தார்பின்னே யான் சேறலை வேண்டுதலால், என்னை யடைந்ததுயர் எத்தன்மைத்து ; நன்றாக இருக்கின்றது, (எ - று)

இது தனித்திருந்து துயருறுதல்காமத்திற்கு இயற்கையென்று கூறிய தலைமகளை நோக்கி, இது நின்போல்வார்க்குத் தகாதென்ற தோழிக்கு அவள் சொல்லியது. 6

1257. பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
1258 பெண்மை யுடைக்கும் படை.

(இ-ள்.) பலபொய்களையும் பேசவல்ல கள்வனது தாழ்ந்த மொழியல்லவோ? நமது பெண்மையை அழிக்கும் கருவி, (எ - று).

இது பெண்மையல்ல என்ற தோழிக்கு அவன் என்னோடு கலந்த நாளில் சொன்ன சொற்கள்காண் பெண்மையைக் கெடுக்கின்றது; அல்லது கெடாதென்று தலைமகள் கூறியது. 7

1258. நிணந்தீயி லிட்டன்ன நெஞ்சினார்க் குண்டோ
1260 புணர்ந்தூடி நிற்போ மெனல்.

(இ - ள்.) தீயின்கண்ணே நிணத்தையிட்டாற்போல, உருகும் நெஞ்சினையுடையார்க்குக் காதலரை யெதிர்ப்பட்டு வந்து ஊடி நிற்போமென்று நினைத்தல் உளதாகுமோ? (எ - று). 8

1259. புலப்ப லெனச்சென்றேன் புல்லினே னெஞ்சங்
1259 கலத்த லுறுவது கண்டு.

(இ - ள்.) புலப்பலெனச் சென்ற யான் முயங்கினேன், நெஞ்சு முற்பட்டுப் பொருந்துதல் உறுவதனைக் கண்டு, (எ - று).

இஃது ஊடுதல் நீமையென்ற தோழிக்கு முன்னொருகால் அவனைப் பிரிந்து கூடிய என்மனம் செய்தது இதுவென்று தலைமகள் கூறியது. 9

1260. நாணென வொன்றோ வறியலர் காமத்தாற்
1257 பேணியார் பேட்பச் செயின்.

(இ - ள்.) நாணென்பதொன்று அறியார் மகளிர், காமம் காரணமாக, விரும்பப்பட்டவர் தாம் விரும்புமாறு செய்வாராயின், (எ - று).

அவர் விரும்புமாறு செய்வாராயின் நாணமுண்டாகாதென்றவாறு. 10

---

கற்பியல் - **12** - வது அவர்வயின்விதும்பல். 

**12** - ம் அதிகாரம்.

அவர்வயின்விதும்பலாவது அவர் வரவின்கண்ணே விரைதல்; காதலர் வரவு கேட்டிருந்தவென்றவாறு. இவையெல்லாம் தோழிக்குக் கூறினவாகக் கொள்ளப்படும். நிறையழிந்தார் அப்பொழுது காதலர் வரவிற்கு ஆசையுற்றிருப்பாராதலான், அதன்பின் இது கூறப்பட்டது.

1261. வருகமற் கோண்க னொருநாட் பருகுவன்
1266 பைதனோ யெல்லாங் கெட.

(இ - ள்.) கொண்கன் ஒருநாள் வருவானாக வேண்டும்; வந்தானாகில், என் பசலைநோயெல்லாங் கெடப் பருகுவேன், (எ - று).
இது வரவு வேட்கையாற் கூறியது. 1

1262. வினைகலந்து வென்றீக வேந்தன் மனைகலந்து
1268 மாலை யயர்கம் விருந்து.

(இ - ள்.) தம் வேந்தன் போரின்கண்ணே பொருந்தி வெல்வானாக; யாமும் மனையிலே பொருந்தி இம்மாலைப்பொழுதிலே நங்காதலர்க்கு விருந்து செய்வேமாக, (எ - று).
வருதற்கு இடையீடு அவன் வினை முடியாமையென்று நினைத்து அவனை வெல்க என்றாள். மனை - அட்டில். 2

1263. காண்கமற் கோண்கனைக் கண்ணாரக் கண்டபி
1265 னீங்குமென் மென்றோட் பசப்பு.

(இ - ள்.) என்கண்கள் கொண்கனை நிறையக் காண்பனவாக; அவனைக் கண்டபின்பு எனது மெல்லிய தோளினுண்டான பசலை நீங்கும், (எ - று).
இது காண்டல் வேட்கையால் கூறியது. 3

1264. வாளற்றுப் புற்கென்ற கண்ணு மவர்சென்ற
1261 நாளொற்றித் தேய்ந்த விரல்.

(இ - ள்.) கண்களும் அவர் வரவைப்பார்த்து நோதலால் ஒளியிழந்து புல்லென்றன; விரல்களும் அவர்போன நாட்களையெண்ணி முடக்குதலாய்த் தேய்ந்தன, (எ - று).

*இது வரவு காணமையால் தலைமகள் கூறியது* 4

32



1265. ஒருநா ளெழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
1269 வருநாள்வைத் தேங்கு பவர்க்கு. 9

(இ - ள்.) *நெடுநெறிக்கட்சென்றார் வருநாளைக்குறித்து இரங்குமவர்களுக்கு ஒருநாளைப்பொழுதுதானே எழுநாளைப்போலச் செல்கின்றது,* (எ - று). 5

1266. கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக்
1264 கோடுகொ டேறுமென் னெஞ்சு.

(இ-ள்.) *கூடுதற்கு அரிய காமத்தைக் கூடப் பெற்றுப்பிரிந்தவர் வருவாராக நினைந்தே, என்னெஞ்சம் மரத்தின்மேலேறிப் பாராநின்றது,* (எ - று).

*உயர்ந்த மரத்தின்மேல் ஏறினால் சேய்த்தாக வருவாரைக் காணலாமென்று நினைத்து அதனை ஏறிற்றாகக் கூறினாள்.* 6

1267. உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார் 3
1263 வரனசைஇ யின்னு முளேன்.

(இ - ள்.) *இன்பத்தை நச்சாது வலிமையையேநச்சிப்பேசுகின்ற மனமே துணையாகச் சென்றவர் வருவாரென்கின்ற ஆசைப்பாட்டினால் இன்னும் உளேனானேன்,* (எ - று).

*இஃது அவர் வாராரென்று கூறியது.* 7

1268. புலப்பேன்கொல் புல்லுவேன் கொல்லோ கலப்பேன்கொல்
1267 கண்ணன்ன கேளிர் வரின். 7

* (இ - ள்.) *கண்போற் சிறந்தகேளிர் வருவாராயின், அவர் வரவு நீட்டித்தமை நோக்கி யான் புலக்கக் கடவேனோ; அன்றி என்னாற்றாமை நோக்கிப் புல்லக்கடவேனோ; அவ்விரண்டும் வேண்டுதலான் அவ்விரு செயல்களையும் விரவக்கடவேனோ; யாதுசெய்யக் கடவேன் ?* (எ - று). 8

1269. பெறினென்னாம் பெற்றக்கா லென்னா முறினென்னா
1270 முள்ள முடைந்துக்கக் கால். 10

(இ - ள்.) *எனது உள்ளம் உடைந்து போயின், பின்பு அவரைப்பெறுவே*

மென்ற இருந்ததனாற் பயன் என்னுண்டாம்? முன்பே பெற்றேமானேம், அதனால் பயன் என்னுண்டாம்? இப்பொழுது உற்றேமாயின் அதனால் பயன் என்னுண்டாம்? (எ - று).

இது வருவா ரென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 9

* இது பரிமேலழகருரை.



1270. இலங்கிழா யின்று மறப்பினென் மேன்றேள்
கலங்கழியுங் காரிகை நீத்து.

(இ - ள்.) இலங்கிய இழையையுடையவளே! யான் இன்று அவரை மறப்பேனாயின், பண்டைமெலிய என்னுடைய தோள்கள் தமமழகினை நீக்கி வளை முதலான அணிகலங்களையும் கழலவிடும், (எ - று).

இலங்கிழாய் என்றவதனால் வருத்தமில்லாதவளே என்று விளித்தாளென்பது கொள்ளப்படும். 1

---

## **13** - ம் அதிகாரம்.
## குறிப்பறிவுறுத்தல்.

குறிப்பறிவுறுத்தலாவது குறிப்பினை யறிவுறுத்தல.

1271. முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை
நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு.

(இ - ள்.) மொட்டின் முகிழ்ப்பின்கண் உளதாகிய நாற்றம்போல, பேதையுடைய நகைமுகிழ்ப்பின்கண்ணே உளளதோ ரின்பம் உண்டு, (எ - று).

இஃது இரந்து பின்னின்ற தலைமகனை தோழி நகை செய்து வேட்பித்திய போது இவள் குறிப்பு நமக்கு இன்பம் பயக்குமென்று அவன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. 1

1272. செறிதொடி செய்திறந்த கள்ள முறுதுயர்
தீர்க்கு மருந்தொன் றுடைத்து.

(இ - ள்.) செறிந்தவளையினை யுடையாள் செய்து அகன்றகளவு, நீ யுற்றதொருதுன்பததைத் தீர்ப்பதொருமருந்தாதலை உடைத்து, (எ - று).

தோழி மெலிதாகச் சொல்லிக் குறைநயப்பித்தவழி, கேளாரைப்போலத்

தலைமகள் அகன்ற செல்வியுள் எதிர்ப்பட்ட தலைமகற்கு நின்குறை முடியும்; நீ இவ்விடைச்செல்லென்று தோழிகூறியது. 2

1273. மணியிற் றிகழ்தரு நூல்போன் மடந்தை
127. யணியிற் றிகழ்வதொன் றுண்டு.

(இ - ள்.) கோவைப்பட்ட நீலமணியின் கண்ணே தோற்றுகின்ற நூல்போல, இம்மடந்தை அழகினுள்ளே இவள் மறைக்கவும் தோற்றுகின்றதொரு நன்பம் உண்டு, (எ - று).

அழகு - புணர்ச்சியால் வந்த அழகுமாறுமென்னுங் குறிப்பு 3



1274. கண்ணிறைந்த காரிகைக் காம்பேர்தோட் பேதைக்குப்
1272 பெண்ணிறைந்த நீர்மை பெரிது.

(இ - ள்) காண்பார் கண்ணிறைந்த அழகினையும் காம்பையொத்த தோளினையும் உடைய பேதைக்குப் பெண்மை நிறைந்த நீர்மை பெரிது, (எ - று) 4

1275. பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
1276 யன்பின்மை சூழ்வ துடைத்து.

(இ-ள்) ஊடினகாலத்து அதனை அளவறிந்து மிகவுமாற்றிப் புணருங்காலத்து முன்பு ஆற்றாது மேன்மேலும் விரும்புமாறு புணர்தல், யான் அரிதாக ஆற்றி இருக்கும் அன்பின்மையை எண்ணுவதொரு புரிவுடைத்து, (எ - று)

இது . . வுற்ற தலைமகனது குறிப்பறிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது. 5

1276. தண்ணந் துறைவன் றணந்தமை நம்மினு
1277 முன்ன முணர்ந்த வளை

(இ - ள்) குளிர்ந்த துறையையுடையவன் நம்மை நீங்கினமையை, நாம் அறிவதற்கு முன்னே வளைகள் அறிந்தன, (எ - று) 6

1277. பெண்ணினாற் பெண்மை யுடைத்தென்ப கண்ணினாற்
1280 காமநோய் சொல்லி யிரவு

(இ - ள்) வாயாற் சொல்லாது கண்ணினாலே காமநோயைச் சொல்லி வேண்டிக்கோடல், தமது இயல்பாகிய பெண்மையோடே பின்னையும் ஒரு பெண்மையுடைத்தென்று சொல்லுவர் அறிவோர், (எ - று)

*இது பிரிவுணர்த்திய தலைமகள் குறிப்புக்கண்டு தலைமகற்குத் தோழி சொல்லியது* 7

1278. தொடிநோக்கி மென்றோளு நோக்கி யடிநோக்கி
12-19 யஃதாண் டவள்செய் தது.

(இ - ள்) *தொடியையும் நோக்கி, மெல்லிய தோளினையும் நோக்கி, அடியையும் நோக்கி, அவள் அவ்விடத்துச் செய்த குறிப்பு, அதுவாயிருந்தது.* ( ) 8

*அது - உடன்போக்கு*

1279. நெருநற்றுச் சென்றாரெங் காதலர் யாமு
1278 மெழுநாளே மேனி பசந்து.

(இ - ள் *எமது காதலர் பிரிந்து நெருநற்றுச் சென்றார், யாமும் மேனி பசந்து எழுநாளுடையமாயினேம்,* (எ - று)



*இஃது அவர் பிரிவதன் முன்னும் பிரிவரென் றேங்கி, இன்புற்றிலமென்று தலைமகள் கூறியது.* 9

1280. கரப்பினுங் கையிகந் தொல்லாநின் னுண்க
1271 ணுரைக்க லுறுவதொன் றுண்டு.

* (இ - ள்.) *நீ சொல்லாது மறைத்தாயாயினும், அதற்குடம்படாதே நின்னைக் கைகடந்து நின்னுண்களே எனக்குச் சொல்ல லுறுவதொரு காரியமுண்டாயிராநின்றது; இனியதனை நீயே தெளியச் சொல்வாயாக,* (எ - று). 10

---

## **14** - ம் அதிகாரம்.

## *புணர்ச்சிவிதும்பல்.*

*புணர்ச்சிவிதும்பலாவது பிரிந்துகூடின தலைமகனும் தலைமகளும் புணர்தல் வேண்டி ஒருவரினொருவர் முந்துமுந்து விரைதல்.*

1281. மலரினு மெல்லிது காமஞ் சிலரதன்
1289 செவ்வி தலைப்படு வார்.

(இ - ள்.) *எல்லாவற்றினும் மெல்லிதாகிய பூவினும் மெல்லிதாயிருக்கும்*

காமர் ; அதனது செவ்வியைப் பெறுவார் உடைசத் ச்சிலர். (எ - று).

இது தலைமகன் புணர்ச்சிக் குறிப்புக்கண்டு பின்பு ஊடிக்கொள்ளலாம் ; இப்பொழுது கூடுவையாயின், ஆகாது, செலுத்தப்புமன்று புணர்ச்சி வேட்கையால் தலைமகள் நெஞ்சொடு கூறியது. 1

1282. உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலுங்
1281 கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

(இ - ள்) காதலரை நினைத்த அளவிலே களிப்புப்பெறுதலும், கண்ட அளவிலே மகிழ்ச்சி பெறுதலும் களித்தலையும் மகிழ்தலையும் தனக்கு இயல்பாக வுடைய கள்ளிற்கு இல்லை ; காமத்திற்கு உண்டு, (எ - று).

கள்ளிற்கு உண்ணக்களித்தலும் மகிழ்தலுமுண்டு ; காமத்திற்கு உள்ளக் களித்தலும் காண மகிழ்தலுமுண்டு என்றவாறு 2

1283. தினைத்துணையு மூடாமை வேண்டும் பனைத்துணையுங்
1282 காம நிறைய வரின்.

* இது பரிமேலழகருரை



(இ - ள்.) நெஞ்சே! நீ தினையளவும் ஊடாதொழிதல் வேண்டும்; பனையளவினும் மிக காமநுகர்ச்சி வருமாயின், (எ - று).

இஃது ஊடநினைத்த நெஞ்சிற்குத் தலைமகள் கூறியது. 3

1284. உய்த்த லறிந்து புனல்பாய் பவரேபோற்
1287 பொய்த்த லறிந்தேன் புலந்து.

(இ - ள்.) தம்மை ஈர்ப்ப அதனையறிந்து வைத்தும், புனலுள் பாய்பவரைப் போல, நெஞ்சு பொய்ப்படுதல் அறிந்துவைத்தும், புலக்கின்றது எதற்கு? (எ-று).

இது புலவிக்குறிப்பு நீங்குவாள் தன்னுள்ளே சொல்லியது 4

1285. கண்ணிற் றனித்தே கலங்கினள் புல்லுதல்
1290 லென்னினுந் தான்விதுப் புற்று.

(இ - ள்.) கண்ணாலே புலந்தும், அதனையும் ஊடி நிறுத்தாது கலக்கமுற்றாள், புணர்தலை என்னினும்மிகத் தான் விரைதலானே, (எ - று).

இது தலைமகளுடைய குறிப்புப் புணர்வுவேட்டல் கண்டு தலைமகன் தன்னுள்ளே சொல்லியது. 5

1286. இளித்தக்க வின்னா செயினுங் களித்தார்க்குக்
1288 கள்ளற்றே கள்வநின் மார்பு.

(இ - ள்) பிறர் இகழத்தக்க இன்னாமைகளை நீ எனக்குச் செய்யவும், மது வுண்டு களித்தார்க்கு அதனுலாய குற்றத்தினைக் கண்டு வைத்தும் அதனை யுண்ணல்வேட்கை நிகழுமாறுபோலப் புணர்வுவேட்கையைத் தாராநின்றது, வஞ்சகா! நின் மார்பு, (எ - று)

இது புலவிக்குறிப்பு நீங்கின தலைமகள் தலைமகற்குச் சொல்லியது 6

1287. ஊடற்கட் சென்றேன்மற் றோழி யதுமறந்து
1284 கூடற்கட் சென்றதென் னெஞ்சு.

(இ - ள்.) தோழி! யான் ஊடலைக் கருதிச்சென்றேன்; அவனைக்கண்ட பொழுதே அதனை மறந்து கூடலைக்கருதிற்று, என்னெஞ்சு, (எ - று).

இது நீ அவனொடு புலவாது கூடியதென்னை யென்று நகையாடிய தோழிக்குத் தலைமகள் கூறியது 7

1288. எழுதுங்காற் கோல்காணாக் கண்ணேபோற் கொண்கன்
1285 பழிகாணேன் கண்ட விடத்து.

(இ - ள்.) கண்ணெழுதுங் காலத்துத் தன் உள்ளகத்துப் புகுந்த கோலைக் காணாத கண்ணைப்போல, கொண்கனது குற்றத்தினையும் அவனைக்கண்ட விடத்துக் கண்டிலேன், (எ - று)

கற்பியல் - **15** - வது நெஞ்சொடுபுலத்தல். 255

இது மேற்கூறிய சொற்கேட்டு நீ அவனைக்கூறிய குற்றமெல்லாம் யாண்டுப்போயின வென்ற தோழிக்குத் தலைமகள் கூறியது. 8

1289. காணுங்காற் காணேன் றவறாய காணாக்காற்
1286 காணேன் றவறல்ல வை.

(இ - ள்.) அவனைக்கண்டபொழுது அவன் குற்றமாயினயாவும் காணேன்; அவனைக்காணாத காலத்து அவன் குற்றமல்லாதன யாவும் காணேன், (எ-று). 9

1290. பேணாது பெட்பவே செய்யினுங் கொண்கனைக்
128[illegible] காணா தமையல கண்.

(இ - ள்.) தம்மை விரும்பாது தன்மனம் விரும்புவனவே செய்தானாயினும், கொண்கனைக் காணாது என்கண்கள் அமையமாட்டா, (எ - று).

இவையெல்லாம் ஊடற்பகுதியானமையும் முன்னுறுபுணர்ச்சியின்மையும் ஆமாறு கண்டுகொள்க. 10

## 15 - ம் அதிகாரம்.

## நெஞ்சொடுபுலத்தல்.

*நெஞ்சொடுபுலத்தலாவது தலைமகன் யாத்திரையிற் பிரிந்துழி அவனோடு புலக்கக் கருதிய தலைமகள் முற்பட அவனோடு கூடவேண்டிய நெஞ்சோடு புலந்து கூறுதல். இனி ஊடிக்கூடல் கூறுகின்றாராகலின், அவ்வூடுதலின் முற்பட இது தோற்றுமாதலின், முற்கூறப்பட்டது.*

1291. அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
1291 நீயெமக் காகா தது.

(இ - ள்.) *அவருடைய நெஞ்சம் அவர்வழி நின்று நம்மை நினையாமையைக் கண்டு வைத்தும். நெஞ்சே! நீ எம்வழி நில்லாது அவரை நினைத்தல் யாதினைக் கருதியோ? (எ - று).*

*இது தலைமகன் வருங்காலத்து வாராத தலைமகனை உள்ளிய நெஞ்சோடு புலந்து கூறியது.* 1

1292. தஞ்சந் தமரல்ல ரேதிலார் தாமுடைய
1300 நெஞ்சந் தமரல் வழி.

(இ - ள்.) *தம்முடைய நெஞ்சும் தமக்குச் சுற்றமல்ல வாகுங்காலத்து, ஏதிலார் சுற்றமல்லாராவது சொல்லல் வேண்டுமோ? (எ - று).* 2

1293. எள்ளி னிளிவாமென் றெண்ணி யவர்திற
1298 முள்ளு முயிர்க்காத நெஞ்சு.



(இ - ள்.) *அவர் திறத்தைத் தானும் இகழ்ந்தால் அதனானே தனக்கு இளிவரவு உளவாகக் கருதி நினையாநின்றது சாவமாட்டாத நெஞ்சு, (எ - று).*

*இது தலைமகள் நெஞ்சு அவரைப்போலத் தானும் இகழலாயிருக்க, இகழாநின்றதுமில்லை; அவர் செயலைக் கேளாது சாவவும் வல்லுகின்றதில்லை யென்று அதனோடு புலந்து கூறியது.* 3

1294. நாணு மறந்தே னவர்மறக் கல்லாவென்
1297 மாணா மடநெஞ்சிற் பட்டு.

(இ - ள்.) *என்கண் செறிவா நினையும் காணத்தையும் கடைப்பிடித்திலேன்;*

அவரை மறக்கமாட்டாத என் நன்மையில்லாத பேதை நெஞ்சோடு கூட்டுப்பட்டு.

இது தலைமகள் யான் காணாது தூதுவிட்டது, பின்நெஞ்சு மறவாமையாலே யென்று அதனோடு புலந்து கூறியது. 4

1295. இனியன்ன நின்னொடு சூழ்வார்யார் நெஞ்சே
1294 துனிசெய்து துவ்வாய்காண் மற்று.

(இ - ள்.) நெஞ்சே! நீ புலவியை நீளச்செய்து, பின்னை நுகரமாட்டாய்; ஆதலான், இனி அப்பெற்றிப்பட்ட எண்ணத்தை நின்னோடு எண்ணுவார் யார்? இல்லை, (எ - று), 5

1296. தனியே யிருந்து நினைத்தக்கா லென்னைத்
1296 தினிய விருந்ததென் னெஞ்சு.

(இ - ள்.) என்னெஞ்சு, யான் தனிப்பட்டிருந்து நினைத்தால் உடம்படாது என்னை நலிவதாக இருந்தது, (எ - று)

இது தலைமகள் நெஞ்சு அவர் செய்கின்ற கொடுமையை யுட்கொண்டு உள்ளாதே, யான்தனிப்பட்டால் நலிவதாக இருந்தது; நீ வருதலானே இப்பொழுது தப்பினேனென்று அதனோடு புலந்து தோழிக்குக் கூறியது. 6

1297. பெறாஅமை யஞ்சும் பெறிற்பிரி வஞ்சு
1295 மறாஅ விடும்பைத்தென் னெஞ்சு.

(இ - ள்.) காதலரைப் பெறாதகாலத்துப் புணர்வு இல்லையோ என்று அஞ்சும்; பெற்றோமாயின், பிரிவாரோ என்று அஞ்சும்; ஆதலால், இடைவிடாத துன்பத்தை உடைத்து என்னெஞ்சு, (எ - று).

இது தலைமகள் ஆற்றாமைகண்டு, தூதுவிடக் கருதிய தோழிக்கு அவர் வந்தாலும் இதற்குள்ளது துன்பமே யென்று அதனோடு புலந்து கூறியது. 7

1298. கெட்டார்க்கு நட்டாரில் லென்பதோ நெஞ்சேநீ
1293 பெட்டாங் கவர்பின் செலல்.



(இ - ள்.) நெஞ்சே! நீ என்னிடத்து நில்லாது வேண்டின வண்ணமே அவர் பின்பே செல்கின்றது, கெட்டார்க்கு நட்டார் இல்லையென்பதனானேயோ?

1299. துன்பத்திற் கியாரே துணையாவர் தாமுடைய
1299 நெஞ்சந் துணையல் வழி.

(இ - ள்.) துன்பமுற்றால் அதற்குத் துணையாவர் உண்டோ? தம்முடைய நெஞ்சம் தமக்குத் துணையல்லாத காலத்து, (எ - று).

இது தலைமகள் துணையாவார் யாரென்ற தோழிக்குக் கூறியது. 9

1300. உறாஅ தவர்க்கண்ட கண்ணு மவரைச்
1292 செறாஅரெனச் சேறியென் னெஞ்சு.

(இ - ள்.) என்னெஞ்சே! நீ அன்புறாதாரைக் கண்ட விடத்தும் செற்றம் நீங்குவாரென அவர்மாட்டுச் செல்லாநின்றாய், (எ - று).

இது தலைமகள் தலைமகன்மாட்டுச் செல்லக் கருதிய நெஞ்சொடு புலந்து கூறியது. 10

---

## **16** - ம் அதிகாரம்.

## புலவி

புலவியாவது தலைமகனோடு தலைமகள் புலந்து கூறுதல். இது வெளிப் பட்டு நிகழ்தலின், அதன்பின் கூறப்பட்டது.

1301. புல்லா திராஅப் புலத்தை யவருறு
1301 மல்லல்யாங் காண்கஞ் சிறிது.

(இ - ள்.) நம் காதலர் வந்தால் புல்லாதிருந்து புலத்தல்வேண்டும்; அவ் விடத்து அவருறும் கலக்கத்தை யாம் சிறிது காண்போமாக, (எ - று).

இது வாயில் வேண்டிச் சென்ற தோழி தலைமகள் புலவிக்குறிப்புக் கண்டு முகங்கொடாமைப்பொருட்டு இனிமை கூறியது. 1

1302. நலத்தகை நல்லவர்க் கோரம் புலத்தகை
1305 பூவன்ன கண்ணா ரகத்து.

(இ - ள்.) நலத்தகையினானே நல்லாரான பரத்தையர்க்கு ஓரழகாம்; பூ வன்னகண்ணார்மாட்டுப் புலத்தல், (எ - று).

நமக்கு ஆகார்மாட்டுப் புலத்தல் நீதென்றவாறு. இது பரத்தையரோடு புலந்து கூறிய தலைமகட்குத் தோழி கூறியது. 2

33

1303. உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது
1302 மிக்கற்றா னீள விடல்.

(இ - ள்.) நுகர்வனவற்றிற்கு உப்பமைந்தாற்போல இனிமை யுண்டாக்கும் புலவி; அதனை நீளவிடல் அவ்வுப்பு சிறிது மிக்காற்போல இன்னாதாம்.

இது வாயில் வேண்டிய தோழிக்குத் தலைமகள் மறுத்தவிடத்துப் புலவியை நீளவிடுதல் தகாதென்று அவள் கூறியது. 3

1304. ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது
1307 நீடுவ தன்றுகொ லென்று.

(இ - ள்.) ஊடல் செய்யின் இன்பம் உண்டாயினும், அதன்கண்ணும் ஒருதுன்பம் உண்டு: புணருங்கால் அது நீட்டிக்குங்கொல்லோ? நீட்டியாதோ? என்று ஐயுறுதலால், (எ - று).

இது தலைமகள் ஆற்றாமை வாயிலாகப் புலக்க, தலைமகன் அது கண்டு சொல்லியது. 4

1305. நீரு நிழல தினிதே புலவியும்
1309 வீழுநர் கண்ணே யினிது.

(இ-ள்.) குளிர்ச்சியைத் தனக்கு இயல்பாக வுடையநீரும் நிழலின்கண்ணதே யாயின், இனிதாம்; அதுபோல, புலவியும் அன்புடையார்மாட்டேயாயின், இனிதாம், (எ - று). 5

1306. துனியும் புலவியு மில்லாயிற் காமங்
1306 கனியுங் கருக்காயு மற்று.

(இ - ள்.) உணராது நீட்டிக்கின்றதுனியும உணர நின்ற புலவியும் இல்லையாயின், காமம் அழுகிய பழம்போலப் புளிக்கும; காய்போலத் துவர்க்கும் ஆதலால், (எ - று)

இஃது உணர்தற்கு வல்லது உளதென்று தலைமகள் கூறியது. 6

1307. ஊடி யவரை யுணராமை வாடிய
1304 வள்ளி முதலரிந் தற்று.

(இ - ள்.) நும்போலி ஊடிக்கண்டிர் இவையிற்றால் வரும் பயன் இல்லை; நின்னோடு ஒருநல் ஊடிய காமக்கிழத்தியரை ஊடல் தீராது பெயர்தல், வாடிய கொடியை அடியிலே அறுத்தாற்போலும், (எ - று).

இது காமக்கிழத்தியரை ஊடல தீராமை தீது; அண்டுப்போ மென்று தலை மகள் கூறியது. 7



1308. நோத லெவன்மற்று நொந்தாரேன் றஃதறியுங்
1308 காதல ரில்லா வழி.

(இ - ள்.) யான் நோகின்றதனல் பயனென்னே? இவர் நொந்தாரென்று நினைத்து, அதனை யறிந்துதீர்க்கும் காதலர் மனமிலாராகியவிடத்து, (எ - று).

இஃது உணர்ப்புவயின்வாராவூடற்கண் தலைமகள் புலந்துழி, அதனை யறிந்து அப்புலம்நீக்காழி அவனுக்குச் சொல்லியது. 8

1309. ஊட லுணங்க விடுவாரோ டென்னெஞ்சங்
1310 கூடுவே மென்ப தவா.

(இ - ள்) என் புலவியைச் சாகவிட்டிருக்க வல்லாரோடு என்னெஞ்சு, கூடுவேமென்று நினைக்கின்றது தன்னுடைய பாட்டால், (எ - று)

இது புலவி நீக்கவேண்டுமென்ற தோழிக்குத் தலைமகள் புலவி தீராளாய்ச் சொல்லியது. 9

1310. அலந்தா ரை யல்லனோய் செய்தற்றுற் றம்மைப்
1303 புலந்தாரைப் புல்லா விடல்.

(இ - ள்.) தம்மைப் பெறுது புலந்த மகளிரைப் புலவிநீக்கிக் கலவாது ஆடவா மேறல், முன்டே துன்பமுற்றழிந்தாரை அதன்மேலும் மிக்க துன்பத்தினைச செய்தார்போலுமா, (எ - று). 10

---

## 17 - ம் அதிகாரம்.

## புலவி நுணுக்கம்.

புலவி நுணுக்கமாவது தலைமகன்மாட்டுத் தவறிலவாயினும், தன்காதல் மிகுதியால் சொல்லுமதத்தினும் குறிப்பெச்சத்தினுனும் வேறுபடப் பொருள் கொண்டு, தலைமகள் புலந்து கூறுதல். இது செவ்வியற்றேன்று மாதவின் நுணுக்கமாயிற்று.

1311. யாரினும் காதல மென்றேனா வூடினள்
1314 யாரினும் யாரினு மென்று.

(இ - ள்.) நருவரும் ஒருதன்மையாக அன்பிலராய் புணர்தற்குரியாரிலும் யாம் காதலுடையேமென்று சொன்னேனாக, அதனை அவ்வாறு கொள்ளாது நீர் அன்புபட்டார் பலருள்ளும் யாரினும் யாரினும் அன்புடையீரென்று சொல்லி ஊடினாள், (எ - று)

* இது பரிபோலழகருரை.



1312. இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனாக்
1315 கண்ணிறை நீர்கொண் டனள்.

(இ - ள்.) இப்பிறப்பிலே யாம் பிரியோமென்று சொன்னேனாக; அதனால், மறுபிறப்பின்கண் பிரிவுண்டென்று கருதிக் கண்ணிறைய நீர் கொண்டாள். 2

1313. வழுத்தினா டும்மினே மாக வழித்தழுதாள்
1317 யாருள்ளித் தும்மினீ ரென்று.

(இ - ள்.) யாம் தும்மினேம்; அதற்காக வாழ்த்தினாள்; நும்மை யார் நினைக்கத் தும்மினீர் என்று சொல்லி மீட்டும் அழுதாள், (எ - று).

இது தும்மினும் குற்றமென்று கூறியது. 3

1314. தும்முச் செறுப்ப வழுதா ளுமருள்ள
1318 லெம்மை மறைத்திரோ வென்று.

(இ - ள்.) தும்மல் தோற்ற, அதனை யடக்கினேன்; அதற்காக, நுமர் உள்ளினமையை எமக்கு மறைக்கின்றீரோ வென்று சொல்லி அழுதாள், (எ - று).

இது தும்மாதொழியினும் குற்றமென்று கூறியது. 4

1315. நினைத்திருந்து நோக்கினுங் காயு மனைத்துநீர்
1320 யாருள்ளி நோக்கினீ ரென்று.

(இ - ள்.) தனது உறுப்புக்களோடு வேறொன்றை உவமிக்க ஒண்ணாமையை யெண்ணி நோக்க இருப்பினும், என்னுறுப்பெல்லாம் நீர் காதலித்தவர்களில் யாருறுப்புக்கு ஒக்குமென்று நினைத்திருந்து நோக்கினீரென்று சொல்லி வெகுளும், (எ - று).

இது பார்க்கினும் குற்றமென்று கூறியது. 5

1316. கோட்டுப்பூச் சூடினுங் காயு மொருத்தியைக்

1313 காட்டிய சூடினீ ரென்று.

(இ - ள்.) பக்கப்பூச் சூடினும் ஒருத்திக்குக் காட்டுதற்காகச் சூடினீரெ ன்று சொல்லிக் காயும், (எ - று).

பக்கப்பூ - தும்பைப்பூ. கோட்டுப்பூச் சூடினீர் என்பதற்கு வளைப்பூச்சூடினீ ரெனினுமாம். இது கோலஞ்செய்யினும் குற்றமென்று கூறியது. 6

1317. தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
1319 ரிந்நீர ராகுதி ரென்று.

(இ - ள்.) தன்னை ஊடல் தீர்த்தற்கு உணர்த்தினும், பிறர்க்கும் நீர் இவ் வாறு செய்வீரே யென்றுசொல்லி வெகுளும், (எ - று).

இது தன்னைப்போற்றினும் குற்றமென்று கூறியது. 7



1318. உள்ளினே மென்றீர்மற் றெம்மறந்தீ ரென்றெம்மைப்
1316 புல்லாள் புலத்தக் கனள்.

(இ - ள்.) அவ்விடத்து எம்மை நினைத்தோமென்றீர்; மறந்தாலன்றே நினைப்பார்; ஆதலான், எங்களை மறந்தீரென்று சொல்லி எம்மை முயங் காளாய்ப் புலவிக்குத் தகுதியாளாயினள், (எ - று).

இது நினைத்தோமெனினும் குற்றமென்று கூறியது. 8

1319. பெண்ணியலா ரெல்லாருங் கண்ணிற் பொதுவுண்பர்
1311 நண்ணேன் பரத்தநின் மார்பு.

(இ - ள்.) பரத்தமையை யுடையாய்! நின்மார்பைப் பெண்மை யுடையா ரெல்லாரும் தமக்குப்பொதுவாக நினைத்துக் கண்ணினாலே நுகராநிற்பர்; அத னால், யான் அதனைத் தீண்டேன், (எ - று).

இது தலைமகள் புலவிகண்டு என்மாட்டுக் குற்றமியாதோவென்று கூறிய தலைமகற்கு அவள் கூறியது. 9

1320. ஊடி யிருந்தேமாத் தும்மினார் யாந்தம்மை
1312 நீடுவாழ் கென்ப தறிந்து.

(இ-ள்.) தம்மோடு புலந்து உரையாடாது இருந்தேமாக; அவ்விடத்து யாம்

தம்மை நெடிதுவாழுவீரென்று சொல்லுவேமென்பதனை யறிந்துத் தும்மினர்.

இது தலைமகள் தோழிக்குக் கூறியது. 10

---

## 18 - ம் அதிகாரம்.
## ஊ ட லு வ கை .

ஊடலுவகையாவது தலைமகன் மற்றுள்ள நாள்கள்போலன்றி அன்றையிற் புணர்ச்சி பெரியதோ ரின்பமுடைத்தென்று அதற்குக் காரணமாய ஊடலை வியந்து கூறுதலும் அவ்வண்ணமே தலைமகள் கூறுதலுமாம். இது மேலதனோடியையும்.

1321. ஊடுக மன்னோ வொளியிழை யாமிரப்ப
1329 நீடுக மன்னோ விரா.

(இ - ள்.) விளங்கிய இழையினையுடையாள் என்றும் ஊடுவாளாகவேண்டும்; யாம் இவளை இரந்து ஊடல் தீர்க்கும் அளவும் இராப்பொழுது நெடிதாக வேண்டும், (எ - று).

இது மனவூக்கத்தின்கண் வந்தது. 1

1322. ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
1327 கூடலிற் காணப் படும்.



(இ - ள்.) ஊடலின்கண் எதிராது சாய்ந்தவர் வென்றார்; அவ்வெற்றியை நிலைபெறுகின்ற கூடலின்கண்ணே காணலாகும், (எ - று). 2

1323. உணலினு முண்ட தறலினிது காமம்
1326 புணர்தலி னூட லினிது.

(இ - ள்.) உண்பதினும் உண்டது அறுதல் உடம்பிற்கு இன்பமாம்; அது போல, காமத்திற்குப் புணர்தலினும் ஊடுதல் இன்பமாம், (எ-று).

பசியினால் உண்ணும் உணவு இன்பந்தருவது போல, ஊடலினால் கூடல் இன்பந்தரும் என்றவாறு. 3

1324. ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங்
1330 கூடி முயங்கப் பெறின்.

(இ - ள்.) காமத்திற்கு ஊடுதல் இன்பமாம்; அதன்பின் கூடிக்கலக்கப்

பெற்ருல், அதற்கு இன்பமாம், (எ - று).

இது யாம் பெற்ரேம்; பிறர் அதன் செவ்வியறியாமையால் பெறுதலரிதெ ன்று கூறியது. 4

1325. ஊடலிற் ரேன்றுஞ் சிறுதுனி நல்லளி
1322 வாடினும் பாடு பெறும்.

(இ - ள்.) ஊடலிற் ருேன்றும் சிறியதுனி, மிக்கஅருள் பெருதொழியி னும் அழகு உடைத்து, (எ - று).

புணராதொழியினும் இன்பமாமென்று கூறியவாறு. 5

1326. ஊடிப் பெறுகுவங் கொல்லோ நுதல்வெயர்ப்பக்
1328 கூடலிற் ரேன்றிய உப்பு.

(இ - ள்.) நுதல்வெயர்ப்பக்கூடிய கூட்டத்தாலே யுண்டாகிய இன்பத்தை, இன்னும் ஒருகால் ஊடிப்பெறுவோமோ? (எ - று).

ஊடுதல் இருவர்க்கும் உண்டாமாதலால், பொதுப்படக்கூறினுர். இஃது ஊடினுர்க்கு அல்லது இன்பம் பெறுதலரிதென்றது. 6

1327. தவறில ராயினுந் தாம்வீழ்வார் மென்ரே
1325 ளகறலி னுங்கோன் றுடைத்து.

(இ - ள்.) தாம் தவறிலராயினும், தாம் காதலிக்கப்பட்டாரது மென்ரேள் களை நீங்குதலானே, அஃது ஓரின்பமுடைத்து, (எ - று).

இது குற்றம் உண்டாயினும் இல்லையாயினும், ஊடலிற்கூடல் நன்றென்றது. 7



1328. புல்லி விடாஅப் புலவியுட் டோன்றுமென்
1324 னுள்ள முடைக்கும் படை.

(இ - ள்.) என் உள்ளத்தை அழிக்குங் கருவி, புல்லினவிடத்து விட்டுப் புலந்தவிடத்துத் தோன்றும், (எ - று).

அது புணர்ந்த பின்பு தோன்ருமையால், அதனைக் கெடுக்கும் இன்ப முடைத்தென்று கூறியவாறு. படை - பணிமொழி. இவையெட்டும் தலைமகன் கூற்று. 8

1329. இல்லை தவறவர்க் காயினு மூடுதல்
1321 வல்ல தவரளிக்கு மாறு.

(இ - ள்.) அவர்மாட்டுத் தவறில்லையானாலும், அவர் செய்யும்அருள் ஊடுதலைச் செய்யவற்று, (எ - று).

இது துன்பம் பயப்பதாகிய புலவியைச் செய்கின்றது எற்றுக்கென்று வினவிய தோழிக்குத் தலைமகள் கூறியது. 9

1330. புலத்தலிற் புத்தேணா டுண்டோ நிலத்தொடு
1326 நீரியைந் தன்னா ரகத்து.

(இ - ள்.) நிலனும் நீரும் பொருந்தினாற்போல ஒன்றுபட்ட நெஞ்சுடையார்பாட்டுப் புலத்தல்போல, இன்பந்தருவதொரு புத்தேள் உலகம் உண்டோ? ()

நிலத்தொடு நீரியைதலால் அவை வெப்பமுந்தட்பமுமாய் கூடியிருக்குமாறு போல, இன்பமுந்துன்பமுங்கூட அநுபவிப்பார்பாட் டென்றவாறு. 10

கற்பியல் முற்றிற்று.

காமத்துப்பால் முற்றிற்று.

## திருக்குறள் மூலமும் உரையும் முற்றுப்பெற்றன.

---

### உரையாசிரியர்.

தருமர் மணக்குடவர் தாமத்தர் நச்சர்
பரிமே லழகர் பருதி—திருமலையர்
மல்லர் கவிப்பெருமாள் காளிங்கர் வள்ளுவர்நூற்
கெல்லை யுரையெழுதி னோர்.

---

திருக்குறளின்

சிறப்புப்பாயிரமாகிய

# திருவள்ளுவமாலை.

அசரீரி.

திருத்தகு தெய்வத் திருவள் ளுவரோ
டுருத்தகு நற்பலகை யொக்க—இருக்க
உருத்திர சன்ம ரெனவுரைத்து வானில்
ஒருக்கவோ வென்றதோர் சொல். 1

நாமகள்.

நாடா முதனான் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
எள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு. 2

இறையனார்.

என்றும் புலரா தியாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் றெய்வத் திருமலரோ போன்மன்
பன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல். 3

உக்கிரப்பெருவழுதியார்.

நான்மறையின் மெய்ப்பொருளை முப்பொருளா நான்முகத்தோன்
தான்மறைந்து வள்ளுவனாய்த் தந்துரைத்த—நூன்முறையை
வந்திக்க சென்னிவாய் வாழ்த்துக நன்னெஞ்சஞ்
சிந்திக்க கேட்க செவி. 4

கபிலர்.

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால்—மனையளகு

வள்ளைக குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி. 5

2

## திருவள்ளுவமாலை.

### பரணர்.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞால முழுது நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாமளந்தா ரோர்ந்து. 6

### நக்கீரர்.

தானே முழுதுணர்ந்து தண்டமிழின் வெண்குறளால்
ஆனா வறமுதலா வந்நான்கும்—ஏனோருக்
கூழி னுரைத்தாற்கு மொண்ணீர் முகிலுக்கும்
வாழியுல கென்னாற்று மற்று. 7

### மாமூலனார்.

அறம்பொரு ளின்பம்வீ டென்னுமந் நான்கின்
திறந்தெரிந்து செப்பிய தேவை—மறந்தேயும்
வள்ளுவ னென்பானோர் பேதை யவன்வாய்ச்சொற்
கொள்ளா ரறிவுடை யார். 8

### கல்லாடர்.

ஒன்றே பொருளெனின் வேறென்ப வேறெனின்
அன்றென்ப வாறு சமயத்தார்—நன்றென
எப்பா லவரு மியைபவே வள்ளுவனார்
முப்பான் மொழிந்த மொழி. 9

### சீத்தலைச்சாத்தனார்.

மும்மலையு முந்நாடு முந்நதியு முப்பதியும்
மும்முரச முத்தமிழு முக்கொடியும்—மும்மாவுந்
தாமுடைய மன்னர் தடமுடிமேற் றாரன்றோ
பாமுறைதேர் வள்ளுவர்முப் பால். 10

### மருத்துவன் றாமோதரனார்.

சிந்நீர்க் கண்டந் தெறிசுக்குத் தேனளாய்
மோந்தபின் யார்க்குந் தலைக்குத்தில்—காந்தி

*மலைக்குத்து மால்யானை வள்ளுவர்முப் பாலால்*
*தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு.* 11



### நாகன்றேவனார்.

*தாளார் மலர்ப்பொய்கை தாங்குடைவார் தண்ணீரை*
*வேளா தொழிதல் வியப்பன்று—வாளாதாம்*
*அப்பா லொருபாவை யாய்பவோ வள்ளுவனார்*
*முப்பான் மொழிமூழ்கு வார்.* 12

### அரிசிற்கிழார்.

*பரந்த பொருளெல்லாம் பாரறிய வேறு*
*தெரிந்து திறந்தொறுஞ் சேரச்—சுருங்கிய*
*சொல்லால் விரித்துப் பொருள்விளங்கச் சொல்லுதல்*
*வல்லாரார் வள்ளுவரல் லால்.* 13

### பொன்முடியார்.

*கானின்ற தொங்கலாய் காசிபனார் தந்ததுமுன்*
*கூனின்றளந்த குறளென்ப—நூன்முறையான்*
*வானின்று மண்ணின்றளந்ததே வள்ளுவனார்*
*தாநின் றளந்த குறள்* 14

### கோதமனார்.

*ஆற்ற வழியுமென் றந்தணர்க ணான்மறையைப்*
*போற்றியுரைத் தேட்டின் புறத்தெழுதார்—எட்டெழுதி*
*வல்லுநரும் வல்லாரும் வள்ளுவனார் முப்பாலைச்*
*சொல்லிடினு மாற்றல்சோர் வின்று.* 15

### நத்தத்தனார்.

*ஆயிரத்து முந்நூற்று முப்ப தருங்குறளும்*
*பாயிரத்தி னோடு பகர்ந்ததற்பின்—போயொருத்தர்*
*வாய்க்கேட்க நூலுளவோ மன்னு தமிழ்ப்புலவர்*
*ஆய்க்கேட்க வீற்றிருக்க லாம்.* 16

### முகையலூர்ச்சிறுகருந்தும்பியார்.

*உள்ளுத லுள்ளி யுரைத்த லுரைத்ததனைத்*
*தெள்ளுத லன்றே செயற்பால—வள்ளுவனார்*

*முப்பாலின் மிக்க மொழியுண் . . னப்பகர்வார்*
*எப்பா வலரினு மில்.* 17



## ஆசிரியர் நல்லந்துவனார்.

*சாற்றிய பல்கலையுந் தப்பா வருமறையும்*
*போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே*
*முப்பான் மொழிந்த முதற்பா வலரொப்பார்*
*எப்பா வலரினு மில்.* 18

## கீரந்தையார்.

*தப்பா முதற்பாவாற் றாமாண்ட பாடலினால்*
*முப்பாலி னாற்பான் மொழிந்தவர்—எப்பாலும்*
*வைவைத்த கூர்வேல் வழுதி மனமகிழத்*
*தெய்வத் திருவள் ளுவர்.* 19

## சிறுமேதாவியார்.

*வீடொன்று பாயிர நான்கு விளங்கறம்*
*நாடிய முப்பத்து மூன்றொன்றூழ்—கூடுபொருள்*
*என்னி லெழுப திருபஃதொ றைந்தின்பம்*
*வள்ளுவர் சொன்ன வகை* 20

## நல்கூர்வேள்வியார்.

*உப்பக்க நோக்கி யுபகேசி தோண்மணந்தான்*
*உத்தர மாமதுரைக் கச்சென்ப—இப்பக்கம்*
*மாதாநு பங்கி மறுவில் புலச்செந்நாப்*
*போதார் புனற்கூடற் கச்சு.* 21

## தொடித்தலைவிழுத்தண்டினார்.

*அறநான் கறிபொரு ளேழொன்று காமத்*
*திறமூன் றெனப்பகுதி செய்து—பெறலரிய*

நாலு மொழிந்தபெரு நாவலர் நன்குணர்வார்
போலு மொழிந்த பொருள். 22

வெள்ளிவீதியார்.

செய்யா மொழிக்குந் திருவள் ளுவர்மொழிந்த
பொய்யா மொழிக்கும் பொருளொன்றே—செய்யா
அதற்குரிய ரந்தணரே யாராயி னேனை
இதற்குரிய ரல்லாதா ரில். 23



மாங்குடிமருதனார்.

ஓதற் கெளிதா யுணாதற் கரிதாகி
வேதப் பொருளாய் மிகவிளங்கித்—தீதற்றோர்
உள்ளுதொ றுள்ளுதொ றுள்ள முருக்குமே
வள்ளுவர் வாய்மொழி மாண்பு. 24

எறிச்சலூர்மலாடனார்.

பாயிர நான்கில் லறமிருபான் பன்மூன்றே
தூய துறவறமொன் றூழாக—ஆய
அறத்துப்பா னல்வகையா வாய்ந்துரைத்தார் நூலின்
திறத்துப்பால் வள்ளுவனார் தேர்ந்து. 25

போக்கியார்.

அரசிய லையைந் தமைச்சிய லீரைந்
தருவல் லரணிரண்டொன் றொண்கூழ்—இருவியல்
திண்படை நட்புப் பதினேழ் குடிபதின்மூன்
றெண்பொரு ளேழா மிவை. 26

மோசிகீரனார்.

ஆண்பாலே ழாறிரண்டு பெண்பா லடுத்தன்பு
பூண்பா விருபாலோ ராறாக—மாண்பாய
காமத்தின் பக்கமொரு மூன்றாகக் கட்டுரைத்தார்
நாமத்தின் வள்ளுவனார் நன்கு. 27

காவிரிப்பூம்பட்டினத்துக் காரிக்கண்ணனார்.

ஐயாறு நாறு மதிகார மூன்றுமா

மெய்யாய வேதப் பொருள்விளங்கப்—பொய்யாது
தந்தா னுலகிற்குத் தான்வள் ளுவனாகி
அந்தா மரைமே லயன். 28

### மதுரைத்தமிழ்நாயகனார்.

எல்லாப் பொருளு மிதன்பா லுளவிதன்பால்
இல்லாத வெப்பொருளு மில்லையால்—சொல்லாற்
பரந்தபா வாலென் பயன்வள் ளுவனார்
சுரந்தபா வையத் துணை. 29



### பாரதம்பாடியபெருந்தேவனார்.

எப்பொருளும் யாரு மியல்பி னறிவுறச்
செப்பிய வள்ளுவர்தாஞ் செப்பவரும்—முப்பாற்குப்
பாரதஞ் சீராம கதைமனுப் பண்டைமறை
நேர்வனமற் றில்லை நிகர். 30

### உருத்திரசன்மகண்ணர்.

மணற்கிளைக்க நீரூறு மைந்தர்கள் வாய்வைத்
துணச்சுரக்குந் தாய்முலை யொண்பால்—பிணக்கிலா
வாய்மொழி வள்ளுவர் முப்பான் மதிப்புலவோ
ராய்தொறு மூறு மறிவு. 31

### பெருஞ்சித்தனார்.

ஏதமில் வள்ளுவ ரின்குறள்வெண் பாவினால்
ஓதிய வொண்பொரு ளெல்லாம—உரைத்ததனால்
தாதவிழ் தார்மாறா தாமே தலைப்பயந்த
வேதமே மேதக் கன. 32

### நரிவெருத்தலையார்.

இன்பம் பொருளறம் வீடென்னு மிந்நான்கும்
முன்பறியச் சொன்ன முதுமொழிநூல்—மன்பதைகட்
குள்ள வரிதென் றவைவள் ளுவருலகம்
கொள்ள மொழிந்தார் குறள். 33

மதுரைத்தமிழாசிரியர்செங்குன்றூர்க்கிழார்.

*புலவர் திருவள் ளுவரன்றிப் பூமேற்*
*சிலவர் புலவரெனச் செப்பல்—நிலவு*
*பிறங்கொளிமா லைக்கும் பெயர்மாலை மற்றுங்*
*கறங்கிருண்மா லைக்கும் பெயர்.* 34

மதுரையறுவைவாணிகர் இளவேட்டனார்.

*இன்பமுந் துன்பமு மென்னு மிவையிரண்டு*
*மன்பதைக் கெல்லா மனமகிழ—அன்பொழியா*
*துள்ளி யுணர வுரைத்தாரே யோதுசீர்*
*வள்ளுவர் வாயுறை வாழ்த்து.* 35



கவிசாகரப்பெருந்தேவனார்.

*பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச் சாம்புனதம்*
*ஆவிற் கருமுனியா யானைக்—கமரரும்பல்*
*தேவிற் றிருமா லெனச்சிறந்த தென்பவே*
*பாவிற்கு வள்ளுவர்வெண் பா.* 36

மதுரைப்பெருமருதனார்.

*அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்*
*திறமிருபத் தைந்தாற் றெளிய—முறைமையால்*
*வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்*
*ஓதவழுக் கற்ற துலகு.* 37

கோவூர்க்கிழார்.

*அறமுத னான்கு மகலிடத்தோ ரெல்லாத்*
*திறமுறத் தேர்ந்து தெளியக்—குறள்வெண்பாப்*
*பன்னின வள்ளுவனார் பான்முறைநே ரொவ்வாதே*
*முன்னை முதுவோர் மொழி.* 38

உறையூர் முதுகூற்றனார்.

*தேவிற் சிறந்த திருவள் ளுவர்குறள்வெண்*
*பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—காவிற்*
*குயிலில்லை சொற்சுவை யோர்வில்லை பற்றுஞ்*
*செயலில்லை யென்னுந் திரு.* 39

இழிகட்பெருங்கண்ணனார்.

இம்மை மறுமை யிரண்டு மெழுமைக்குஞ்
செம்மை நெறியிற் றெளிவுபெற—மும்மையின்
வீடவற்றி ஞன்கின் விதிவழங்க வள்ளுவனுர்
பாடின ரின்குறள்வெண் பா. 40

### செயிர்க்காவிரியார்மகனுர் சாத்தனுர்.

ஆவனவு மாகா தனவு மறிவுடையார்
யாவரும் வல்லா ரெடுத்தியம்பத்—தேவர்
திருவள் ளுவர்தாமுஞ் செப்பியவே செய்வார்
பொருவி லொழுக்கம்பூண் டார். 41



### செயலூர்க் கொடுஞ்செங்கண்ணனுர்.

வேதப் பொருளை விரகால் விரித்துலகோர்
ஓதத் தமிழா லுரைசெய்தார்—ஆதலால்
உள்ளுந ருள்ளும் பொருளெல்லா முண்டென்ப
வள்ளுவர் வாய்மொழி மாட்டு. 42

### வண்ணக்கஞ்சாத்தனுர்.

ஆரியமுஞ் செந்தமிழு மாராய்ந் திதனினிது
சீரிய தென்றொன்றைச் செப்பரிதால்—ஆரியம்
வேத முடைத்துத் தமிழ்திரு வள்ளுவனுர்
ஓது குறட்பா வுடைத்து. 43

### களத்தூர்க்கிழார்.

ஒருவ ரிருகுறளே முப்பாலி னோதுந்
தரும முதனுன்குஞ் சாலும்—அருமறைகள்
ஐந்துஞ் சமயநூ லாறுநம் வள்ளுவனுர்
புந்தி மொழிந்த பொருள். 44

### நச்சுமனுர்.

எழுத்தசை சீரடி சொற்பொருள் யாப்பு
வழுக்கில் வனப்பணி வண்ணம்—இழுக்கின்றி
என்றெவர் செய்தன வெல்லா மியம்பின
இன்றிவ ரின்குறள்வெண் பா. 45

## அக்காரக்கனிநச்சமனார்.

கலைநிரம்பிக் காண்டற் கினிதாகிக் கண்ணி
னிலைநிரப்பு நீர்மைத் தெனினும்—தொலைவிலா
வானூர் மதியக் தனக்குண்டோ வள்ளுவர்முப்
பானூ லயத்தின் பயன். 46

## நப்பாலத்தனார்.

அறந்தகளி யான்ற பொருடிரி யின்பு
சிறந்தநெய் செஞ்சொற்றீத் தண்டு—குறும்பாவா
வள்ளுவனா ரேற்றினார் வையத்து வாழ்வார்கள்
உள்ளிரு ணீக்கும் விளக்கு. 47



## குலபதிநாயனார்.

உள்ளக் கமல மலர்த்தி யுளத்துள்ள
தள்ளற் கரியவிரு டள்ளுதலால்—வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பாவும் வெங்கதிரு மொக்குமெனக்
கொள்ளத் தகுங்குணத்தைக் கொண்டு. 48

## தேனீக்குடிக்கீரனார்.

பொய்ப்பால பொய்யேயாய்ப் போயினபொய் யல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே—முப்பாலிற்
றெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து. 49

## கோடிஞாழன்மாணிபூதனார்.

அறனறிந்தே மான்ற பொருளறிந்தே யின்பின்
றிறனறிந்தேம் வீடு தெளிந்தே—மறனெறிந்த
வாளார் நெடுமாற வள்ளுவனார் தம்வாயாற்
கேளா தனவெல்லாங் கேட்டு. 50

## கவுணியனார்.

சிந்தைக் கினிய செவிக்கினிய வாய்க்கினிய
வந்த விருவினைக்கு மாமருந்து—முந்திய
நன்னெறி நாமறிய நாப்புலமை வள்ளுவனார்
பன்னிய வின்குறள்வெண் பா. 51

### மதுரைப்பாலாசிரியனார்.

*வெள்ளி வியாழம் விளங்கிரவி வெண்டிங்கள்*
*பொள்ளென நீக்கும் புறவிருளைத்—தெள்ளிய*
*வள்ளுவ ரின்குறள் வெண்பா வகிலத்தோர்*
*உள்ளிரு ணீக்கு மொளி.* 52

### ஆலங்குடிவங்கனார்.

*வள்ளுவர் பாட்டின் வளமுரைக்கின் வாய்மடுக்குந்*
*தெள்ளமுதின் றீஞ்சுவையு மொவ்வாதாற்—றெள்ளமுதம்*
*உண்டறிவார் தேவ ருலகடைய வுண்ணுமால்*
*வண்டமிழின் முப்பான் மகிழ்ந்து.* 53

திருவள்ளுவ மாலை முற்றிற்று.

---

### இடைக்காடர் பாடல்.

*கடுக்கைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்*
*குறுகத் தறித்த குறள்.*

### ஔவையார் பாடல்.

*அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டி*
*குறுகத் தறித்த குறள்.*

உ

# திருக்குறள் முதற்குறிப்பகராதி.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எண்ணித்துணி | 91 | ஏதிலார்குற்றம் | 37 | ஒற்றுமுரை | 114 |
| எண்ணியவெ | 130 | ஏதிலார்போல | 214 | ஒற்றொற்றித் | 115 |
| எண்ணியா | 98 | ஏந்தியகொ | 176 | ஒற்றொற்று | 115 |
| எண்ணென்ப | 77 | ஏமுற்றவ | 171 | ஒன்றாகநல் | 62 |
| எண்பதத்தாலெ | 192 | ஏரினுநன்று | 200 | ஒன்றாமை | 174 |
| எண்பதத்தாற் | 108 | ஏரினுழாஅ | 5 | ஒன்றாவுலக | 45 |
| எண்பொருள | 84 | ஏவவுஞ்செய் | 166 | ஒன்றானு | 25 |

தொடங்கற்க 96
181 தொடலைக் 222
239 தொடிநோக்கி 252

## திருக்குறள் முதற்குறிப்பகராதி.

218

## மு

திருக்குறள் முதற்குறிப்பகராதி முற்றிற்று.

---

# உரையின் அரும்பத வுரைகள்.

| செய்யுள் எண். | பக்கம். | |
|---|---|---|
| 4 | 2 | அவலக் கவலைக் கையாறு - அவலமும், கவலையும், கையாறும். (அவலம் - மனவுறுதியின்மை ; கவலை - சித்தம் விகார முற்றுக் கலங்குதல ; கையாறு - செயலறுதல்). |
| 5 | ,, | பிறவாழி - பொருளும், இன்பமுமாகிய கடல். |
| 6 | ,, | இடும்பை - பிறவித் துன்பங்கள். |
| 10 | 3 | பொறிகள் - கண் முதலிய வுறுப்புக்கள். |
| 11 | ,, | வானம் புலருமாகில் - மழை பெய்யாதாயின். |
| ,, | ,, | நான்கு வகைபபட்ட அறங்கள் - பூசை, தானம், தவம், ஒழுக்கம். |
| 14 | 4 | துய்க்கலாற்றாது - அநுபவித்தல் முடியாமல். |
| 15 | ,, | பசுத்த - பசிய. |
| 17 | 5 | புயலாகிய வாரி - மழையென்னும் வருவாய். |
| 21 | 6 | விழுப்பத்தின் பொருட்டு - மேன்மையின் பொருட்டு. |
| 23 | ,, | புலன்கள் - சப்தாதி விஷயங்கள். |
| 24 | ,, | கூறுபடுத்து - பிரிவு செய்து. |
| 29 | 7 | இயமம் - கொல்லாமை, மெய்ம்மை கூறல், திருடாமை, பிறர் பொருட்கண் ஆசையில்லாமை, இந்திரியங்களை யடக்கல் |

| | | |
|---|---|---|
| | | என்பனவாம். |
| | ,, | நியமம் - தவம், சௌசம் (உடலை நீரினாலும் மனதைச் சத்தியத்தினாலும் தூய்மையாக்கல்), தத்துவ நூலாராய்ச்சி, பெற்றது கொண்டு மகிழ்தல், தெய்வ வழிபாடு - என்பனவாம். |
| 30 | ,, | செவ்விய நட்பஞ் செய்தலே - செவ்வையான அருள் செய்தலே. |
| 31 | 8 | ஆக்கம் - மேன்மேலுயர்தல். |
| 34 | ,, | காவுவான் - சுமப்பான். |
| ,, | ,, | பொன்றினாலும் - இறந்தாலும். |
| 39 | 9 | மனக்கோட்டம் - பொறாமை. |



## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| இல்லறவியல் | 10 | காருகத்தம் - கிருகஸ்தம் (இல்வாழ்க்கை) |
| ,, | ,, | வள்ளியோர் - ஈகையுடையோர். |
| ,, | ,, | நல்கூர்ந்தார் - வறியார். |
| 42 | 11 | வருணம் - சாதி. |
| ,, | ,, | நாமம் - பெயர் |
| ,, | ,, | புறங்காடு - சுடுகாடு. |
| 57 | 14 | பேணி - உபசரித்து |
| 72 | 16 | வலிய பாரிடத்து - வலிய (கெட்டியான) பூமியினிடத்து |
| 77 | 17 | போகம் துய்ப்பர் - இன்பம் அனுபவிப்பர் |
| 78 | ,, | ஆர்வமுடைமை - விருப்பமுடைமை |
| 96 | 20 | உறுவிக்கின்ற - அடைவிக்கின்ற |
| ,, | ,, | நுகராமை - (சுவை முதலிய விஷயங்களை) அனுபவியாமை |
| 97 | ,, | பயந்து - கொடுத்து |
| 98 | ,, | மாற்றத்தினது - சொல்லினது |
| 103 | 21 | நிறைபாற்றுதல் - நிறையினாலே ஒத்தல் |
| 111 | 22 | வீக்கம் தாக்கமற்று - உயர்வு தாழ்வு இன்றி |
| 158 | 31 | ஒறுத்தவர்க்கு - தண்டித்தவர்க்கு |
| 162 | 32 | விழுமிய பேறுகளுள் - மேலாய பயன்களுள் |
| 169 | 33 | தீக்கதி - நரகம் |
| 172 | ,, | ஈரமில்லாதன - அன்போடு பொருந்தாத செயல்கள் |
| 173 | 34 | புன்மை - குற்றம் |

| | | |
|---|---|---|
| 175 | ,, | நடுவன்மைக்கு - நடுவுநிலைமையல்லாமைக்கு |
| 184 | 36 | புல்லிய குணம் - இழிந்த குணம் |
| 186 | ,, | கேளிர் - உறவினர் |
| 187 | ,, | செறிந்தார் - நெருங்கினவர் |
| 195 | 38 | நீர்மையுடையார் - நற்குணமுடையார் |
| ,, | ,, | சீர்மை - மேம்பாடு |
| ,, | ,, | சிறப்பு - நன்குமதிப்பு |
| 202 | 39 | உய்தியுண்டாம் - தப்புதலுண்டாம் |
| 212 | 41 | கைம்மாறு - பிரதியுபகாரம் |
| ,, | ,, | நச்சப்படுகின்ற - விரும்பப்படுகின்ற |
| 218 | ,, | பிணிமருந்தாகி - நோய்தீர்க்கும் மருந்தாகி |
| 222 | 43 | குறியெதிர்ப்பு - அளவுகுறித்து வாங்கி அவ்வாங்கியவாறே எதிர் கொடுப்பது |
| 237 | 46 | ஒழிபு - மிஞ்சிநிற்பது |

## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம் | |
|---|---|---|
| 237 | 46 | வசை - இகழ்ச்சி |
| 245 | 48 | அல்லல் - துன்பம் |
| 258 | 50 | அவி - நெய் முதலியன |
| ,, | ,, | வேள்வி - யாகம் |
| ,, | ,, | வேட்டலினும் - செய்தலினும் |
| 266 | 52 | நலியநலிய - வருத்தவருத்த |
| 267 | ,, | கூற்றத்தை - எமனை |
| 268 | ,, | தெறுதலும் - கெடுத்தலும் |
| 271 | 53 | மாசு - காமம், வெகுளி, மயக்கங்கள் |
| ,, | ,, | நீர்மையை - ஒழுக்கத்தை |
| 272 | ,, | நேர்படார் - உடன்படார் |
| 273 | ,, | பெற்றம் - பசு |
| ,, | ,, | பைங்கூழ் - பயிர் |
| 274 | ,, | தூற்றிலே - புதரிலே |
| ,, | ,, | புள்ளை - பறவைகளை |
| 279 | 54 | மழித்தலும் - சிரைத்தலும் |
| 280 | ,, | கோடியாழ் - வளைந்தவீணை |

| | | |
|---|---|---|
| 286 | 56 | நேர் ஆகாதன - தகுதியல்லாத செயல்கள் |
| 297 | 58 | பொய்யாமையை - பொய் பேசாமையை |
| 299 | ,, | தூயதாதல் - பரிசுத்தமுடையதாதல் |
| 302 | 59 | இயலுமிடத்தே - பலிக்குமிடத்தே |
| 303 | ,, | இன்னாதவற்றை - துன்பந்தருவனவற்றை |
| 305 | ,, | சினம் - கோபம் |
| 306 | ,, | புணையை - மரக்கலத்தை |
| 308 | 60 | நகுதலையும் - சிரித்தலையும் |
| 311 | ,, | மேவாமை - பொருந்தாமை |
| 312 | ,, | வெகுண்டு - கோபித்து |
| ,, | ,, | கோட்பாடு - துணிபு |
| 313 | 61 | உய்வில்லாத - கடத்தல்முடியாத |
| 316 | ,, | உறும் - வரும் |
| 319 | 62 | நுகர்கின்ற - அனுபவிக்கின்ற |
| 320 | ,, | ஒறுக்குமாறு - தண்டிக்கும் விதம் |
| 327 | 63 | கூற்று - எமன் |
| 329 | ,, | தொழிற்புலையர் - தொழிலினால் புலையர் |
| 333 | 64 | அவை - சபை |

உச

## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 334 | 64 | ஈர்வதொருவாளாம் - அறுப்பதொருவாளாகும் |
| 335 | 65 | செறுத்து - அடக்கி |
| ,, | ,, | மீதூர்ந்து - மேலெழுந்து |
| 336 | ,, | யாக்கை - உடம்பு |
| 339 | ,, | சாக்காடு - மரணம் |
| 346 | 67 | நிலையாமை - நிலைபெறுதலின்மை |
| 348 | ,, | தலைப்பட்டார் - அடைந்தார் |
| 356 | 69 | நணித்தாம் - சமீபித்திருப்பதாம் |
| 370 | 72 | ஒரு படிப்பட்டது - ஒரு நிலைமையதாயிருப்பது |
| 376 | 73 | பகுதியல்லாதன - உரிமையாகாத பொருள்களை |
| 381 | 75 | கூழும் - பொருளும் (திரவியமும்) |
| 383 | 76 | மடி - சோம்பல் |
| 384 | ,, | மறத்தில் - வீரத்தில் |

| | | |
|---|---|---|
| 386 | ,, | பண்டாரம் கூறுமாறு - திரவியசாலையிலுள்ள திரவியத்தை வகுக்கும் வகை |
| 387 | ,, | தலையளி - மேலாய கருணை |
| 392 | 77 | எண் - தருக்கம் |
| ,, | ,, | எழுத்து - இலக்கணம் |
| 394 | 78 | கேணி - சிறுகுளம் |
| 395 | ,, | ஏமமாதலை - காவலாதலை |
| 404 | 80 | ஒள்ளியாராயினும் - அறிவுடையாராயினும் |
| 408 | 81 | களர்நிலத்தை - நெல் முதலியன விளைதற்கு உரியதாகாத நிலத்தை |
| 410 | ,, | விலங்கு - மிருகம் |
| 423 | 84 | ஒள்ளிமை - அறிவுடைமை |
| 432 | 85 | நயத்தலும் - விரும்புதலும் |
| 436 | 86 | வியவாதொழிக - நன்கு மதியாதிருக்கக்கடவன் |
| 438 | 87 | எரி - தீ |
| ,, | ,, | வைத்திரள் - வைக்கோலின் கூட்டம் |
| 443 | 88 | கேண்மையை - நட்பினை |
| 445 | ,, | தமராக - சிறந்தவராக |
| 447 | ,, | கழறும் - நெருங்கிக் கண்டித்துப் புத்தி சொல்லும் |
| 461 | 91 | அமாத்தியர் - அமைச்சர் (மந்திரிகள்) |
| 469 | 92 | புரைபடும் - நில்லாதொழியும் |
| 470 | ,, | போக்கு அற - போதலொழிய (முற்றுப்பெற) |



| எண். | பக்கம். | |
|---|---|---|
| 476 | 94 | பீலி - மயிலிறகு |
| ,, | ,, | சகடம் - வண்டி |
| 481 | 95 | கூகை - கோட்டான் என்னும் பறவை |
| 483 | ,, | தகர் - ஆட்டுக்கடா |
| 484 | ,, | கதுமென - விரைவாக |
| 493 | 97 | கண்ணஞ்சாத - பாகர்க்கு அடங்காத |
| ,, | ,, | களிற்றை - ஆண்யானையை |
| ,, | ,, | களரில் - சேற்று நிலத்தில் |
| 494 | ,, | பதியும் - அரணுள்ள நகரும் |
| ,, | ,, | பெருமையும் - பொருளும், படையும் |

499 98 காவாயும் - மரக்கலமும்
504 99 வழிமுறையென்று - தன்வம்சத்தில் பிறந்தவன் என்று
508 100 உயிரச்சமும் - உயிர்க்குவரும் பயமும்
526 103 இளைத்தலுறாத - விருத்தியாதல் நீங்காத
529 104 அமராமைக்கு - பொருந்தாமைக்கு
532 105 குறித்துணரும் - ஆராய்ந்தறியும்
567 106 ஊண் - உணவு
540 ,, உய்க்கும் - செலுத்தும்
541 107 கண்ணோடாது - முகங்கொடாது (தாட்சண்யமில்லாது)
543 ,, ஆறலைப்பார் - வழியில் வருத்துவார்
,, ,, சூறைகொள்வார் - கொள்ளையிடுவோர்
548 108 முறைசெய்தல் - நீதிசெய்தல்
549 ,, வையகம் - உலகம்
550 ,, தாழ்க்குங்காலம் - தாமதித்திருக்குங்காலம்
558 110 அலைததற்றொழில - வருத்துதலாகிய தொழில
569 112 செரு - யுத்தம
,, ,, கடிது - விரைவில்
577 113 பண் - இராகம்
580 114 சுதைமண் - சுண்ணம்பும் மண்ணும் கலந்தரைத்த சாந்து
ஒற்றாடல் ,, ஒற்றர் - வேவுகாரர்
585 115 உதாசினராகியும் - அசட்டை செய்தற்குரியராகியும்
ஊக்க
முடைமை 116 ஓராது - அறியாது
597 117 பாடூன்றும் - (தன்) பெருமையை நிலைநிறுத்தும்
598 ,, அலமரார் - மனஞ்சுழலார்

4



## உரையின் அரும்பதவுரைகள்.

எண். பக்கம்.
601 118 மடித்து - கெடுத்து
610 119 கழறுதல் - இடித்திடித்துக் கட்டுரைகூறல்
620 121 நீட்டியாமல் - தாமதியாமல்
621 122 அடர்க்க - கெடுக்க
622 ,, இன்பமுறுதலை - இன்பம் அடைதலை
624 122 பகடு - எருது
627 123 இலக்கம் - இலக்கு (குறி)

| | | |
|---|---|---|
| அமைச்சியல் | 124 | வாத மண்டபத்தில் - வாத சபையில் |
| ,, | ,, | மறுமண்டலத்திற்கு - அன்னிய தேசத்து அரசர் சபைக்கு |
| 632 | ,, | மாற்றாரால் - பகைவரால் |
| 635 | 125 | மடியின்றி - சோம்பலின்றி |
| 637 | ,, | சீலமும் - ஒழுக்கமும் |
| 639 | ,, | அடைவுபட - முறைமை பொருந்த |
| 642 | 126 | மேவி - விரும்பி |
| 647 | 127 | இணராய் - கொத்தாய் |
| 655 | 128 | பயந்தாள் - பெற்றாள் |
| 656 | 129 | துளக்கமற்ற - அசைவற்ற |
| ,, | ,, | கடியவேண்டும் - நீக்கவேண்டும் |
| 657 | ,, | பீடையை - துன்பத்தை |
| வினைத்திட்பம் | 130 | திண்ணியராதல் - உறுதியுடையராதல் |
| 664 | ,, | உறும் - உண்டாகும் |
| ,, | ,, | ஓரார் - அறியார் |
| 667 | 131 | முற்பாடு - முன்பு |
| ,, | ,, | பிற்பாடு - பின்பு |
| 669 | ,, | காலாய் - சக்கரமாய் |
| 673 | 132 | உளப்பாடு - யதார்த்தநிலைமையினை |
| 674 | ,, | பிணித்தாற்போலும் - கட்டினாற்போலும் |
| 676 | 133 | தாழ்த்து - தாமதித்து |
| 678 | ,, | இயலுமிடமெல்லாம் - கூடுமிடத்தெல்லாம் |
| 679 | ,, | உறையும் - வசிக்கும் |
| தூது | 134 | சந்து - சமாதானம் |
| 686 | 135 | மாற்றத்தை - சொல்லை |
| ,, | ,, | வடுவாகும் - தாழ்வாகும் |
| 695 | 136 | ஒப்பனை - அலங்கரித்துக் கொள்ளுதல் |



| எண். | பக்கம். | |
|---|---|---|
| 697 | 137 | அகலுவதும் - நீங்குவதும் |
| ,, | ,, | அணுகுவதும் - நெருங்குவதும் |
| 702 | 138 | வெகுட்சி - கோபம் |

| | | |
|---|---|---|
| ,, | ,, | கருகியும் - சுருங்கியும் |
| 707 | 139 | மாருநீர் - கடல் |
| 711 | ,, | அவை - சபை |
| 712 | 140 | வாலியசுதை - வெண்சுண்ணச்சாந்து |
| 718 | 141 | புல்லியவர் - கீழ்மக்கள் |
| 719 | ,, | அங்கணத்தின்கண் - சலதாரையில் (அல்லது சேற்றில்) |
| 729 | 142 | மறுமாற்றம் - விடை |
| 731 | 143 | கல்வி - தோண்டி |
| 735 | 144 | பிணியும் - நோயும் |
| ,, | ,, | ஒறுக்கும் - அழிவுசெய்யும் |
| 743 | 146 | கல் - கருங்கல் |
| ,, | ,, | இட்டிகை - செங்கல் |
| 744 | ,, | அட்டாலகமும் - மதிலின்மீது போர் செய்தற் பொருட்டு அமைக்குங் கட்டடமும் |
| ,, | ,, | மதிற்பொறி - (அரணென்னும்) மதிலின்மீது அமைக்கும் யந்திரங்கள் |
| 748 | ,, | கீழறுத்தும் - (பகைவர்) வஞ்சித்து மாறுபடுத்தியும் |
| 750 | 147 | நலிந்தவரையும் - தோற்றவரையும் |
| 751 | ,, | பெருமிதத்தை - கர்வத்தை |
| 754 | 148 | ஆயத்தால் - சங்கத்தால் (சங்கச்சாவடியால்) |
| 759 | 149 | ஆணை - கட்டளை |
| 761 | ,, | காவான் - போர்வீரர் |
| ,, | ,, | இடுக்கண் - துன்பம் |
| 763 | 150 | மறமும் - வீரமும் |
| 764 | ,, | தாரை - தூசிப்படையை (முன்னணிச்சேனையை) |
| 766 | ,, | ஊறு - துன்பம் |
| 767 | ,, | காகளம் - எக்காளமென்னும் ஊதுகுழல் |
| 768 | 151 | உயிர்த்த - மூச்சுவிட்ட |
| 771 | ,, | செறுக்கப்பட்டாராயினும் - கோபிக்கப்பட்டாராயினும் |
| 772 | ,, | படைக்கலம் - ஆயுதம் |
| 773 | 152 | பட - சாக |
| 777 | ,, | விழுமிய - சிறந்த |



உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 779 | 153 | வஞ்சினம் - சபதம் |

| | | |
|---|---|---|
| 780 | ,, | ஆண்டவரது - ஆண்ட அரசரது |
| ,, | ,, | நீர்மல்குமாறு - நீர்பெருகுமாறு |
| ,, | ,, | சாக்காடு - மரணம் |
| நட்பு | ,, | இணைநலன் - உற்றவரது நன்மை |
| 783 | 154 | நகுதல் - சிரித்தல் |
| 784 | ,, | உடை - ஆடை |
| 785 | ,, | ஐயுறவின்றி - சந்தேகமில்லாமல் |
| 790 | 155 | உழப்பது - அனுபவிப்பது |
| 797 | 156 | சிறுகுமவற்றை - சுருங்குதற்குக் காரணமாகிய தொழில்களை |
| 801 | 157 | அறுத்தலில்லாத - விலக்குதலில்லாத |
| 811 | 159 | நெறிப்பட - ஒழுங்கமைய |
| 816 | 160 | அழுக்காறுடையார் - பொறாமையுடையார் |
| 817 | ,, | மன்றின்கண் - சபையின்கண் |
| 819 | ,, | காலபுருடர் - சமயம்நோக்கி நட்புச் செய்பவர் |
| கூடாநட்பு | 161 | நள்ளாது - சிநேகியாது |
| 822 | ,, | நக்கு - சிரித்து |
| 827 | 162 | கொலைக்கருவி - கொலைசெய்யும் ஆயுதம |
| ,, | ,, | ஒத்தார்போல - மனம் ஒத்திருப்பவர்போல |
| 828 | ,, | பட்டடை - (உலைக்களத்திலுள்ள) பணை |
| 832 | 163 | காதன்மை - விருப்பம் |
| 834 | ,, | ஈரமின்மையும் - அன்பின்மையும் |
| 846 | 166 | ஈட்டின - தேடின (சம்பாதித்த) |
| 849 | ,, | மறைப்பொருளை - இரகசியப்பொருளை . |
| 850 | ,, | இடர்ப்படுத்தும் இடர்ப்பாடு - வருத்தும் வருத்தம் |
| 855 | 167 | கணித்து - விரைவில் உளதாம் |
| 859 | 168 | எய்தும் - அடையும் |
| 862 | 169 | ஒளி - புகழ் |
| 863 | ,, | செறுவார்க்கு - பகைப்பவர்க்கு |
| 866 | ,, | மாற்றார்க்கு - பகைவர்க்கு |
| ,, | ,, | ஏமமாதலை - துணையாதலை |
| 871 | 171 | அறுதியாக - நிச்சயமாக |
| 875 | ,, | பித்து - பித்தம் (பைத்தியம்) |
| 879 | 172 | களைக - பிடுங்கியெறிக |
| 881 | ,, | புறம்பு - வெளியில் |

## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 885 | 173 | பொரப்படவே - கெடுக்கப்படவே |
| 887 | 174 | குடிலகத்தே - குடிசையினுள்ளே |
| 890 | ,, | தன் ஒன்றினார்மாட்டு - தனக்கு உள்ளாயினாரிடத்து |
| ,, | ,, | ஒன்றாமை - பகைமை |
| 894 | 175 | சுற்றனையரும் - நல்ல புதல்வரும் |
| 898 | ·176 | இற்று - கெட்டு |
| 909 | 178 | பேணாது - விரும்பாது |
| ,, | ,, | நாணிலை - நாணுதலை |
| 911 | ,, | கணிகையர் - பொதுமகளிர் (பரத்தையர்) |
| 913 | ,, | முயக்கம் - தழுவுதல் |
| 915 | 179 | மதிநலத்தாலே - மனத்தெளிவாலே |
| 919 | ,, | கயவர் - கீழ்மக்கள் |
| 920 | 180 | கவர்த்த - பிளவு (இரண்டு)பட்ட |
| 924 | ,, | தோற்றமும் - சிறந்துவிளங்குதலும் |
| 935 | 182 | சூது கழகத்தின்கண்ணே - சூதாடுமிடத்திலே |
| 938 | 183 | உழக்குந்தோறும் - அனுபவிக்குந்தோறும் |
| 940 | ,, | நெத்தம் - சூதுவிளையாடும் பலகை |
| மருந்து | ,, | யாக்கை - உடம்பு |
| 941 | 184 | அற்றமை - சீரணித்தமை |
| 946 | , | இணைவிழைச்சும் - காமப்புணர்ச்சியும் |
| 953 | 186 | அற்றம் - மறைக்கவேண்டிய இடம் |
| 959 | 187 | மதி - சந்திரன் |
| ,, | ,, | மறு - களங்கம் |
| மானம் | ,, | இளி வரவு - இழிவு வருதல் |
| 971 | 189 | ஏற்றச்சுருக்கத்தினாலே - உயர்வு இழிவுகளாலே |
| 981 | 191 | சால்பாகிய நிலை - (நற்குணங்கள் பலவற்றாலும்) நிறைத லாகிய நிலை |
| 1002 | 194 | பொருளீட்டுதலை - பொருள் சம்பாதித்தலை |
| 1003 | . | நுகராதாயின் - அனுபவியாதாயின் |
| 1009 | 195 | சிறுதுனியால் - சிறிதாய வறுமையால் |
| ,, | ,, | மாரி - மேகம் |
| 1016 | 197 | நலத்தினைச்சுடும் - (பிறப்பு, கல்வி, குடி, செயல்முதலிய வற்றாலுண்டாய) நன்மையினைக் கெடுக்கும் |
| 1025 | 198 | கொள்கலமாம் - பாத்திரமாம் |

1030 199 கவியம் - கோடரி

௧0

## உரையின் அருஞ்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 1032 | 200 | கஃசாக உணக்குவனாயின் - காற்பலமாம்படி காயவிடுவானாயின் |
| 1034 | ,, | புலந்த - வெறுத்த |
| ,, | ,, | புலந்துவிடும் - வெறுத்துவிடும். |
| 1039 | 201 | பெருமிதத்தினால் - செருக்கினால் |
| 1040 | ,, | சோம்பி - சோம்பலடைந்து |
| 1041 | 202 | நல்குரவு - வறுமை |
| 1042 | ,, | நுகர்ச்சி - (இன்பத்தை) அனுபவித்தல் |
| 1046 | 203 | இரப்பிடும்பையுள் - வறுமையால் உண்டாய துன்பத்துள் |
| 1047 | ,, | நெருநற்றும் - நேற்றும் |
| 1054 | 204 | மரப்பாவை - மரப்பொம்மை |
| 1055 | 205 | உதாசனித்தலும் - அசட்டை செய்தலும் |
| 1056 | ,, | கரத்தலை - (தமக்குள்ள பொருளை) மறைத்தலை |
| 1057 | ,, | கரப்பிடும்பை - (உள்ளதை) ஒளித்தலாகிய நோய் |
| 1058 | ,, | கரப்பிலாத - ஒளித்தலில்லாத |
| ,, | ,, | ஒப்புரவறிவார் - உபகாரஞ் செய்தலை யறிவார் |
| 1059 | ,, | கரவாதார்மாட்டு - ஒளித்தல் இல்லாதாரிடத்து |
| 1065 | 206 | வன்பாயிருப்பது - வலிமையுடையதா யிருப்பது |
| 1064 | 207 | அரணில்லாத தோணி - காவலில்லாத மரக்கலம் |
| 1069 | ,, | அட்டபுற்கையாயினும் - சமைத்த கூழாயினும் |
| ,, | ,, | தாளாண்மையால் - முயற்சியால் |
| 1073 | 208 | திருவுடையர் - நன்மையுடையவர் |
| ,, | ,, | கவற்சி - கவலை |
| 1076 | 209 | அறையும் - அடிக்கப்படும |
| ,, | ,, | பறை - வாத்திய வகையுள் ஒன்று |
| ,, | ,, | மறைகளை - இரகசியங்களை |
| 1078 | ,, | தங்கதுப்பினை - தமது கன்னத்தை |
| 1082 | 212 | கூற்றின்வடிவு - யமன்வடிவு |
| 1084 | ,, | முறிவு - வளைவு |
| 1085 | ,, | கிட்டாதாரும் - பகைவரும் |

,, ,, உட்கும் - அஞ்சும்
1086 ,, வெருவுதலால் - அஞ்சுதலால்
,, ,, மடவரலே - மடமை (யௌவனப்பருவம்) வரப் பெற்றவளே
1086 212 அதனைக்கோடி - அக்கண்ணை வளைத்து
,, ,, அஃது - அக்கண்



எண். பக்கம்.
1086 212 அதனை - அப்புருவத்தை
1087 213 பிணையை - பெண்மானை
1088 ,, படாம் போலும் - ஆடையை யொக்கும்
,, ,, படா - சாய்தலில்லாத
1090 ,, அடப்பட்ட நறவு - காய்ச்சப்பட்டமது
1091 ,, உண் - மையுண்ட (பூசிய)
1098 215 செறுதலில்லாதார் - பகைத்தலில்லாதவர்
1100 ,, சார்தலுறுகின்ற - புணர்தலைசெய்கின்ற
1101 ,, இவ்வணியிழையால் - இவ்வழகிய ஆபரணத்தை
அணிந்தவளால்
1102 216 உயிர்த்தும் - மோந்தும்
,, ,, உற்றும் - தீண்டியும்
1103 ,, மாமை - பொன்
1108 217 சார்ந்தோறும் - புணருந்தோறும்
1109 ,, இடையறக்கப்படாத - நடுவே நீக்கப்படாத
1110 ,, ஊடுதலும் - பிணங்குதலும்
1112 218 குறையிடை - (முன்) குறைந்த இடம்
1113 ,, காதலிக்கப்படுதி - விரும்பப்படுவாய்
1118 219 அனைந்தாள் - சூடினள்
,, ,, நுசுப்பிற்கு - இடைக்கு
1119 ,, மேனி நிறம்
,, ,, முறுவல் - பல்
,, ,, வேயொத்த - மூங்கிலை யொத்த
,, ,, எயிறும் - பல்லும்

| | | |
|---|---|---|
| 1120 | ,, | அன்னத்தின் தூவியும் - அன்னப்பறவையின் சிறகும் |
| 1122 | 220 | நுதலினையுடையாட்கு - நெற்றியையுடையவளுக்கு |
| 1125 | ,, | ஒள்ளமர்க்கண்ணாள் - ஒளியமைந்த போரைச செய்யும் கண்களையுடையவள் |
| 1126 | 220 | எதிலராய் - அன்பில்லாதவராய் |
| ,, | 221 | இயற்பழித்த - நிந்தித்துக்கூறிய |
| 1127 | ,, | பருவருத்திருப்பதும் - துன்பமுற்றிருப்பதும் |
| 1128 | ,, | காணத்து உறவு - மனத்தில் உறவாயிருத்தல் |
| 1129 | ,, | மெய்ப்பாடு - புறத்துக்கண்டதோர் பொருள் காரணமாக நெஞ்சின்கண் தோன்றிய விகாரத்தின் விளைவு |
| 1131 | 222 | ஏமமாவது - பற்றுக்கோடாவது |

கூஉ

## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 1131 | 222 | மடல் - பனைமடலால் செய்த குதிரை |
| 1134 | ,, | மறுகின்கண்ணே - தெருவினிடத்தே |
| 1138 | 223 | மன்றின்கண் - சபையினிடத்து |
| ,, | ,, | அம்பல் - சிலரறிந்து தம்முள் இரகசியமாய்ப் பேசிக் கொள்ளுதல் |
| ,, | ,, | அலர் - பலரறிந்து வெளிப்படையாகச் சொல்லுதல் |
| 1141 | 224 | திங்களை - சந்திரனை |
| 1148 | 225 | அலர்தலை - மேல் மேல் மிகுதலை |
| ,, | ,, | பொலிவழியும் - சுருங்கிக்கெடும் |
| பிரிவாற்று | 226 | ஆற்றுமை - பொறுமை (சகியாமை) |
| 1152 | ,, | இறையை - தங்குமிடத்தை |
| 1158 | 227 | வன்கண்மையை - அருளில்லாமையை |
| 1164 | 229 | ஏமமாகிய புணை - காப்பாகிய மரக்கலம் |
| 1167 | ,, | அளித்தாய் - அன்புடையதாய் |
| ,, | ,, | பிற்றைஞான்று - பின்னாள் (மறுநாள்) |
| 1170 | 230 | காத்தண்டாக - காவடித் தண்டாக |
| ,, | ,, | தூங்காநின்றன - தொங்குகின்றன |
| 1172 | ,, | கலுழ்கின்றது - அழுகின்றது |
| 1177 | 231 | உழந்து உழந்து - அனுபவித்து அனுபவித்து |
| ,, | ,, | அறுவனவாக - வற்றிப்போவனவாக |
| 1178 | ,, | உயல் ஆற்றுத - பிழைத்தல் முடியாத |

,, ,, உய்வில்லாத - ஒழிதலில்லாத
1181 232 பசந்தாளென - நிறம்வேறுபட்டாள் என்று
1182 ,, கொண்கன் - தலைவன்
1183 233 முயங்கிக்கொண்டு - தழுவிக்கொண்டு
,, ,, புடைபெயர்ந்தனன் - சிறிதுவிலகினன்
,, ,, செறிந்தது - நிறைந்தது
,, ,, பசலை - நிறவேறுபாடு
1188 234 வெருட்சி - அச்சம்
1192 ,, பரவில்லாததோர் - விதையில்லாததொரு
1193 235 உறாதார்க்கு - பொருந்தாதார்க்கு
1195 ,, காவினது - காவடியினது
1198 236 கொண்டான்காயில் - கணவன் கோபித்தால்
1199 ,, வன்கண்மையுடையார் - தைரிய முடையவர்
1202 ,, உளராகாநின்றார் - இருக்கின்றார்



எண். பக்கம்.
1206 237 சீரியன உள்ளிப்பூரியன மறத்தல் - மேன்மை தருவன
வற்றை நினைத்துக் கீழ்மைதருவனவற்றை மறத்தல்
1209 238 வெகுளார் - கோபியார்
1211 ,, உய்தலுண்மையை - (காமநோய்க்குத்தப்பிப்)
பிழைத்திருத்தலை
1223 241 ஆயன் - இடையன்
1224 ,, பண்பின்மையை - குணமில்லாமையை
1225 ,, மாலையாலடர்ப்புண்ட - மாலைக்காலத்தாலே
வருத்தப்படுத்தப்பட்ட
1226 242 புன்கண்மையை - ஒளியிழத்தலை
,, ,, கேளிரைப்போல - துணைவரைப்போல
,, ,, வன்கண்மையை - இரக்கமில்லாமையை
,, ,, தன்னுட்கையா றெய்திடுகிளவி- தன்னுட்கையாற்றினை (தன்
மனத்தில் செயலற்றிருத்தலை) ஏதிலது (சம்பந்தமில்லா
தது) ஒன்றன்மேலிட்டுச சொல்லுஞ்சொல்.
1227 ,, முகிழ்முகிழ்த்து - பேர் அரும்பாய் முதிர்ந்து
1228 ,, கொலைக்களத்து - கொலைசெய்யும் இடத்தில்
1229 ,, என்மதி - என்புத்தி

| | | |
|---|---|---|
| ,, | ,, | இப்பதியெல்லாம் - இவ்வூர் எல்லாம் |
| 1230 | ,, | புன்மை-ஒளியிழத்தல் |
| உறுப்பு-ல் | 243 | நலனழிந்தமை - அழகு அழிந்தமை |
| 1231 | ,, | நெடுநெறிக்கண் - மிகு தூரதேயத்தில் |
| ,, | ,, | நறுவிய - நறுமணமுடைய |
| 1236 | 244 | பண்டுபோல் - முன்புபோல் |
| ,, | ,, | இறுகாது - அழுத்தமாகாமல் |
| 1238 | ,, | ஊடறுத்தலானே - ஊடுருவிச் செல்லுதலாலே |
| 1240 | ,, | ஒள்ளிய நுதல் - ஒளிபொருந்திய நெற்றி |
| 1242 | 245 | கவினொழிய - அழகொழிய |
| 1245 | 246 | கலப்பை - கூடுகை |
| ,, | ,, | பொய்க்காய்வு காயாநின்றாய் - பொய்க்கோபஞ் செய்கின்றாய் |
| 1248 | ,, | நலியாநின்றன - வருத்துகின்றன |
| 1250 | ,, | எவ்வநோயை - ஒருவகையானும் தீராமையாகிய நோயை |
| ,, | ,, | சிலகூற்றென்று - சில சொல்லென்று |
| 1253 | 247 | நிறை - நிலை (மனவுறுதி) |
| 1254 | ,, | மழு - கோடரி |

5



## உரையின் அரும்பதவுரைகள்.

| எண். | பக்கம். | |
|---|---|---|
| 1258 | 248 | நிணத்தை - கொழுப்பை |
| 1259 | ,, | புலப்பலென - பிணங்கக்கடவேனென்று |
| 1261 | 249 | பருகுவேன் - (நலவாகிய அமிர்தத்தை இந்திரியங்கள் ஐந்தாலும்) நுகருவேன் (அனுபவிப்பேன்) |
| 1262 | ,, | இடையீடு - தடை |
| 1264 | ,, | புல்லென்றன - நுண்ணிய பொருள்களைக் காணமாட்டாவாயின |
| 1267 | 250 | கச்சாது - விரும்பாது |
| 1270 | 251 | இலங்கிய இழையையுடையவளே - விளங்கிய ஆபரணத்தையுடையவளே |
| ,, | ,, | அணிகலங்களையும் - ஆபரணங்களையும் |
| 1271 | ,, | மொட்டின் முகிழ்ப்பின்கண் - அரும்பினது முகிழ்ப்பினுள் (முகிழ்ப்பு - முதிர்ச்சியால் உப்புதல்) |
| ,, | ,, | சேட்படுத்தியபோது - விலகச்செய்தபோது |

1272 „ குறை நயப்பித்தவழி - (தலைவனது) குறைகளை விரும்பி ஏற்குமாறு செய்தவிடத்து
„ „ செவ்வியுள் - சமயத்துள்
1273 „ கோவைப்பட்ட - கோக்கப்பட்ட
1275 252 புரிவுடைத்து - தன்மையுடையது
1284 254 ஈர்ப்ப - இழுப்ப
„ „ புனலுள் - வெள்ளத்துள்
1290 255 முன்னுறுபுணர்ச்சி - இயற்கைப்புணர்ச்சி
1293 256 இகழலாயிருக்க - நிந்தித்தலாயிருக்க
„ „ வல்லுகின்றதில்லை - வலிமையுடையதாகின்றதில்லை
1296 „ கலிவதாக - துன்பஞ்செயவதாக
1300 257 செற்றம் - கோபம்
1301 „ புலத்தல்வேண்டும் - பிணங்குதல்வேண்டும்
„ „ வாயில - கூட்டுதல்
1303 258 புலவி - சிறுபிணக்கு
1304 „ புலக்க - பிணங்க
1306 „ உணராது - ஊடுதல் நீங்காது
„ „ துனி - பெரும்பிணக்கு
„ „ உணர - ஊடுதல் நீங்க
1307 „ காமக்கிழத்தியரை - பரத்தையரை (பொதுமகளிரை)

## உரையின் அரும்பதவுரைகள். 

எண். பக்கம்.
1308 259 உணரப்புலவியின் வாராவூடற்கண் உணர்த்துதற்கு இடம் வாராத பிணக்கில (உணர்த்துதற்கு - தணிப்பசெய்வதற்கு)
„ „ அகம்புக்க - சயனக்கிருகத்தின் சென்ற
1314 260 உள்ளினமையை - நினைத்தமையை
1315 „ ஒண்குழைமையை - பொருந்தாமையை
1316 „ காயும் - கோபியாநிற்பள்
„ „ ஒப்பனைப்பூ - அழகாக அமைத்த பூச்செண்டு
1328 263 புலந்தவிடத்து - பிணங்கிய விடத்து
1330 „ புத்தேள் உலகம் - தேவர் உலகம்.
286 56 கள்வாரை - களவுசெய்பவரை
457 90 காண முதலான - பொன், மணி, நெல முதலான (காணம் - பொன்.)

உரையின் அரும்பதவுரைகள் முற்றுப்பெற்றன.

---

---

## அச்சில்.

ஆசிரியர் கோ வடிவேலு செட்டியார் அவர்களா லியற்றப்பட்டவை

| | | |
|---|---|---|
| 1 | உபநிடதம் - உரையுடன் | 0 8 |
| 2. | சிவஞானபோத தத்துவார்த்த வுரை | 0 12 |
| 3. | வேதாந்த சூளாமணி - வசனம் (வினாவிடை) பதவுரையுடன் | 1 4 |

# இலக்கண விளக்கம்.

---

செய்யுள் பக்கம்.
எண்.

15 4 ஓரறிவுயிர் - புல், மரம் முதலியன. "புன்மர முதலவுற் றறிவுமோ ரறிவுயிர்" நன்னூல் - சொல் - உரி - சூ - 4.

112 23 இருபொருட் பொதுமொழி - ஒன்றாய் நின்று ஒருபொருளைத் தந்தும், தன்னுள் தொடர்ந்துநின்று பல பொருளைத் தந்தும், இவ்விரண்டற்கும் பொதுவாய் நிற்கும் மொழியாம். அஃதாவது இதுதான் பொருளென்னும் உறுதியின்மையை உணர்த்துஞ் சொல்லாம்.

306 59 காரணக்குறி - உறுப்பாற்றலால் பொருளை யுணர்த்துஞ் சொல்லாம்; அது காரணக் குறிப்பெயராம். இங்குச் சேர்ந்தாரைக்கொல்லி என்பதன்கண் சேர்ந்தார் என்னும் உறுப்பும், கொல்லி என்னும் உறுப்பும் இருத்தலறிக.

குறிப்பறிதல் 137 இறந்தது காத்தல் என்னுந் தந்திரயுத்தி - முற்காலத்து வழங்கிய தொன்று பிற்காலத்து வழங்காமற் போயின்; அதனைத் தழுவிக் கொள்ளுதலென்னும் நூல் யுத்தியாம். இதற்குப பிறிது பொருள் உரைப்பாருமுளர். தந்திரயுத்தி

யாவது இன்னதென்பதை,
" நூற்பொருள் வழக்கொடு வாய்ப்பக் காட்டி
யேற்புழி யறிந்திதற் கிவ்வகை யாமெனத்
தகும்வகை செலுத்துத றந்திர வுத்தி "
என்று நன்னூல் சூத்திரம் கூறுவதாலுணர்க.

855 167 நிரனிறை-வரிசையாகச் சொல்லப்பட்ட சொற்பொருள்களுக்குச் சம்பந்தமுள்ள சொற்களை அம்முறையே அமைத்தல்.
'இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து'.
இதில் என்பவன் தவலும், வாழ்க்கை கெடலும் எனவருதல் நிரனிறையாம்.

1043 202 தொல் - ஆகுபெயர்.
தொல் - (தொன்மை என்னும்) பண்புப்பெயர் அதனையுடைய குடியை யுணர்த்துதலின், பண்பாகு பெயராம்.



| செய்யுள் எண். | பக்கம். | |
|---|---|---|

குடி இங்குக்குணி யென்னும் பொருளாம். (தொன்மை - பழைமை.)

1154 226 தன்மையைப் படர்க்கை போற்கூறினர் - தேறியேமுக்கு (தெளிந்த எமக்கு) வென்னும் தன்மையைத் தேறியார்க்கு எனப் படர்க்கைபோல் கூறினர்; இங்ஙனம் கூறுதல் தன்மையில் படர்க்கை வந்த வழுவமைதியாம். இதுவே தன்னைப் பிறன்போல் கூறுதலென்னும் நாந்தியாம்.

1211 239 மன் - ஒழியிசையின்கண் வந்தது.
மன் என்னும் இடைச்சொல் 'என்று உறங்குகின்றதில்லையே' என்னும் ஒழியிசையின்கண் (ஒழிந்த சொற்பொருளில்) வந்தது

1233 243 கருவியைக் கருத்தாவாகக் கூறினர்.
தோளால் என்னும் கருவியைத் தோள் (அறிவிப்பபோலும்) எனக்கருத்தாவாகக் கூறினர். தோளால் எனக்கருவியாகக் கூறுமிடத்து அறிவிப்பபோலும் என்பது அறியலாம் எனவரும். இது கண்காணும் என்பது போல்வதாம்.

புரிவி நுணுக்கம் 259 சொல்லெச்சம் – செய்யுளிலாவது வாக்கியத்திலாவது ஒரு சொற்கு முன்னாவது பின்னாவது (யாதாவதொரு) சொல மாத்திரம் குறைந்து நிற்பதாம்.
குறிப்பெச்சம் – குறிப்பினால் பொருளையுணர்த்துஞ் சொல்லாம். அஃது ஆகுபெயர், அன்மொழித் தொகை, முதற் குறிப்பு முதலியனவாம்.

---

# மேற்கோள் விளக்கம்.

2. 1. "கற்பக் கழிமட மஃகும்" நான்மணிக்கடிகை 28
(இ - ள்.) கற்ப - (ஒருவன் அறிவு நூலைக்) கற்பானாயின், கழிமடம் - (அவனது) மிகுந்த அறியாமை, அஃகும்-குறையும்.

401. 79. "புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" நாலடியார் பேன்மக்கள் அதிகாரம் 5.
(இ - ள்) புல்லா எழுத்தின் - இலக்கணத்தின் அமைவு பொருந்தாத, பொருளில் - பொருள் விசேடமில்லாத, வறுங்கோட்டி - பயனற்ற சபை.

# பிழை திருத்தம்.

---

| பக்கம். | வரி. | பிழை |
|---|---|---|
| 9 | 30 | தென்றற்கு |
| 14 | 38 | பொருள்கள் |

| | | |
|---|---|---|
| | | பெறுதல் ; |
| | 34 | பயன்படுவ தொழிந்த |
| 16 | 32 | உரியராக |
| | 33 | சங்கமாகிய |
| 19 | 26 | லொருவற |
| 42 | 3 | அஃறு |
| 45 | 27 | தேவருலகம் |
| 49 | 14 | பொருளிதனை |
| 52 | 2 | ளொளிவிடுங் |
| 75 | 19 | படைசூடி |
| 83 | 7 | பதையறியும் |
| 91 | 11 | சோராதொழுகும் |
| 95 | 19 | வருவளவுங் |
| 105 | 17 | கெழுமைய |
| 125 | 8 | மாட்சியைப் |
| 128 | 26 | துணியப்பட்டதென்று |
| 130 | 23 | தின்மை |
| 147 | 29 | றீதின்றீ |

| | | |
|---|---|---|
| 150 | 11 | முந்திச்செய்ய |
| 151 | 22 | தமமரச |
| 162 | 15 | ணெறிதற்குப் |
| | 24 | பகவரை |
| | 29 | வந்துவிடத்து |
| 166 | 19 | நலகுரவாக |
| 169 | 28 | குண்ணிலனாய்க் |
| 174 | 9 | நல்லராகர் |
| 211 | 3 | முன்றும் |

திருத்தம்.

தென்னூர்க்கு
பொருள்களும்
பெறுதல்
பயன்படுவது ; ஒழிந்த
உரிமையாக
கங்கமாகிய
லொருவற்
அஃது
தேவருலகம்
பொருளினை
லொளிவிடுங்
படைகுடி

பத்தையறியும்
சோராதொழுகும்
வருமளவுங்
கெழுமையு
மாட்சிமைப்
துணியப்பட்டதென்று
இன்மை
நீதின்றி
முந்திச்செல்ல
தம்மாச
னெறிதற்குப்
பகைவரை
வந்தவிடத்து
நல்குரவாக
குணனிலனாய்க்
கல்லராகார்
மூன்றும்

## பிழை திருத்தம். ரு.கூ

| | | | |
|---|---|---|---|
| | 4 | விரும்ப | விதும்ப |
| 226 | 13 | பிறைபிறைவா | பிறைபிறவா |
| 228 | 28 | நாணமாக நின்றது | நாணமாகாநின்றது |
| 236 | 8 | பாயின் | யாயின் |
| 245 | 20 | பபனில்லை | பயனில்லை |
| 253 | 7 | நின்னுண்கனே | நின்னுண்கண்களே |
| 257 | 29 | ஆகார்மாட்டுப் | அவர்மாட்டுப் |

## திருவள்ளுவமாலை முதலியவற்றின் பிழை திருத்தம்.

| | | | |
|---|---|---|---|
| 1 | 18 | திருமலர்போனம் | திருமலர்போன்ம் |
| 5 | 9 | துய | தூய |
| 22 | 32 | ,, ,, | 216 42 |

| | | | |
|---|---|---|---|
| 27 | 8 | வாலியகதை | வாலியசுதை |
| 29 | 34 | குடி | குணம் |

---

# புத்தக விளம்பரம்.

---

## திருக்குறள்

பரிமேலழகருரை இங்கிலீஷ் மொழிபெயர்ப்புடன். திருத்தமான 2-வது பதிப்பு. ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களா லியற்றப்பட்ட தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரையுடன் கூடியது-2-வால்யம்-கலிக்கோ ரூபாய் எட்டு.

| | ரூ. | அ. |
|---|---|---|
| கைவல்ய நவநீத வசனம் (வினு விடை). ஆசிரியர்-கோ. வடிவேலு செட்டியார் அவர்களால் இயற்றப்பட்டது;விசேஷ விரிவுரையுடன் கூடியது. கலிக்கோ பைண்டு. | 2 | 8 |
| திருக்குறள் - மணக்குடவருரையுடன். | 2 | 0 |
| பகவத்கீதை வசனம்-ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியார் அவர்களால் விரிவான விசேஷ உரையுடன் இயற்றப்பட்டது. | 1 | 12 |
| சசிவன்னபோதம் பதவுரையுடன்-ஆசிரியர் கோ. வடிவலு செட்டியார் அவர்களாலியற்றப்பட்ட விசேஷ விரிவுரையுடன் கூடியது. | 0 | 12 |
| நாகா ஜீவ வாதக் கட்டளை விரிவுரையுடன்-திருத்தமான 4-வது பதிப்பு. | 0 | 5 |
| மகாராஜா துறவு - வசனம்; ஷெ. செட்டியாரவர்களா லியற்றப்பட்டது. | 0 | 3 |
| கட்டளைச் சங்கை நிராகரணம் | 0 | 6 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| சிவப்பிரகாசப் பெருந்திரட்டு (குறுந்திரட்டுடன்) - இது சொரூபானந்தரால் திரட்டப்பட்டது | 3 | 0 |
| வேதாந்த சாராமிருதமும் அத்துவித ரசமஞ்சரி மூலமும் - உரையும். | 0 | 6 |
| தருக்காமிர்தமும் - பிரஸ்தான பேதமும். | 0 | 8 |
| வாதாங்க நிகைஷவிதி 300, வாதவைத்திய விளக்கம் 200, மதிவெண்பா 100. | 1 | 0 |
| தேரையர் கரிசலை, யூகிமுனி கரிசலை, கல்கண்டு சூத்திரம் | 0 | 12 |
| புனிதவதி - காரைக்கா லம்மையார் சரித்திரம். | 0 | 2 |

அத்வைதார்த்தப் பிரகாசிகை என்னும் சங்காத் துவேஷியாரின் வாய்ப்

| | ரூ. | அ. |
|---|---|---|
| பூட்டு. | 0 | 6 |
| சுக்லயஜுர்வேதத்திலுள்ள மண்டலப்பிராஹ்மணோபநிஷத்தும் ராஜ யோக பாஷ்யமும். | 0 | 4 |
| வேதாந்த டிண்டிமம் – (வேதாந்தப்பேரிகை). | 0 | 4 |
| தோடகமென்னும் வேதசார சமுத்தாரணம். | 0 | 4 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| சர்வதரிசன சங்கிரகம். | 2 | 8 |
| சுவாமி விவேகாநந்தர் ராஜயோகம் | 1 | 0 |
| விசாரசாகரம். | 2 | 0 |
| ரிபுகீதைத் திரட்டு. | 1 | 0 |
| தருக்கபரிபாஷை. | 1 | 0 |
| மெய்ஞ்ஞான போதம். | 0 | 12 |
| திருவாசகம். | 0 | 12 |
| சூதசம்ஹிதை சாராம்ச வசனம் | 1 | 4 |
| விவேக சூடாமணி மூலம். | 0 | 12 |
| வேதாந்த பரிபாஷை. | 0 | 10 |
| சித்தாந்த பிந்து | 0 | 8 |
| வியாச தாத்பர்ய நிர்ணயம். | 0 | 8 |
| நைஷ்கர்ம்ய சித்தி. | 0 | 8 |
| சுவாராஜ்ய சித்தி. | 0 | 8 |
| பாகவதத் திரட்டு. | 0 | 6 |
| வியாசபோதினி. | 0 | 6 |
| வியாசபோதினிஇரண்டாம்பாகம். | 0 | 6 |
| அறிவாநந்த சித்தியார். | 0 | 4 |
| கதாசரித்சாகரம் – முதற்பாகம். | 1 | 4 |
| மேற்படி இரண்டாம் பாகம் | 1 | 0 |
| வேதாந்தசஞ்ஞா. | 0 | 2 |
| பஞ்சதசப்பிரகரணம் – மூலம். | 0 | 10 |
| பாட்டியற் கொத்து. | 0 | 6 |
| வேதாந்த சாரம். | 0 | 10 |
| தேசிங்குராஜன். | 0 | 8 |
| சச்சிதாநந்த சிவம் | 0 | 14 |
| கல்யாணி | 0 | 12 |
| அற்புதராமாயணம் | 0 | 10 |
| ஞான தரிசனி | 0 | 10 |
| தத்துவதரிசனி | 0 | 10 |
| பகவத்கீதைமூலம் பாக்கெட் | 0 | 6 |
| வேதாந்த சூளாமணி | 0 | $2\frac{1}{2}$ |
| கைவல்யம் மூலம் | 0 | 3 |
| ராமோதந்தம் | 0 | 2 |
| பிரஹ்மாநந்த லஹரி | 0 | 1 |
| காரியசித்தியின் இரகசியம் | 0 | 3 |
| மநிஷா பஞ்சகம் | 0 | 5 |
| நடராஜ தத்துவம் | 0 | 8 |
| அகஸ்தியர் – நயனவிதி | 1 | 12 |
| அகஸ்தியர் இரணவைத்தியம் | 0 | 12 |
| பவளத்தீவு | 1 | 8 |

அம்பா விலாச புத்தகசாலை,

கோமளேசுவரன்பேட்டை, சென்னை.